# கல்கி

KALKI
8.6.2003
ரூ.6.00

தினந்தோறும்
தேனிலவு!
-இலவச இணைப்பு



உயிர போய் வந்தது!

-அரசு ஆஸ்பத்திரி அவலம்!

திருச்சூர்
தேவதை!

# Steelwin®

## THE RECLINER CHAIR

# முழுமையான சுகம்

## உங்கள் விரல் முனையில்




Imagine being able to do all this on one chair! Steelwin's amazing Recliner can change from chair to hammock to bed and everything in between, in a trice, at a gentle flick of the elegant arms rest. That's the Recliner. A chair that changes to suit your need.

**CHENNAI : Siva Sakthi Industries,** 100, Menambedu Road, Sidco Industrial Estate, Ambattur, Chennai - 98. Ph: 2623 3957, 2624 8333. **Triveni & Co.** 5, Raja Street, T. Nagar, Chennai - 17. Ph: 2436 0111.

**DEALERS:** • **Purasawalkam :** ○ Sakthivel Enterprises, Ph: 26433556, ○ Choice Decors, Ph:26422841 • **Annanagar :** ○ National Furnitures, Ph:26212666 ○ Carrefour, Ph: 26210933. • **Kilpauk :** ○ Seating World, Ph : 26444005 • **Annasalai :** ○ Imperial Furniture Co., Ph:24349644 • **Teynampet:** ○ Kapsons, Ph:24339986. • **Nungambakkam :** ○ Mahmayi Office & Home Furniture (P) Ltd. Ph: 28251533 • **Royapettah High Road :** ○ Jaya Bharatham Furniture & Appliances (P) Ltd., Ph: 26[illegible]1384. ○ Sathya Furniture World, Ph: 24983929. • **T.Nagar :** ○ Muthu Furniture, Ph: 24344193, ○ New [illegible]d House Foams & Furnishers, Ph: 28150337. ○ Gunaa Marketing, Ph: 24340083. ○ Kuttys Wood Crafts, Ph: 24833967. ○ Anush Furnitures, Ph: 24338021 • **Vadapalani:** ○ Palve, Ph: 24840812 • **Kodambakkam:** ○ Furn World, Ph: 24806687 • **Aminjikarai:** ○ Selection Mega Shop, Ph:26263179 • **Thiruvanmiyur :** ○ Punyas Agencies, Ph:24481520 • **Velachery :** ○ Maruthi Decors, Cell:98400 82784 • **Nanganallur :** ○ Balasubramanian & Co., Ph:22332425 • **Thiruvottiur:** ○ Comfort Foams & Furnishers, Ph:3103 6225 • **Padi:** ○ Sathya Furniture World, Ph:26545029. • **Tambaram :** ○ K.Dhasthagir & Bros, Ph:22376464

**Bangalore: Steelwin,** 131, Davatha Plaza, Residency Road, Bangalore - 560 025. Ph:080 - 2210541, 2221866

Also available at all reputed furniture showrooms throughout South India.

உள்ளே...



24 யாரிந்தப் பூக்கள்?



17 நிஜ ஹீரோயின்

88 கவர் ஸ்டோரி

கல்கி

8.6.2003

# 'குவை' தீவில்

'சிவகாமியின் சபதம்' கதைக் களத்துக்கு வந்துவிட்ட மாதிரி இருக்கிறது அந்த இடம். ஓயாத உளி சப்தம். எழுபத்தைந்து சிற்பிகள் கற்களில் கவிதை எழுதிக் கொண்டிருக்கிறார்கள். காலை ஏழரை மணியிலிருந்து மாலை ஆறு மணி வரை தொடர்கிறது இந்த உளி ஓசை!

''இன்னைக்கு நேற்றா, இது பத்து வருஷமா நடந்திட்டிருக்கு. இங்கே உருவாக்கப்படற தூண்களும், சிற்பங்களும் கப்பல் ஏறி, கடல் கடந்து போகப் போகுது குவை (Kauai) தீவுக்கு!'' என்றார் ஒரு சிற்பி.

பெங்களூரிலிருந்து பதினெட்டு கிலோமீட்டர் தூரத்திலுள்ள ஒரு சிற்பக்கூடத்தில்தான் இந்த ஓசைகள்!

அது சரி, 'குவை' தீவா? அதெங்க இருக்கு?

பசிபிக் பெருங்கடலின் மத்தியில் இருக்கும் ஹவாய் தீவுகளுள் பழைமையும், இயற்கை எழிலும் கொண்ட ஒரு தீவுதான் குவை! எழுபத்தைந்து கோடி ரூபாய் செலவில் இங்கு கோயில் கட்ட, ஒரு மெகா திட்டம் தீட்டியிருக்கிறார்கள்.







* தயாராகும் தூண்கள்

''இவ்வளவு செலவில், குவை தீவில் கோவில் கட்டுவது யார்?''

குவை தீவில் ஓர் ஆதீனம் இருக்கிறது. சத்குரு சிவாய சுப்ரமணிய சுவாமி என்பவரால் துவக்கப்பட்டது குவை ஆதீனம். சுவாமி அமெரிக்காவிலிருந்தபோது அவர் கனவில் இயற்கை எழில் சூழ்ந்த மலைப் பகுதியொன்றில், சிவபெருமான் அமர்ந்திருப்பதுபோல ஒரு காட்சியைக் கண்டாராம்! அதன்படி, அப்படிப்பட்ட ஒரு ரம்மியமான இடத்தில் சிவன் கோவில் கட்ட முடிவு செய்ய, கனவில் கண்ட இடம் போலவே குவை தீவு இருப்பது கண்டு குவையில் ஆதீனத்தைத் துவக்கினார். தம் கனவை நனவாக்க, சன்மார்க்க வழிகாட்டும் 'இறைவன்' கோவில் திட்டம் அவர் மனத்தில் உதயமானது. உடனடியாக தமிழகத்தைச் சேர்ந்த கணபதி ஸ்தபதியுடன் தொடர்பு கொண்டு, கோவில் குறித்த எண்ணங்களைப் பகிர்ந்து கொண்டார். இதுவே, இறைவன் கோவிலுக்குப் பிள்ளையார் சுழி. பிறகு, நாலு லட்சம் டாலர் செலவில் இடம் வாங்கி, அங்கே புனித ருத்திராட்ச மரங்களை நட்டு, பின் படிப்படியாகத் திட்டமிட்டு வேலைகள் நடந்து வருகின்றன. சுப்பிரமணிய சுவாமி இரண்டு வருடங்களுக்கு முன் காலமாகிவிட, தற்போதைய ஆதீனகர்த்தாவான சத்குரு யோகிநாத



* 'இறைவன்' மாதிரி கோயில்





* சிவாய சுப்பிரமணிய சுவாமி

வேலன் இதைக் கவனித்து வருகிறார்.

கோவில் பற்றிய தகவல்களை உலகெங்கும் உள்ள ஆன்மிக அன்பர்களுக்குத் தெரிவித்திருக்கிறார்கள். பண உதவிக்காக நன்கொடை குவியத் தொடங்கியது. இன்னும் தொடர்ந்து கொண்டு இருக்கிறது. பலர், மாதம் நூறு, டாலர், இருநூறு டாலர் என்று நிர்ணயித்துக் கொண்டு தொடர்ந்து அனுப்பிக் கொண்டிருக்கிறார்களாம்.

"கற்களில் உளியைக் கொண்டு செதுக்கித்தான் சிற்பங்களையும், தூண்களையும் உருவாக்க வேண்டும். எந்தவிதமான இயந்திரங்களையும் பயன்படுத்தக் கூடாது.

# இறைவன்!

பாரம்பரிய சிற்ப சாஸ்திரத்திலிருந்து எள்ளளவும் வழுவக் கூடாது" என்பதில் சத்குரு யோகிநாத வேலன் சுவாமி மிகவும் உறுதியாக இருக்கிறார்.

குவை தீவு, உலக அளவில் சுற்றுலாப் பயணிகளைக் கவரும் ஓர் இடம். அங்கே நிலவும் இயற்கை எழில், பல ஹாலிவுட்காரர்களைப் படம் எடுக்கத் தூண்டியுள்ளது. இந்து மதம் குறித்துத் தெரிந்தவர்கள் 'இறைவன்' கோவில் பணிகளைப் பார்த்துப் பூரித்துப் போகிறார்கள். தெரியாதவர்கள் பிரமித்துப் போகிறார்களாம்.

"கோவில் முழுமை பெற இன்னும் ஏழு ஆண்டுகள் ஆகும்" என்கிறார் சிற்பி ஒருவர்.

— பாரதி




# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் : கி.ராஜேந்திரன்

கல்கி பில்டிங்க்ஸ், 47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 97

ஆசிரியர் : சீதா ரவி

ஆசிரியர் குழு : செ. ஏக்நாத் ராஜ், அனுராதா சேகர், ஆர்.சி. ஜெயந்தன்

வடிவமைப்பு : எஸ். ஸ்டீஃபன், பி.ஆர். ராஜன்

தொலைபேசி : 22345622, 23, 24

தொலைநகல் : 044 - 22345621

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு : kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு : subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு : info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி : www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.330/-
ஆறு மாதம் : ரூ.165/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 62 யு.எஸ். டாலர்
இலங்கை : ரூ.2000/-

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 097.

ஒவ்வொரு இதழும் உங்கள் மேன்மைக்கு



# ஆராதனை

**பணமா? பண்பாடா? என்ற மில்லியன் டாலர் போராட்ட மினி சித்திரம்...**

**சொக்கலிங்கம் :**

வயது : 49

பதவி : பெருமான் கோயில் நிர்வாகக் குழுத் தலைவர் (பெரனியல் ஸிஸ்டம்ஸ் முதன்மை அதிகாரி)

விரும்புவது : டாலர் சம்பளம்

ஆராதிப்பது : (பெருமாளுக்கு அடுத்த படியாக) இந்திய கலாசாரம்

பலம் : சொல்லிக் கொள்ளும்படி எதுவுமில்லை

பலவீனம் : மனைவி காந்திமதி

**காந்திமதி :**

வயது : நாற்பத்தி... ப்சு, கொஞ்சம்தான்!

பதவி : பெரனியல் ஸிஸ்டம்ஸ் முதன்மை அதிகாரியுடைய முதன்மை அதிகாரி

விரும்புவது : பெரனியல் பதவி

ஆராதிப்பது : கணவனின் டாலர் சம்பளம்

பலம் : இமைகளுக்குப் பின்னே காத்திருக்கும் திடீர் நயாகரா

பலவீனம் : கர்னாடக சங்கீதம்

**ப்ருத்வி :**

வயது : 26

பதவி : அம்மாவின் மகன்; போனால் போகிறதென்று மேயோ ஃபுட்ஸ் மார்க்கெட்டிங் வைஸ் பிரசிடெண்ட்.

விரும்புவது : சமீப காலமாக கல்யாணத்தை

ஆராதிப்பது : பாட்டு பாடவும் புடைவை



இன்னும் நிறைய அறிவிப்புகள் உண்டாப்பா..?

உடுத்தவும் தெரிந்த கற்பனைக் காரிகையை
பலம் : ஆறடி உயர அழகான உருவம்
பலவீனம் : வாழைக்காய் வறுவல்

**நவநீதா :**
வயது : 21
பதவி : சீனியர் வைஸ் பிரெஸிடண்ட் சன்ஷைன் இன்ஷுரன்ஸ்






விரும்புவது : உடன் பணியாற்றும் ஜெர்ரி பிரவுன்
ஆராதிப்பது : ஜெர்ரி பிரவுன்
பலம் : ஜெர்ரி பிரவுன்
பலவீனம் : அப்படின்னா....?

## ...சிரிக்கச் சிரிக்கச் சொல்பவர் :
# சீதா ரவி

அதெல்லாம்
அப்ப்போ வரும்.
வெயிட்
பண்ணுங்க!



**விரைவில்...**



# அமரர் கல்கி நினைவு
# இளமைச் சிறுகதைப் போட்டி-2003

**படைப்பாளிகளே, வாசக எழுத்தாளர்களே! நீங்கள் அனைவரும் ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் சிறுகதைப் போட்டி வந்தே விட்டது!**

**முதல் பரிசு – ரூ.10,000 இரண்டாம் பரிசு – ரூ. 7,500**
**மூன்றாம் பரிசு – ரூ.5000**

தவிர, பிரசுரத்துக்குத் தேர்வாகும் ஒவ்வொரு கதையும் ரூ.500 சன்மானம் பெறும். அறிமுக எழுத்தாளர் எனில், வழக்கம் போல் போனஸ் உண்டு! எழுதுபவர், முப்பத்தைந்து வயதுக்குட்பட்டவராக இருந்தால் கூடுதல் போனஸ்! மற்ற நிபந்தனைகள் வழக்கமானவை.

கதை இளைஞர்களை மையப்படுத்தி எழுதப்பட வேண்டும் என்பது முதல் நிபந்தனை.

***விதிமுறைகள்:***

- கல்கியில் 4 பக்கங்களுக்கு மிகாமல் இருப்பது நல்லது.
- சொந்தக் கற்பனைதான் என்பதற்கு உறுதிமொழிக் கடிதம் வேண்டும். அது இல்லாத கதைகள் பரிசீலிக்கப்படமாட்டா.
- அறிமுக எழுத்தாளர் எனில், இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லையென்றும் போட்டி முடிவு வெளியாகும் வரை எழுதுவதில்லை என்றும் உறுதிமொழி தர வேண்டும்.
- படைப்பாளி முப்பத்தைந்து வயதுக்குட்பட்டவராயின் ஏதாவதொரு அத்தாட்சி (உ-ம்: பத்தாம் வகுப்பு டி.சி.ஜெராக்ஸ்) கண்டிப்பாக இணைக்கப்பட வேண்டும்.
- முழு வெள்ளைத் தாளில் ஒரு பக்கத்தில் மட்டுமே எழுத வேண்டும்.
- தேர்வாகாத கதைகளைத் திரும்பப் பெற, போதிய தபால் தலைகள் ஒட்டிய அஞ்சல் உறை இணைக்கப்பட வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.
- ஒருவரே எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.
- பரிசுக்குரிய கதைகளை நடுவர் குழு பரிசீலித்துத் தேர்ந்தெடுக்கும். சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியரின் தீர்ப்பே இறுதியானது.
- முடிவு வெளியாகும் வரை, எவ்வித கடிதப் போக்குவரத்தோ, தொலைபேசி விசாரிப்புகளோ கூடாது.



- **'அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி – 2003'** என்று உறையின் மேல் தவறாமல் குறிப்பிட்டு, அனுப்ப வேண்டிய முகவரி:

**ஆசிரியர், கல்கி, கல்கி பில்டிங்ஸ், 47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097.**

- கதைகள் வந்து சேரக் கடைசித் தேதி : ஜூன் 15
- போட்டி முடிவும் முதல் பரிசுக் கதையும் ஆகஸ்ட் 3 ஆண்டு மலரில் வெளியாகும்.

***படைப்பாளிகள், வாசக எழுத்தாளர்கள் அனைவரும் உற்சாகத்துடன் கலந்து கொண்டு சிறப்பிக்க அழைக்கிறோம்.***

– ஆசிரியர்

# பீதியில் மக்கள்

• மைதீன் கான்

வாக்கிங் போவது அரசியல்வாதிகளைப் பொறுத்தமட்டில் மிகவும் ரிஸ்க்கான விஷயமாகி விட்டது.

சென்னையைச் சேர்ந்த தி.மு.க. பிரமுகர் அவர். காலையில் மெரினாவிலோ அல்லது நாகேஸ்வர ராவ் பூங்காவிலோ 'வாக்கிங்' போகும் பழக்கமுள்ள அவர் இப்போது நிறுத்திவிட்டார். Tread mill வாங்கி வீட்டிலேயே உடற்பயிற்சியைத் துவக்கிவிட்டார்.

வன்முறையை ஏவி விட வாக்கிங் தனிமை, நல்ல வாய்ப்பைக் கொடுத்து விடுகிறது என்கிறார் அந்தப் பிரமுகர்.

வாக்கிங் போன எம்.கே. பாலன் காணாமல் போய் கொலை செய்யப்பட்டதாக வழக்கு நடக்கிறது. மதுரையில் தா.கிருஷ்ணன், கொலையும் வாக்கிங் போகும்போதே, நடந்திருக்கிறது.

தென் சென்னையைச் சேர்ந்த ஆளும் கட்சிப் பிரமுகர் ஒருவர் வெளியே புறப்படும் முன், தம் சிறிய ஜெர்மன் ரிவால்வரை இடுப்பில் செருகிக் கொள்ளத் தவறுவதில்லை. மத்திய சென்னையைச் சேர்ந்த ஒரு காங்கிரஸ் பிரமுகரின் குவாலிஸில் கார்பெட்டுக்குக் கீழே உருட்டுக்கட்டைகள் எப்போதும் இருக்கின்றன. தாங்கள் தாக்கப்படுவோமோ என்ற பயம் காரணமாகவே பின்புலமாக கிரிமினல்களையும் ரவுடிகளையும் அரசியல்வாதிகள் வளர்த்து வருகிறார்கள் என்ற குற்றச்சாட்டும் இருக்கிறது.

அரசியலில் மட்டுமின்றி பொதுவாகவே

# வெட்டுக் குத்தில் தமிழகம்!

'கொலை' என்பது தமிழ்நாட்டில் சர்வ சாதாரணமான விஷயமாகிவிட்டது. மே மாதத்தில் மட்டும் (26ம் தேதிவரை) தமிழகத்தில் தினம் ஒரு கொலை நடந்திருக்கிறது.

இந்த வன்முறை கலாசாரத்துக்கு உரம் போட்டு வளர்ப்பவர் யார்? அரசியல் வாதிகளா? கிரிமினல்களா? அரசியல் வாதிகளுக்கும் ரவுடிகளுக்கும் 'இணைப்பு' எங்கே உண்டாகிறது?

"இந்த வன்முறை கலாசாரம் அரசியல்வாதிகள், ரவுடிகள், போலீஸ் ஆகியோரின் கூட்டுக் கலவைதான்'' என்கிறார் சென்னையைச் சேர்ந்த காங்கிரஸ் பிரமுகர் ஒருவர். (பெயர் வேண்டாமே!) இவர் அரசியல் நடத்தும் பகுதியில் எப்போதும் எதற்கும் தயாராக இருக்க வேண்டும்.

''சட்ட விரோதமான காரியங்களில் ரவுடிகள் ஈடுபடும்போது, போலீஸில் மாட்டிக் கொண்டால், அதிகாரத்தில் உள்ள அரசியல்வாதி உதவி செய்கிறான். காலப்போக்கில் காவல் துறைக்கும் ரவுடிகளுக்கும் நெருக்கம் ஏற்பட்டு விடுகிறது. நமது சட்டத்தில் உள்ள ஓட்டைகளே 'தாதா'க்களும் ரவுடிகளும் வளர்வதற்குக் காரணம்" என்கிறார் அவர். 'உட்கட்சிப் பூசலில் எதிரணிப் பிரமுகரைப் பயமுறுத்த, எதிர்த்துக் கோஷம் போட அடியாட்களைப் பயன் படுத்திக் கொள்வதுண்டு' என்றும் சொல்கிறார் அவர்.

ஒரு பெரிய போலீஸ் அதிகாரி, தமது வீட்டில் குடியிருந்த அரசியல், ஜாதி சங்க பிரமுகரைக் காலி செய்ய மற்றொரு 'தாதா'வான ஜாதிச் சங்க பிரமுகரைப் பயன்படுத்தியிருக்கிறார்.

ஓய்வு பெற்ற பெரிய போலீஸ் அதிகாரி ஒருவரின் மகனை கடன் கொடுத்தவர்கள் கடத்திக் கொண்டு போய்விட்டார்கள். அவர் உடனே நாடியது ஒரு 'தாதா'வின் உதவியைத் தான்! இப்படி போலீஸ்காரர்களே 'தாதா'க்களின் உதவியை நாடும்போது சாமானியர்கள், பணம் படைத்தவர்கள் அப்படிச் செய்வதில் வியப்பில்லை.



''தாதாக்களையும், ரவுடிகளையும் வளர்ப்பதில், ஊக்குவிப்பதில் காவல் துறைக்குப் பெரும்பங்கு இருக்கிறது" என்கிறார் காங்கிரஸ் ஜனநாயகப் பேரவையின் பிரமுகரும், சட்டமன்ற உறுப்பினருமான புரசை ரங்கநாதன். "உண்மையான சேவை செய்பவர்களை மக்கள் மதிப்பது கிடையாது. ஆர்ப்பாட்ட, அராஜக, அடாவடி அரசியலைத் தான் மக்கள் விரும்புகிறார்கள். கூட்டத்தைச் சேர்க்கும் திறமை இல்லாவிட்டால், அந்தக்

கட்சியின் தலைமை உங்களை 'செல்வாக்கற்றவர்'' என்று எடை போட்டுவிடும்'' என்கிறார் ரங்கனாதன். இவரைப் பற்றி போஸ்டர்களில் போடும்போது 'தளபதி' என்று போடுகிறார்கள். அது பற்றிக் கேட்டால் சிரிக்கிறார் ரங்கனாதன். ''அப்படிப் போஸ்டர்களில் போட்டால் நான் மிகவும் மகிழ்ந்து போவேன் என்பதற்காகப் போடுகிறார்கள். நான் எந்தப் போர்க்களத்துக்குச் சென்று வந்தேன்?

''எந்த அடியாளையும் கூட வைத்துக் கொள்வதில்லை. இன்று நகரத்தில் உள்ள ரவுடிகளை வரிசையாக உங்கள் முன் அணிவகுக்கச் சொல்கிறேன். அவர்களைக் கேட்டுப் பாருங்கள். அவர்கள் சட்டவிரோதமான காரியங்களில் தொடர்ந்து ஈடுபட யார் காரணம் என்பது புரிய வரும்'' என்கிறார் ரங்கனாதன்.

றோரின் சொந்த இடம் இது.

சமீபத்தில் நடந்த சாத்தான் குளம் இடைத் தேர்தலில் வெங்கடேச பண்ணையார் என்பவரைப் பற்றி பரபரப்பாக பேச்சு அடிபட்டது. ஜெயிலிலிருந்து ஜாமீனில் விடுதலையான அவர், ஆளும் கட்சிக்கு ஆதரவாக வெளிப்படையாக வேலை செய்தார். இனி இவர் 'தாதா' தனம், கட்டைப் பஞ்சாயத்து செய்தால் காவல்துறை எப்படித் தட்டிக் கேட்கும்? ''ஜாதிச் சங்கப் பிரமுகர்களை சில அரசியல் கட்சிகள் பயன்படுத்திக் கொண்டு, அவர்களை வளர்த்து விடும்போது, ஒரு வன்முறைக் கூட்டம் உருவாகிவிடுகிறது'' என்கிறார் பாளையங்கோட்டை தி.மு.க. சட்டமன்ற உறுப்பினர் மைதீன்கான்.



* வைகுந்த்

தமிழ்நாட்டில் வட சென்னையை வன்முறை கலாசாரத் தொட்டில் என்று சொல்லலாம். தொழிற்சாலைகள் நிறைந்த பகுதியாதலால் தொழிலாளர்களின் நியாயமான போராட்டங்களை அடக்க ஏவிவிடப்படும் வன்முறைகள், தொழிற்சங்க போட்டிகளால் ஏற்படும் மோதல்கள், அரசியல் காழ்ப்புணர்ச்சி, வியாபார, தொழில் போட்டிக் கொலைகள் இங்கே சகஜம். ம.தி.மு.க.வைச் சேர்ந்த ஏழுமலை, சிவா, அ.தி.மு.க.வைச் சேர்ந்த பாக்ஸர் வடிவேலு ஆகியோரது கொலைகள் எழுப்பிய சலசலப்பு அடங்க நீண்ட காலமானது. இங்கே வன்முறைக்குத் தூபம் போட, சில ஜாதிச் சங்கப் பிரமுகர்களே உதவியாக இருக்கிறார்கள் என்பது காவல் துறையின் கணிப்பு.

* செ.கு. தமிழரசன்

* அன்பழகனார்

''சென்னையில் ஏதாவது தப்புத் தண்டா செய்துவிட்டு, தமிழகத்தின் தெற்கே போய் பதுங்கிக் கொள்கிறார்கள். குறிப்பாக நெல்லையில் அரசியல் செய்வது என்பது மிகவும் ஆபத்தான ஒன்று. ஜான் பாண்டியன், கராத்தே செல்வின் (இப்போது இறந்துவிட்டார்) பசுபதி பாண்டியன் போன்

''ஒரு தனிப்பட்ட நபரையோ, அல்லது கும்பலையோ வைத்து ஒட்டு மொத்த இனத்தையே குற்றம் சாட்டக் கூடாது'' என்கிறார் தமிழ்நாடு மீனவர் பேரவையின் நிறுவனர் தலைவரான இரா. அன்பழகனார். 'மீனவர்கள் ரொம்பவும் உணர்ச்சி பூர்வமானவர்கள். அவர்களை அறிவு வழிக்கு, அன்பு வழிக்கு, அமைதி வழிக்குத் திருப்புவதற்காகவே எங்கள் இயக்கம் பாடுபட்டு வருகிறது. இதில் நாங்கள் ஓரளவுக்கு வெற்றியும் பெற்றுள்ளோம். அரசியல்வாதிகளின் சூழ்ச்சிகளுக்குப் பலியாக வேண்டாம் என்று எல்லா குப்பங்களிலும் எடுத்துச் சொல்கிறோம். என்ன செய்வது? 1967க்கு முன் மக்களுக்காக தலைவர்கள் இருந்தார்கள். இப்போது தலைவர்களுக்காக மக்கள் உருவாகிறார்கள்'' என்கிறார் அன்பழகனார்.

ரவுடிகளையும் தாதாக்களையும் வளர்ப்பதில் காவல் துறைக்கும் பங்கிருப்பதாகச்

சொல்லப்படும் குற்றச்சாட்டை மறுக்கிறார் ஓய்வு பெற்ற காவல் துறைத் தலைவர் வைகுந்த்.

''சுயநலத்துக்காக அரசியல்வாதியை அணுகும் காவல் துறையினர் பொறியில் மாட்டிக் கொள்கிறார்கள். காவல் நிலையத்தில் மேஜையின் மீது கால்போட்டு மரியாதைக் குறைவாகப் பேசிய அரசியல் வாதியை 'உள்ளே தள்ளிய இன்ஸ்பெக்டரும் உண்டு. இதனால் பிரச்னைகள் வந்தபோது, வசதியான அந்த இன்ஸ்பெக்டர் பதவியை ராஜினாமா செய்து விட்டுப் போய்விட்டார். பாதிப்புகளை எதிர் கொள்ள மிகுந்த நெஞ்சுரம் தேவை. எல்லா அரசியல்வாதிகளும், எல்லா போலீஸ்காரர்களும் மோசமானவர்கள் அல்ல. அண்ணா முதல்வரான போது, அவரை முன்பு கைது செய்த ஒரு காவல் துறை அதிகாரிக்குப் பதவி உயர்வு கொடுக்கக் கூடாது என்று 'கட்சியில் சிலர் சொன்னார்கள் . 'அது அரசியல். இது நிர்வாகம்' என்று சொன்னவர் அண்ணா. கீழ்மட்ட போலீஸ்காரர்கள் கிரிமினல்களுடன் கூட்டணி வைத்துக் கொள்கிறார்கள் என்பதையும் ஒப்புக் கொள்ள முடியாது. பச்சைத் தண்ணீர் கூடக் குடிக்காமல் குற்றப் புலனாய்வும், சட்டம் ஒழுங்கு பணியையும் மேற்கொள்ளும் போலீஸ்காரர்கள் நிறைய உள்ளனர்'' என்கிறார் வைகுந்த்.

''பிரிக்க முடியாத அளவுக்கு அரசியல்வாதிகளும், வன்முறையும் இரண்டறக் கலந்துவிட்டதுதான் இன்றைய நிஜம்'' என்கிறார் இந்தியக் குடியரசுக் கட்சியின் தேசியப் பொதுச் செயலாளரும், சட்டமன்ற உறுப்பினருமான செ.கு. தமிழரசன்.

"வன்முறையை எதிர்த்து ஒழிப்பது என்பது இப்போதுள்ள நிலையில் அரசியல் வாதிகளால் முடியாத காரியம். ஆனால் ஆபத்தான போக்கு என்னவென்றால், வன்முறைக்கு ஆதரவளிக்கும் விதமாக மௌனம் சாதிக்கும் நிலைக்கு அரசியல் வாதிகள் தள்ளப்பட்டிருக்கிறார்கள்'' என்கிறார் தமிழரசன்.

- ப்ரியன்

படங்கள் : ராஜன்

---

# தகர்ந்து போன தி.மு.க.

அண்ணாதுரையின் பெயரைச் சொல்லவோ, அவரால் தோற்றுவிக்கப்பட்ட கட்சியென்று பெருமை பேசவோ, திராவிட முன்னேற்றக் கழகம் அடியோடு தகுதியற்றுப் போய் விட்டது.

கடந்த சில ஆண்டுகளாக, அக் கட்சி அரசியல் ரீதியாகப் பின்னடைவு எய்தியிருப்பதைக் கூட ஏற்றுக் கொள்ளலாம். அரசியலில் வெற்றி - தோல்விகள் மாறி மாறித்தான் வரும் என்று சமாதானம் கொள்ளலாம்.

ஆனால், சமீபத்திய துர்ச்சம்பவங்களால் அக் கட்சி அமைப்பு ரீதியாக அடியோடு தகர்ந்து போயிருப்பது, தமிழகத்தின் அரசியல் எதிர்காலத்தையே பாதிக்கக்கூடியது.

கிருட்டிணன் கொலை வழக்கு தி.மு.கவின் எதிர் காலத்தை இருட்டடிப்பு செய்திருக்கிறது. இந் நிலையில், கட்சித் தலைவர் மு.க. தமது கட்சியைப் பிளக்க ஆட்சியாளர்கள் சதி செய்கிறார்கள் என்று குற்றம் சாட்டுவதும் அதை இளையதளபதி ஸ்டாலின் வழிமொழிவதும்




கல்கி



2003 ஜூன் 8
சுபானு வைகாசி 25
மலர் : 61
இதழ் : 45


தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.




நகைப்புக்கிடமான செயல்கள். பொது மக்களின் ஆதரவையோ அனுதாபத்தையோ இதன் மூலம் தி.மு.க. எள்ளளவும் பெற்று விட முடியாது. கட்சியின் அடிமட்டத் தொண்டர்களின் ஒத்துழைப்பையும் இதுபோன்ற நொண்டிக் காரணங்கள் கூறிப் பெற முடியாது. தி.மு.க.வுக்குள் ஏற்கெனவே இருந்து வந்த பிளவும் பூசல்களும் மேலும் வலுப்பெறுமேயொழிய, ஸ்டாலினுக்கும் அழகிரிக்கும் பிணக்கு தீர்ந்தது என்று யாரும் நம்ப மாட்டார்கள்.

கட்சியைக் காப்பாற்றும் எண்ணம் உண்மையிலேயே இருந்திருப்பின், கிருட்டிணன் கொலை சம்பவம் நிகழ்ந்த கையோடு கருணாநிதி ராஜினாமா செய்திருக்க வேண்டும். அந்த அதிர்ச்சி வைத்தியம் தி.மு.கவுக்கு நல்ல சிகிச்சையாக அமைந்திருக்கும். தமது குடும்பத்து உறுப்பினர் யாரும் முக்கிய தலைமைப் பொறுப்பில் நீடிக்கலாகாது என்ற கட்டுப்பாட்டையும் விதித்து, ஸ்டாலினின் ராஜினாமாவையும் அவர் கோரிப் பெற்றிருக்கலாம்.

உடனடியாக தற்காலிக நியமனத் தலைவரை அமர்த்தி, கட்சித் தேர்தல்களை முறைப்படி நடத்தி, அமைப்பு ரீதியாக தி.மு.க. இன்னும் பலமிழக்கவில்லை என நிரூபித்திருக்க முடியும்.

ஆனால், நடப்பது என்ன...?

கட்சித் தேர்தல்களில், 'கருத்து ஒற்றுமை' திணிக்கப்பட்டு, தலைமை விரும்புகிற நபர்களே கட்சிப் பொறுப்புகளுக்கு 'ஏகமனதாக'த் தேர்வு

செய்யப்படுகின்றனர். இப்படிப்பட்ட தேர்தலுக்குப் பிறகு, அடிமட்டத் தொண்டர்களுக்கு என்ன உற்சாகம் இருக்கும்? பிளவுபட்டுக் கிடப்பதால் ஏற்கெனவே பலவீனமாகியிருக்கும் தி.மு.க., இந்தக் கண் துடைப்புக் கட்சித் தேர்தல்களால் அடியோடு கலகலத்துப் போய் விட்டது.

இனி சட்டமன்றத் தேர்தல்கள் வந்தால், அ.தி.மு.கவை எதிர்த்துக் களமிறங்க தமிழகத்தில் பலமான எதிர்க்கட்சி என்பதே இல்லை. ஏற்கெனவே பெரும்பான்மை பலத்துடன் யதேச்சாதிகார ஆட்சி நடத்தி வரும் ஜெயலலிதா, மீண்டும் மாபெரும் வெற்றி பெற்று ஆட்சிக்குத் திரும்ப, தி.மு.கவே சிவப்புக் கம்பளம் விரித்து விட்டது!

மக்களாட்சியில், வாக்காளர்களின் விவேகத்தைப் பொறுத்துத்தான் அரசு அமையும் என்பது சரிதான். ஆனால் வாக்காளர்கள் தேர்ந்தெடுப்பதற்கு மாற்றுக் கட்சியே இல்லாது போய்விடும் அபாயத்தை எதிர்நோக்குகிறது தமிழகம்.

ஜனநாயகப் பண்புகளையும் தமிழகத்தின் எதிர்காலத்தையும் காப்பாற்ற வேண்டுமானால், கருணாநிதி இப்போதாவது அதிரடியாகச் செயல்பட வேண்டும். அவரது திட்டமிட்டச் செயல்பாடு தி.மு.கவையும் காப்பாற்ற உதவும்.

"பற்றுக்களைப் பற்றிக் கொண்டு விடாதவர்களை, துன்பங்களும் விடாமல் பற்றிக் கொண்டு விடுகின்றன..." என்று திருக்குறளுக்கு உரை எழுதியவர், தாம் எழுதியதையே மறக்கலாமா?



# பார்த்திபன் கனவு

கசாப்புக் கதைகளின் மத்தியில் ரசிகர்களை நம்பி, அழகியலோடு ஒரு படம் தந்திருக்கிறார்கள். அறிமுக இயக்குனர் கரு. பழனியப்பன். தயாரிப்பாளர் சத்தியஜோதி தியாகராஜன். மானசீகமாய்க் காதலித்துக் கொண்டிருந்த பெண்ணே, எதிர்பாராமல் மனைவியாகிவிட்டால், அதைவிடப் பெரிய சந்தோஷம் ஆணுக்கு வேறில்லை. கதாநாயகன் பார்த்திபனுக்கும் இந்தக் கனவு நனவாகிறது. ஆனால் தோற்றத்தில் ஒன்று போலிருக்கும் தனது மனைவி, காதலி அல்ல என்று தெரியவர, நிறைவேறியது ஸ்வீட் டிரீம் அல்ல 'நைட்மேர்' என்பதுபோல் அதிர்ந்து போகும் நாயகன், புது மனைவியிடம் ஒட்ட மறுக்கிறார். எதிர்பாராமல் காதலியும் நாயகனின் காம்ப்ளக்ஸுக்குக் குடி வர நேரும்போது... கடவுளே! இரட்டை வேட மெலோடிராமாவைக் காட்டி இயக்குனர் எரிச்சலூட்டப் போகிறார் என்று மெல்ல நெளிந்தால், யதார்த்தமும், உளவியல் பாங்கும் துளிகூட சிதைந்து விடாமல் ஒவ்வொரு பாத்திரமும் இயல்பாய் முன்னேற, நாயர் கடை பாய்லர் மாதிரி, படம் ஜில்லென்று சூடு பிடிக்கிறது.

இரண்டு சினேகாக்களும் ஒட்டிப் பிறந்து, பிறகு வெட்டிப் பிரிந்த இரட்டைகள் என்று 'பாட்டி வடை சுட்ட' ரேஞ்சுக்குக் கீழிறங்காத இயக்குனரை முதலில் பாராட்ட வேண்டும். மனைவிக்கு, காதலியின் தோற்றம் மட்டும் போதாது, அவளைப் போன்ற மனசும் வேண்டும் என்ற எதிர்பார்ப்பு மதிக்கத்தக்கதுதான் என்றாலும், எடுத்த எடுப்பிலேயே மனைவியை வெறுப்பது, கொஞ்சமல்ல, நிறையவே இடிக்கிறது.

ஆக்ஷன் இமேஜ் பற்றிய காய்ச்சலோடு அலைந்து கொண்டிருக்கும் ஹீரோக்களுக்கு மத்தியில், தலையைப் படியச் சீவி, கண்களில் சோடா புட்டி கண்ணாடி அணிந்து, அடக்கமான மிடில் கிளாஸ் பையனாக இயல்பாய்ச் செய்திருக்கிறார் ஸ்ரீகாந்த்.

ஸ்ரீகாந்தை விடவும் கிடைத்த வாய்ப்பை உடும்பு மாதிரி பற்றிக் கொண்டு, மாடர்ன் சினேகா, ஹோம்லி சினேகாவாக அசத்தலாய் வித்தியாசம் காட்டி நடித்திருக்கும் உழைப்புக்குத் தலை வணங்கலாம்.

'கவிதைகளுக்கு அற்புதமாய் மெட்டுப் போட நானிருக்கிறேன்' என்று துணிச்சலாய் முயலும் வித்யாசாகரின் இசையில், யுகபாரதியின் 'கனாக் கண்டேன் தோழி' அபாரமான அட்டெம்ப்ட்.

திரைக்கதை கொஞ்சம் தத்துகிறது என்றாலும், கிளைமாக்ஸுக்கு முன்பாக ஒரே திருப்பத்தை இருமுறை பயன்படுத்துவதில் வெற்றி கண்டிருக்கும் இயக்குனராக, வசனகர்த்தாவாக, கரு. பழனியப்பன் ஜெயித்திருக்கிறார்.

பாத்திரங்களைக் கையாண்ட விதத்தில் ரசிகன் நெருக்கமாய் உணரும் உயிரோட்டமுள்ள கனவு.

- விஷுவல்தாசன்

● அபவ் அவரெஜ்





# நிஜ ஹீரோயின்!

தட்சிணை கேட்டவனுக்குத் தண்டனையளித்து விட்டு அமைதியாக இருக்கிறார் நிஷா சர்மா, கடந்த பதினைந்து நாட்களாக. கல்யாணத்துக்காக கையில் போடப்பட்ட மருதாணி இன்னும் அழியவில்லை. உதட்டில் இலேசான புன்னகை. "ஏதும் வருத்தமா?"

''இதுல வருத்தப்பட என்ன இருக்கு? அன்பை விசிறியடிச்சுட்டுப் பணத்தை மட்டுமே எதிர்பார்த்த முனிஷ் தலால் குடும்பத்துலயிருந்து தப்பிச்சிருக்கேன். நான் அன்னைக்குப் போலீஸ்க்குப் போகாம 'காம்ப்ரமைஸ்' பண்ணி கல்யாணம் பண்ணியிருந்தேன்னா, இன்னைக்கு என் வாழ்க்கை நரகம்தானே? இப்ப என்னைக் கல்யாணம் பண்ணிக்க பெரிய 'கியூ' இருக்கு! மூணு நாள்ல மட்டும் ஐம்பது பேர் முன் வந்திருக்காங்க. ஆனா முதல்ல என் படிப்பு முடியட்டும்'' என்கிறார் டெல்லியைச் சேர்ந்த இந்த இருபத்தியோரு வயது சாஃப்ட்வேர் என்ஜினீயரிங் மாணவி.

''எனக்கு எல்லா பக்கமிருந்தும் நிறைய ஆதரவு. குறிப்பா மீடியாவைச் சொல்லணும். கல்யாண ஏற்பாடுகளுக்கு மட்டும் பதினெட்டு லட்ச ரூபாயை அப்பா செலவு பண்ணியிருக்கார். ரெண்டு செட் ரெப்ரிஜிரேட்டர், ஏ.சி.கள், மைக்ரோவேவ் ஓவன்கள், ஹோம் தியேட்டர் சிஸ்டம்ஸ், டி.வி. செட்கள். இதுல ஒரு செட் முனிஷோட சகோதரருக்கு. இவ்வளவு கொடுத்தும் கல்யாணத்தன்று பன்னிரண்டு லட்சம் ரூபாய் ரொக்கமும், மாருதி எஸ்டீம் காரும் கேட்டா எங்க போக? நான் பழைய வாழ்க்கையை வாழ ஆசைப்படறேன். ரெண்டு மூணு நாளா ரொம்ப வலியாக உணர்ந்தேன். அப்புறம் சரியாயிட்டுது. இப்படி பண்ணிட்டதால என்னை ஒரு வீராங்கனை மாதிரி சித்திரிக்க வேண்டாம். நான் சாதாரணமானவள்தான். என்னோட வாழ்க்கையை நானாவே காப்பாற்றிக்கிட்டிருக்கேன். அவ்வளவுதான்'' என்கிற நிஷா சர்மாவுக்கு கிரண்பேடிதான் ரோல் மாடலாம்.

இந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தி பெண்ணிய இயக்கங்கள், அரசியல்வாதிகள் தங்களுக்குச் சாதகமாக இவரைப் பயன்படுத்த நினைக்கிறதாம்.

"நான் எதையும் சாதிச்சிட்டதா நினைக்கலை. வரதட்சிணைக்கு எதிரா இப்படிப் பண்ணிட்டதால எனக்கு கல்யாணத்து மேல வெறுப்பெல்லாம் கிடையாது. என்னைக் கல்யாணம் பண்ணிக்கிறவன் முதுகெலும்பு உள்ளவனா இருக்கணும்." என்கிறார் சிரித்துக் கொண்டே.

நன்றி : டைம்ஸ் ஆஃப் இந்தியா

தொகுப்பு : **ஏக்ஜி.**

புக் பேங்க்

**நறுக்குகள் - காசி ஆனந்தன்**

'நறுக்கு' என்பதில் ஓர் ஆணையிடும் தொனி ஒலிக்கிறது. ஜப்பானிய 'ஹைக்கூ' - பெயரை ஒதுக்கி, அருந்தமிழில் 'நறுக்கென'ப் படைத்த குறும்பாக்கள். அழகும் ஒயிலுமாய்ச் சில, ஆவேசமும் அனலுமாய்ப் பல. சுரீலென உறைக்கும் ஈழத்து உரைப்பாக்கள்.

*காசி ஆனந்தன் குடில், 26, இராமலிங்க நகர், பழைய மாமல்லபுரம் சாலை, கொட்டிவாக்கம், சென்னை - 41. விலை' ரூ.50/-*

**தலங்களின் தரிசனம் - சுப்ர. பாலன்**

சாதாரணமாகப் பயணம் சென்று வருபவர்கள் பயண அனுபவத்தைச் சொல்வதற்கும், ஒரு தேர்ந்த எழுத்தாளர் தமது பயண அனுபவத்தைச் சொல்வதற்கும் பெரும் வேறுபாடு இருக்கத்தான் செய்கிறது. எழுத்தின் வன்மை, பார்த்த இடங்களில் மீண்டும் பயணிக்கவும், பார்க்காத இடங்களைச் சென்று பார்க்க ஆவலைத் தூண்டவும் வைக்கிறது.

*கங்கை புத்தக நிலையம், 13. தீனதயாளு தெரு, தி.நகர், சென்னை-17, விலை: ரூ.40/-*

**நீங்களும் தஞ்சாவூர் ஓவியம் வரையலாம் - ஜெயம் மணாளன்**

மராட்டியக் கலைஞர்கள் தஞ்சைக்கு வந்து பிரபலப்படுத்திய ஓவியங்கள் செய்முறை (வரைவது அல்ல!) பற்றி விளக்க முயலும் நூல்.

*மணிமேகலைப் பிரசுரம், 7. தணிகாசலம் சாலை, தி.நகர். சென்னை - 17, விலை: ரூ.40/--*

**கண்ணனைக் கண்ட கவிஞன் - சி.ஆர். ரவீந்திரன்**

நாத்திகவாதியாக வாழ்வைத் தொடங்கி, கண்ணனின் தீவிர பக்தனாக கண்ணதாசனாக மாறியது ஒருபுறம். தி.மு.க.வில் சேர்ந்து. வெளியேறி வந்தது ஒருபுறம், இலக்கிய தாகம் தீர திரையுலக மேடைகளில் ஏறி, மற்றவர் தாகம் தீர்த்தது ஒருபுறம் - என்று கவிஞர் வாழ்வைப் பல கோணங்களில் ஆராயும் வாழ்க்கைச் சரித நூல்.

*கண்ணதாசன் பதிப்பகம், 23. கண்ணதாசன் சாலை, தி.நகர், சென்னை-17, விலை ரூ.120/-*

**கல்லால மரம் - பச்சியப்பன்**

பள்ளிப்பருவத்து பால்ய நினைவுகளும், வாழ்க்கைச் சந்தையில் மலிவாய் விலையாகிப் போன அவல நினைவுகளும், முடிவு வரையில் நெஞ்சில் முள்ளாய்க் குத்தி நிற்கும் சோகங்களும் கவிதைகளாய் வடித்த நூல். வாழ்வு கல்லால மரமென்று சொல்லால் வடித்த சித்திரங்கள்.

*காவ்யா, 14, முதல் குறுக்குத் தெரு, டிரஸ்ட்புரம், சென்னை-24, விலை: ரூ.45/-*

**மூன்று விரல் - இரா. முருகன்**

முனஞ்சிபட்டியையும் மாயவரத்தையும் தாய்லாந்துடனும் அமெரிக்காவுடனும் சட்டென்று இணைக்கும் மாயவித்தை படைத்த கம்ப்யூட்டர்களும், அவற்றை உற்றுப் பார்த்துக் கொண்டே சம்பாதித்து வாழ்க்கையை ஓட்டும் இளைஞர்களும் தளமாக அமைய, கம்ப்யூட்டரின் வேகமான குணசித்திரங்களைக் கொண்ட நாவல்.

*சபரி பப்ளிகேஷன்ஸ், 28, டேங்க் பண்ட் ரோடு, நுங்கம்பாக்கம், சென்னை - 34, விலை ரூ. 145/-*

**- விஷ்வக்**

# நாள் முழுதும் சுறுசுறுப்பு

## ஹெர்போலினா – நேச்சுரல் மல்டிவிட்டமின் கேப்சூல்

**காலையில்** அவசரச் சாப்பாடு, டிராபிக் ஜாம், தொடர்ந்து பயணம் செய்தல், வியாபாரத்தில் வெற்றி இலக்குகளை அடைவதில் உள்ள சிரமங்கள், நேரமின்மையால் மதிய உணவு உட்கொள்வதை தள்ளிப் போடுதல், நிறைய டீ, காபி அருந்துதல், இரவு நேரங்களில் விருந்துகளில் பங்கு கொண்டு நீண்ட நேரம் கேளிக்கைகளில் ஈடுபட்டு வீடு திரும்புதல்... விளைவு? மன உளைச்சல், மன அழுத்தம், அடுத்த நாள் வேலையில் சரியான நாட்டம் செலுத்த முடியாமை, மன உளைச்சலையும், அழுத்தத்தையும் நீக்கி நரம்புகளை அமைதிப் படுத்தி திரும்பவும் சமச்சீர் நிலையை அடையச்செய்வதில் ஸ்பைருலினா (ஹெர்போலினா) விலுள்ள வைட்டமின் $B_{12}$, மெதியோனைன் மற்றும் டிரிப்டோபான் என்ற அமினோ ஆசிட்டும் மிகவும் முக்கிய பங்காற்றுகிறது.

**கண்பார்வை:** கண்பார்வை சரியாக இருப்பதற்கு வைட்டமின் A சீராக இருக்கவேண்டும். வைட்டமின் A குறையும்போது மாலைக்கண் நோய் ஏற்படும். செயற்கை வைட்டமின் A அதிக அளவில் உட்கொள்ளும்போது எதிர்பாராத பக்க விளைவுகள் ஏற்படலாம். வைட்டமின் A ஐ தேவைக்கு ஏற்றவாறு அவ்வப்போது உற்பத்தி செய்யக்கூடிய பீட்டா கேரட்டீன் (Beta Carotene) என்ற ப்ரோ வைட்டமின், காரட்டிலிருந்து கிடைக்கக்கூடிய அளவைவிட ஸ்பைருலினாவிலிருந்து 10 மடங்கு அதிகமாகக் கிடைக்கிறது. இந்த பீட்டா கேரட்டீன் உடலில் அதிக அளவு இருப்பதால் எந்தவித கெடுதலும் கிடையாது.

**இருதய நோய்:** காமா லினோலினிக் அமிலம் நமது உடலில் குறையும்போது. இரத்தக்குழாய்கள் தடித்து கொழுப்புச் சத்து திரண்டு. இரத்தக்கொதிப்பு அதிகமாகிறது. ஸ்பைருலினாவிலிருந்து காமா லினோலினிக் அமிலம் நேரடியாக கிடைப்பதனால் இந்த அமில அளவு நமது உடலில் சீராக்கப்பட்டு இரத்த அழுத்த நோய் வராமல் பாதுகாக்கிறது.

**சர்க்கரை நோய்:** நமது உடலில் தேவையான அளவு வைட்டமின் $B_6$-ம் மெக்னீசியமும் இல்லாதபோது. கணையத்தின் செயல்திறன் குறைந்து இன்சுலின் சுரக்கும் அளவு குறைவதனால். உட்கொண்ட உணவிலுள்ள கார்போஹைட்ரேட்டை முழுமையாக பிரித்தெடுக்க முடியாமல் இரத்தத்தில் சர்க்கரை கலந்து விடுவதால் சர்க்கரை நோய் ஏற்படுகிறது. ஸ்பைருலினா (ஹெர்போலினா) வில் வைட்டமின் $B_6$-ம் மெக்னீசியமும் மிகுந்து காணப்படுவதனால், சர்க்கரை நோயால் பாதிக்கப்பட்டவர்களின் கணையம் சீராக செயல்பட்டு இன்சுலினை தேவையான அளவு சுரக்கச் செய்து, இரத்தத்தில் சர்க்கரை அளவை கட்டுப்படுத்த உதவுகிறது.

**உடல் பருமன் குறைய:** லினோலினிக் அமிலம் நாம் உட்கொள்ளும் உணவு களிலிருந்து உடலுக்கு கிடைக்கின்றது. 'டெல்டா-6-டீசேச்சுரேஸ்' என்ற நமது உடலில் உள்ள என்சைம், இந்த லினோலினிக் அமிலத்தை காமா லினோலினிக் அமிலமாக மாற்றுகின்றது. இந்த காமா லினோலினிக் அமிலம் இரத்தக் குழாயில் கொழுப்புச்சத்து படிவதைத் தடுத்து உடல் பருமன் குறைய உதவுகிறது. ஆனால், லினோலினிக் அமிலத்தை காமா லினோலினிக் அமிலமாக மாற்றும் சக்தியுடைய 'டெல்டா-6-டீசேச்சுரேஸ்' என்ற என்சைம். ஆல்கஹால் உட்கொள்பவருக்கும் அதிகப்படியான கொழுப்புச் சத்து உடையவர்களுக்கும் சக்தி இழந்து காணப்படுவதால், காமா லினோலினிக் அமிலம் உற்பத்தி இல்லாமல், மேலும் மேலும் கொழுப்புச்சத்து உடலில் தங்கி, உடல் பருமன் கூடிக்கொண்டே போக ஏதுவாகின்றது.

ஸ்பைருலினா (ஹெர்போலினா) விலிருந்து காமா லினோலினிக் அமிலம் நேரிடையாகவே கிடைப்பதால் உடல் கொழுப்புச் சத்து சீராக இருப்பதற்கு உதவி புரிந்து உடல் பருமனை குறைக்கின்றது.

ஒரு கிலோ காய்கறியிலிருந்து கிடைக்கக்கூடிய ஊட்டச்சத்து ஒரு கிராம் ஸ்பைருலினாவிலிருந்தே கிடைக்கிறது என்பது நிரூபணமாகியுள்ளது. மேலும் 300 மி.கி. கொழுப்புச்சத்து ஒரு முட்டை யிலிருந்து கிடைக்கும்போது, 10 கிராம் ஸ்பைருலினாவிலிருந்து 1.3 மி.கி. என்ற மிகக் குறைந்த அளவில்தான் கொழுப்புச் சத்து கிடைக்கிறது.

**அல்சர்:** ஸ்பைருலினா (ஹெர்போலினா)வில் உள்ள 'க்ளோரோபில்' அல்சரினால் ஏற்பட்ட குடல் புண்களின்மேல் தடுப்புச் சுவர்போல் செயல்பட்டு, பெப்சின் என்ற என்சைம் விளைவிக்கக்கூடிய தீங்கைத் தடுப்பதுடன், திசுக்களை மேலும் வீக்கமடையச் செய்யாமலும் தடுக்கிறது. மேலும், அல்சரால் பாதிக்கப் பட்டவர்களுக்கு ஜீரண சக்தி குறைவதால், தேவையான புரதம் மற்றும் வைட்டமின் சத்துக்கள் அவர்கள் உட்கொள்ளும் உணவி லிருந்து கிடைக்காமல் போய்விடுகிறது. ஆனால். ஸ்பைருலினா (ஹெர்போலினா) வில் உள்ள எளிதில் ஜீரணமாகக்கூடிய புரதம் மற்றும் வைட்டமின் சத்துக்களும் அவர் களுக்கு ஒரு வரப்பிரசாதமாக அமைகின்றது.

மேலும், நரம்புத் தளர்ச்சி, மூட்டுவாதம். முதலிய நோய்கள் வராமல் பாதுகாக்கும் அஸ்வகந்தாவும், ஞாபக சக்தி அளிக்கக்கூடிய வல்லாரையும் ஹெர்போலினாவில் கலந்துள்ளதால் சிறுவர் முதல் முதியவர்வரை அனைவருக்கும் ஏற்ற ஊட்டச்சத்து அளிக்கக்கூடிய உன்னத ஜெனரல் ஹெல்த் ப்ராடக்ட்டாக ஹெர்போ லினா விளங்குகிறது.

ஹெர்ப்போலினா எந்தவித பக்க விளைவுகளையும் ஏற்படுத்தாத. இயற்கை தரும் மல்டி. விட்டமின் கேப்சூல்.

**உட்கொள்ளும் அளவு:** 5 முதல் 20 வயது வரை, வேளைக்கு 1 கேப்சூல் - காலையும், இரவும்- உணவிற்குப் பின்

20 வயதிற்குமேல், வேளைக்கு 1 கேப்சூல் - மூன்று வேளை-உணவிற்குப் பின்.

<u>கடைகள் இல்லாத ஊர்களுக்கு கூரியர் மூலம் மருந்துகள் அனுப்பித்தரப்படும். கூரியர் செலவுடன் 30 கேப்சூல்கள் - ரூ 75/-ம், 60 கேப்சூல்கள் - ரூ 140/-ம் முன்பணமாக அனுப்பி பெற்றுக்கொள்ளலாம்.</u>

**எல்லா மருந்துக் கடைகளிலும் கிடைக்கும்**



Laurel Herbal Products
3 bajanai koil street
velachery chennai 42
ph 2245 0046 / 2244 2595
email laurel_herbals@hotmail.com
www.indiamart.com/laurel herbal

ADVT.

# இது வேறு

'குங்குமம்' ஷூட்டிங்கில் இருந்தார் குஷ்பு.

"'மருமகள்', 'ஜனனி'ன்னு சுஜாதா விஜயகுமார் தயாரிப்பிலேயே நடிச்சிட்டிருக்கீங்களே. வேற யாருக்கும் நடிக்க மாட்டீங்களா?" என்றோம். "ஆரம்பிச்சிட்டீங்களா?" என்றவர், "இங்க எனக்கு நிறைய சுதந்திரம் இருக்கு. ரெண்டு குழந்தைக்கு அம்மா ஆயிட்டதனால அவங்களைப் பார்த்துட்டு, டயம் அட்ஜஸ்ட் பண்ணிட்டு நடிக்க இவங்க சம்மதிக்கிறாங்க. இதேபோல மத்த தயாரிப்பாளரும் சம்மதிச்சாங்கன்னா, நான் ரெடி..." என்றார்.

பக்கத்தில் ரெடி, ஆக்ஷன் சொல்லிக் கொண்டிருந்த டைரக்டர் சுந்தர் கே.விஜயனிடம், "மெகா தொடர்னாலே பொம்பளைகளை அழ வைக்கறதுன்னு சொல்றாங்களே, சரிதானா?" என்றால்,

"இதை நான் ஒப்புக்கவே மாட்டேன். கதைக்குத் தேவைன்னா சோக சீன்கள் வரும். ஆனா 'குங்குமத்து'ல யாரும் கண்ணீர் வடிக்கிற மாதிரியான காட்சிகளே இருக்காது" என்றார் சத்தியம் செய்யாத குறையாக.

நம்புவோமாக.

* தாரிகா



ஏவி.எம் 'சம்சாரம் அது மின்சாரம்' செட்டில் 'அப்பா'வை இயக்கிக் கொண்டிருந்தார் டைரக்டர் சுகி. மூர்த்தி

"அம்மா, சித்தி, அத்தை, மருமகள், மாமியார்... இப்போ அப்பா... எல்லா உறவுகள் பெயர்லேயும் சீரியல் ஆரம்பிச்சாச்சு..." என்றோம்.

"ஆமா... மனசுல ஒட்டற மாதிரி தலைப்பு இருந்தாத்தானே நல்லாயிருக்கும்" என்றவர், "அப்பா தொடர்ல முக்கியமான கேரக்டரா சித்தப்பா (அடடா, இதை யாரும் தலைப்பா வைக்கலையா?) வர்றார். ஒரு கூட்டுக் குடும்பத்துல நடக்கிற விஷயங்கள்தான் கதை. கிராமத்து சப்ஜெக்ட். இதுல வில்லன்னு யாருமே இல்லை. பிரச்னைகள்



* குங்குமத்தில்...

தான் வில்லன். நீங்க உங்க குடும்பத்துல அல்லது பக்கத்து வீட்ல பார்த்த

# சபதம்!

மாதிரியான கேரக்டர்கள் முழுவதும். தனக்கு நேர்ந்த நடந்த சம்பவம் மாதிரி ஒரு கதை இருந்ததுன்னா, அது நிச்சயம் சக்ஸஸ் ஆகும். அப்பா அப்படிப்பட்ட கதை'' என்றார். அடேயப்பா!

நுங்கம்பாக்கம் உஷா ஹவுஸில் இலேசான மேக்கப்பில் பளிச்சென்று இருந்தார் கல்பனா ஸ்ரீ. பார்த்ததும் பட்டென்று ஏதோ ஒரு பொருளை உள்ளங்கையில் வைத்து அழுத்தினார். கையை விரித்தால்... சாக்லேட்!



• கல்பனா ஸ்ரீ



• அப்பா

"என்ன விசேஷம்? 'சினிமா சான்ஸ் அடிச்சிடுச்சா?'' என்றால்... இல்லையாம்.

"'பிருந்தாவனம்' 'கல்யாணி', 'ஆசை', 'பைரவி'ன்னு எல்லாத்திலும் ஹோம்வி டைரெக்டர்தான் செஞ்சிருக்கேன். இப்பதான் முதன்முதலா ஜீன்ஸ், ஸ்கர்ட்னு போட்டு மாடர்னா நடிக்கப் போறேன்'' என்றார் குதூகலம் குறையாமல். முருகானந்தம் என்பவரால், சன் டீவிக்காக இயக்கப்படும் அந்தத் தொடரின் பெயர்... 'சிவகாமியின் சபதம்'

"அப்ப அந்தத் தொடரில் உங்க பேர் சிவகாமியா?'' என்று கேட்டால் "இல்லை... சந்தியா'' என்றார்.

இது வேறு சபதம்!

"இப்ப ஹீரோயின் ஆயிட்டேன்பா' என்று எக்கச்சக்கச் சந்தோஷத்தில் நிஷா. ஸாரி தாரிகா என்று பெயர் மாற்றம் செய்து விட்டாரே!

"பெயர் மாற்றம் அதிர்ஷ்டத்தைக் கொடுத்திருக்கு அப்படித்தானே'' என்றால் "அப்படியான்னு தெரியலை. ஈர நிலத்துல நல்ல ரோல் பண்ணியிருக்கேன். இப்ப 'காதல் சரிகமா' படத்துல ஹீரோயின் ஆக்கியிருக்காங்க. காலேஜ் சப்ஜெக்ட், வாழ்க்கைக்காகப் போராடுற ஒரு பெண்ணோட கதை. நிஜமாகவே அசத்தியிருக்கேன்'' என்றார்.

இவ்வளவு நாளும் பொய்யாகவா அசத்தினார்?

- அப்பு, அனு




✉ தலையங்கம் படித்து வேதனை. சட்டம் - ஒழுங்கு பராமரிப்பு, அரசுத் துறைகளில் லஞ்சமின்மை, பொருளாதார ரீதியாக மேம்பாடு, நிர்வாக அளவில் சிக்கன கட்டுப்பாடு போன்று பலவற்றில் ஜெ. அரசு முன்னே நடைபோடுவதை ஏற்க மனமில்லையா?

வேலாயுதபட்டணம், மரகதம் சம்பத்.

✉ நள்ளாறு நாயகனை நேரில் சென்று வழிபட்டு வந்த பக்தி உணர்வையும் பரவசத்தையும், உண்டாக்கிவிட்டீர்கள். சபாஷ்!

கும்பகோணம், புலவர் எஸ்.கே. மூர்த்தி.

✉ தகிக்கும் 'அக்னி' நட்சத்திர வெப்பத்தில் குளிர்ச்சியூட்டியது அட்டைப் படம். சரி, பொட்டு வைத்துக்கொண்டு மங்களகரமாக காட்சி தரும் 'ஐஸ்வர்ய'மான ஸ்டில்லைப் போட்டிருக்கலாமே!

ஈரோடு - 1, ரேவதி ப்ரியன்.

✉ தலையங்கம் படித்தேன். நாளொரு வேலை நிறுத்தமும், பொழுதொரு கைது மாகத்தான் ஜெ.யின் இரண்டாண்டு ஆட்சி நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. அமைச்சர்களும், ஆளுங்கட்சி சட்டமன்ற உறுப்பினர்களும், இந்த இரண்டாண்டுக் கால ஆட்சியில் 'மாண்புமிகு புரட்சித்தலைவி அம்மா அவர்கள்' என்ற இந்த நான்கு வார்த்தையை அதிக அளவில் பயன்படுத்தி ஒரு கின்னஸ் சாதனையை நிகழ்த்திவிட்டார்கள்.

கோவில்பட்டி, இரா. சுப்புராஜ்.

# மனமில்லையா?

✉ ஒரு ரூபாய் சேர்த்து மொய் எழுதுவதற்கு மூன்று வெவ்வேறு கோணத்தில் காரணங்களைச் சிந்தித்து எழுதப்பட்ட மூன்று கதைகளுமே முத்தானவை. இருப்பினும் ஒற்றைப்படையில் முடிந்தால்தான் எதுவும் விருத்தியாகும் என்ற முன்னோர்கள் எண்ணமே மறுக்க முடியாத காரணம்.

திருப்பரங்குன்றம், டி.கே. சுப்பிரமணியன்.

✉ ஊனமுற்றவர்களுக்குச் செயற்கைக் கால்களை உருவாக்கி வாழ்த்துக்களுடன், விருதையும் பெற்ற ஜி. கிருஷ்ணன் பாராட்டுக்குரியவர். அவரது பணி சிறக்க வாழ்த்துகிறோம்.

ஸ்ரீரங்கம், எஸ். கௌரிலக்ஷ்மி.

✉ ஜெ. அரசின் சாதனை - தமிழகத்திற்குச் சோதனை தலையங்கம் (25.5.03) நச். அத்தனையும் வைர வரிகள்.

மேலையூர், டி. சுப்ரமணியன்.

✉ 'திருநள்ளாறு நாயகன்' இணைப்பு படங்களும் செய்திகளும் மந்திரங்களுமாக, மானசிகமாக அத் திருத்தலத்தையே தரிசிக்க வைத்துவிட்டது. புண்ணியம் கல்கி வழியாக வாசகர்களுக்கு!

சென்னை - 14, அய்யாறு வாசுதேவன்.

✉ தமிழுக்கு ஆக்ஸிஜன் தேடிக் கொண்டிருக்கும் இந்த நேரத்தில், அதை ஏணியாகப் பயன்படுத்தி ஐ.ஏ.எஸ் தேர்வில் வெற்றி பெற்றிருக்கும் ஜெயசீலன், பல மாணவர்களுக்கு உந்து சக்தியாக இருப்பார்.

சென்னை - 61, என். சுஜாதா.

சுட்டெரிக்கும் சென்னைக்குள் குட்டிக் கொடைக்கானல் மாதிரி இப்படியொரு இடமா? நூல் பிடித்த மாதிரி அளந்து வைத்த சாலைகளில் துளி வெயிலைக்கூட அனுமதிக்காத பசுமைக் குடைகளாய் மரங்கள். அனல்காற்று முகத்தில் அறைய அவஸ்தையோடு அடையாறு போட் கிளப் ஏரியாவிற்குள் நுழைந்தால், கழுத்தை இறுக்கியணைத்து, சில்லென்று மழலை முத்தம் தருகிறது குளிர்காற்று. போட் கிளப் தவிர அந்தப் பகுதியின் மற்றொரு சிறப்பு மருதம்.





• சாகசப் பயிற்சியில்...

தமிழக காவல்துறையின் அதிரடி ஆபரேஷன்களில் தூள் கிளப்பும் போலீஸ் கமாண்டோக்கள் செதுக்கப்படுவது இங்கேதான். இராணுவ வீரர்களுக்கு இணையாக, கடுமையான போர்ப் பயிற்சிகள் கொடுத்து, ஆண் போலீஸ் கமாண்டோக்களை மட்டுமே உருவாக்கி வந்த மருதத்தில், இப்போது பெண் போலீஸ் கமாண்டோக்களை உருவாக்கிக் கொண்டிருக்கிறார்கள்.

கம்பீரமான பசுமைக் காட்டுக்குள் சின்னச் சின்ன வெள்ளைக் கட்டடங்களோடு படு அமைதியாய் இருந்தது மருதம். கொஞ்சம் திக்திக்... உணர்வோடு உள்ளே அடி வைத்த அடுத்த வினாடி டுமீல்...! டுட்! டுட்! டுட்! டுமீல்! அடி வயிற்றில் அமிலம் சுரக்க வைத்தது மெஷின்கன் ஓசை. மேற்கொண்டு உள்ளே நுழைவதா இல்லை, பின்வாங்கி விடலாமா என்று யோசித்துக் கொண்டிருந்தபோது... தலைக்கு மேல் விஷ்ஷ்ஷ்... என்ற சீறல் ஒலி. நிமிர்ந்து பார்த்தபோது அங்கே கண்ட காட்சி ஒரு



• ஹேமலதா







# புயல் பூக்கள்!

கணம் அதிர வைத்தது. இருநூறு அடி உயரத்தில், நீண்டு போய்க் கொண்டிருந்த இரும்புக் கம்பியில் சகடைகளின் உதவியோடு தலை கீழாய்த் தொங்கியபடி கைகளில் பிஸ்டலை ஏந்தி, சுட்டுக் கொண்டே சர்ரென்று நகர்ந்து போய்க் கொண்டிருந்த அந்த மூன்று பேரும் பெண்கள்...

பட்டென்று பார்வையில் அறைகிற கறுப்பு யூனிஃபார்மும், நெற்றியிலிருந்து தலையை மறைத்த துணியுமாக அந்த முரட்டுத் தோற்றமே கலக்கத்தை உண்டு பண்ணுகிறது. ஏதோ தடை செய்யப்பட்ட பகுதிக்குள் நுழைந்துவிட்ட உணர்வோடு திரும்பிப் போக யத்தனித்த நம்மை, கையில் மெஷின் கன்னோடு வந்து தடுத்து நிறுத்தினார் அங்கே பயிற்சி முடித்திருக்கும் பெண் போலீஸ் கமாண்டோவான என். ஹேமலதா. "உங்களை ஐ.ஜி. அழைத்து வரச் சொல்கிறார்" என்று அவர் முன்னால் விறைப்பாக நடக்க... புகைப்படக்காரரோடு நாம் பின்னால் நடந்தோம்.

"தினசரி மாலை மூன்று மணிக்கு இங்கே ஆபரேஷன் டெமோ நடக்கும்... ரொம்ப திரில்லாக ஃபீல் பண்ணுவீங்க... முக்கியமா இவங்க அத்தனை பேரும் பெண்கள்தானான்னு நம்பக் கூடத் தயங்குவீங்க.." என்றபடி கைகுலுக்கி வரவேற்றார் கமாண்டோ படையின் செயலாக்க ஐஜியான கே. ராஜேந்திரன்.

அவரிடம் பேசிக் கொண்டிருக்கும்போது விர்ரென்று வேகமாய் நம்மைக் கடந்து போன ஜீப்பில், ஜன்னலுக்கு வெளியே கார்பைன் மெஷின்கன்களை நீட்டி, குறி பார்த்தபடி சென்றனர் இரண்டு கமாண்டோக்கள். எதிர்பாராதவிதமாக ஒரு மணல் குழிக்குள் ஜீப் இறங்கின அடுத்த வினாடி, கதவுகளைத் திறக்காமலேயே கண் இமைப்பதற்குள் ஜன்னல் வழியே வெளியே குதித்து, டம்மி இலக்குகளை நோக்கி மெஷின் கன்னால் துளைத்து எடுத்தனர். இந்த அதிரடிக் காட்சி முடிவதற்குள், அடுத்து சில கமாண்டோக்கள் கண்களை முழுவதும் கறுப்புத் துணியால் கட்டிக் கொண்டு அறுபதடி தூரத்திலிருந்து இலக்குகளைத் துல்லியமாய்ச் சுட்டுத் தள்ளினர்.

பயிற்சி மையத்தின் நுழைவாயில் பக்கமாய் படபட.... சத்தம் கவனத்தைத் திசை திருப்பியது. அங்கே ஒரு டஜன் கமாண்டோக்கள், மெகா மோட்டார் சைக்கிள்களில் அநாயாசமாக சவாரி செய்தபடி உள்ளே நுழைந்து கொண்டிருந்தனர்.

அவர்களைத் தொடர்ந்து குதிரைகளிலும் கம்பீர கமாண்டோக்கள். வியப்பில்



• கே.ராஜேந்திரன்



விழி விரித்து ஐஜியோடு நாம் நின்றிருக்க... அவரிடம் வந்து நின்று விறைப்பாக சல்யூட் அடித்து ரிப்போர்ட் செய்தனர் ஐந்து கமாண்டோக்கள்!

''கோடை விடுப்பில் சொந்த ஊர் சென்று திரும்பியிருக்கும் இந்த பெண் கமாண்டோக்களை புடைவையில் பார்க்கிற யாரும் நம்ப மறுப்பார்கள். புடைவையில் இவர்கள் பூக்கள் என்றால், கமாண்டோ உடையில் புயல். அதைத்தான் நீங்கள் நேரில் பார்க்கிறீர்கள்'' என்று பெண் கமாண்டோக்கள் பற்றிப் பெருமை பொங்கப் பேசுகிறார் ஐஜி.

''தேசிய அளவில் பெண்களுக்கு முப்பத்து மூன்று சதவிகிதம் இட ஒதுக்கீடு கிடைக்கிறதோ இல்லையோ, தமிழக காவல்துறையில் பெண்களைப் பெருமைப் படுத்த வேண்டும் என்ற தொலைநோக்குடன், இன்றைய முதல்வர் அன்றே அனைத்து மகளிர் காவல் நிலையத்தை உருவாக்கி பெருமைப்படுத்தினார்.

''தற்போது ஆயிரத்து அறுநூறு பெண் காவலர்களுக்குப் பயிற்சி, சுமார் இரண்டாயிரம் பெண் உதவி ஆய்வாளர்கள் தேர்வு, என மகளிர்க்கு முக்கியத்துவம் தந்திருக்கிறார். இதைத் தொடர்ந்து இந்தியாவிலேயே முதன்முறையாக பெண் போலீஸ் கமாண்டோக்களை உருவாக்கும் இந்த அபார முயற்சியும் முதல்வர் சிந்தையில் உதித்த சீர்மிகு எண்ணம்தான்'' என்கிறார்.

மூன்று மாத கால கடுமையான பயிற்சி முடிந்துவிட்ட நிலையில், ஆண் போலீஸ் கமாண்டோக்களுக்கு எள்ளளவும் நாங்கள் சளைத்தவர்கள் அல்ல என்று சொல்லும் நூற்று ஐம்பத்தோரு பெண் கமாண்டோக்களும், தன்னார்வம் மற்றும் உடல்தகுதி அடிப்படையில் பயிற்சிக்குத் தேர்வு பெற்றிருக்கிறார்கள்.

இவர்களில் பலர் திருமணமானவர்கள் என்பதை நம்பியே தீர வேண்டும். திண்டுக்கல் அருகேயுள்ள கெண்டைக்கவுண்டனூர் கிராமத்தைச் சேர்ந்த சி. சுபாஷினிக்குத் திருமணமாகி பத்தாண்டுகள் ஆகின்றன. பிரவீண் என்ற நான்கு வயது மகனும் உண்டு. கோவைப்புதூர் சிறப்புக் காவல் படையில் பெண் காவலராகப் பணியாற்றி வரும் இவரது சகோதரியும் ஒரு காவலர் தானாம். ''கமாண்டோ பயிற்சிக்கு அறிவிப்பு வந்ததுமே... கணவர்கிட்டே அனுமதி கேட்டேன்... எதுக்கு ரிஸ்க் எடுக்குறேன்னார். எனக்கு நம்பிக்கையிருக்குன்னு சொன்னேன். அதே மாதிரி இப்போ நான் கமாண்டோ'' என்று நெஞ்சம் நிமிர்த்தி சொல்லும் இவர், இங்கே தரப்பட்ட அனைத்துப் பயிற்சிகளிலும் மூன்றாவது இடத்தைப் பிடித்து, பரிசுகளை அள்ளியிருக்கிறார்.



மதுரையைச் சேர்ந்த இருபத்து எட்டு வயது முனியம்மாவுக்கு பாதிப் பயிற்சி நடைபெற்றுக் கொண்டிருக்கும்போதே திருமணம் நிச்சயமாகிவிட, தாலி கட்டிக் கொண்ட மறுநாளே பயிற்சிக்குத் திரும்பி விட்டாராம்!



* அந்த ஐவர்

''எனக்கு ஒரு நாள் பயிற்சியைக் கூட தவற விடுற துலே விருப்பமில் லிங்க. அந்த அளவு உடல்ரீதியாகவும், உள்ள ரீதியாகவும் பெரிய பலசாலி களாக எங்களை மாத்தி இருக்கு'' என்று அடித்துச் சொல்கிறார்.



யோகா, தியானம், வெயிட் லிப்டிங், ஜிம் என்று ஆரம்பித்து, ஆயுதப்பயிற்சியில் ஏ.கே.47, எஸ்.எல்.ஆர், ஒன்பது எம்.எம். பிஸ்டல், கார்பைன் மெஷின்கள் ஆகியவற்றில் துல்லியமாகச் சுடக் கற்றுக் கொள்ளுதல், பேரா செயிலிங், குதிரையேற்றம், மலையேற்றம், மேப் ரீடிங் யுத்தத் தந்திரப் பயிற்சி, ஓட்டுனர் பயிற்சி என்று மிரட்டும் பயிற்சிகள். இந்தப் பயிற்சிகளில் எல்லாம் கடுமையானது ஓட்டப் பயிற்சிதானாம். மொத்தமுள்ள பன்னிரண்டு வாரப் பயிற்சியில், முதல் வாரம் ஐந்து கிலோ மீட்டர் தொடர் ஓட்டப் பயிற்சி, இரண்டாவது வாரம் ஏழு கிலோ மீட்டர் ஓட்டப் பயிற்சி என்று ஓட ஆரம்பித்து, பயிற்சி முடியும் பன்னிரண்டாவது வாரம் ஒவ்வொரு கமாண்டோவும் தொடர்ந்து இரண்டு நாள் தொண்ணூறு கிலோ மீட்டர் ஓட வேண்டுமாம். இறுதிக்கட்ட ஓட்டத்தை சென்னைக்குள்ளேயே ஓடி முடிப்பதை விட, குழுக்களாகப் பிரிந்து குமரியிலிருந்து சென்னை வரை தன்னம்பிக்கை ஓட்டமாக ஜோதி ஏந்தி ஏன் ஓடி வரக் கூடாது, என ஐஜி. திட்டமிட்டிருக்கிறார்.



● கோகிலம்



● சுபாஷினி

தமிழக காவல்துறைத் தலைவரும் முதல்வரும் இதற்கு, இருபத்து நான்கு மணி நேரத்தில் ஓகே சொல்ல, கடந்த ஏப்ரல் இருபத்து ஏழாம் தேதி குமரியில் தொடங்கி, முப்பதாம் தேதி வரை எழுபத்து இரண்டு மணி நேரம், தொடர் ஓட்டமாய் பெண் கமாண்டோக்கள் ஜோதி ஏந்தி ஓடிவர, வழி நெடுகிலும் அபார வரவேற்பை வழங்கியிருக்கிறார்கள் பொது மக்கள்.

''சேர்ந்த சில நாட்களிலேயே பயிற்சியின் கடுமை காரணமாக, பல பெண்கள் விலகி விட்டனர். என்னைப் போன்றவர்கள் தன்னம்பிக்கையோடு தாக்குப் பிடிக்கக் காரணம், இங்கே தரப்பட்ட சத்தான உணவும், எங்களைக் கனிவோடு அணுகும் அதிகாரிகளும்தான்'' என்கிறார் கமாண்டோ கோகிலம்.

''மாத ஊதியம் தவிர்த்து, இந்தப் பயிற்சியை மேற்கொள்வதில் பெண்களுக்கு நிறைய இடர்கள் ஏற்பட வாய்ப்பு உண்டு என்பதால், முதல்வர் மாதந்தோறும் எங்களுக்கு ரிஸ்க் அலவன்சும் கொடுக்க ஆணையிட்டிருக்கிறார்கள். அவரது இந்தத் தாயுள்ளத்திற்கு நன்றிக் கடனாக, ஒரே ஒருமுறையாவது அவருக்கான பாதுகாப்பு கமாண்டோவாக போய் வர வேண்டும் என்று விரும்புகிறேன்'' என்கிறார் கோகிலம்.

பயிற்சி முடித்து தயாராக இருக்கும் இந்தக் கமாண்டோக்களை, தீவிரவாதிகளைப் பிடிப்பது உள்ளிட்ட எல்லா எமர்ஜென்சி ஆபரேஷன்களுக்கும் பயன்படுத்திக் கொள்ள காவல்துறை தயாராகி விட்டது.

**- ஆர்.சி. ஜெயந்தன்**

படங்கள் : **டிஜிட்டல் சண்முகம்**

# சில்லுக் கருப்பட்டி

9

பலவேசமுத்துவும், தண்டபாணியும் சென்னைக்கு வராமலேயே முகவரியை மட்டும் கண்ணனிடம் கொடுத்தனர்.

"நான் விவரமா பேசிட்டேன். நீ போய் ஒரு பத்துப் பதினைஞ்சு நாளு அங்க இரு. நான் அங்க திரும்ப வந்த பிறவு கடையை உன் பேர்ல எழுதிக் கொடுத்திருதேன்" என்றான் தண்டபாணி.

இதில் ஏதோ வில்லங்கம் இருக்கிறது என்பதை ஓரளவு ஊகித்துவிட்ட கண்ணன், அட்ரஸை வாங்கிக் கொண்டு சென்னைக்கு வந்தான். வண்ணாரப் பேட்டையில் இருந்தது அந்தக் கடை. பல பேரிடம் விசாரித்துக் கொண்டு சரியாக வந்து சேர்ந்தான். சின்னக் கடைதான். உள்ளே முண்டா பனியன் போட்ட இரண்டு இளைஞர்கள் நின்று கொண்டிருந்தனர். வேலையாட்கள் நான்கைந்து பேர் சாமான் வாங்க கடைக்கு வெளியே நின்று கொண்டிருந்தனர்.

சோப்புக் கம்பெனி ஒன்றின் விளம்பரம் எழுதப்பட்ட போர்டு கடையின் மேலே தொங்கிக் கொண்டிருந்தது. வழவழப்பான அந்த போர்டையே வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த கண்ணன், இப்போது கடைக்கு முன்னால் வந்தான்.

"என்னங்க வேணும்?" என்று கடையிலிருந்த ஒருவன் கண்ணனிடம் கேட்க, "நான் கண்ணன்" என்றான்.

"சரி என்ன வேணும்?"

"ருத்ரம்மா..."

"அவங்க இப்ப வார நேரந்தான். நீங்க யாரு?"

"நான் கண்ணன்."

"அடடா... அதையேதான் சொல்லுதீங்க. எந்த ஊர்லயிருந்து வர்றீங்க? அவங்களுக்குச் சொந்தமா, தெரிஞ்சவங்களா? என்ன விஷயமா வந்திருக்கீங்க..."

கடையின் வேலையாள் ஒருவன் அவனிடம் இப்படி அடுக்கிக் கொண்டிருக்கும்போதே வந்து சேர்ந்தாள் ருத்ரம்மா. இளமை செழிக்கும் உருவம். கண்களில் இழுக்கும் காந்தம். காட்டன் புடைவையில் அழகாக இருந்தாள். 'என்னதான் இருந்தாலும் செண்பகம் போல் வருமா?' மனத்துக்குள் நினைத்துக் கொண்டான் கண்ணன்.

"யாரு?"

"கண்ணனாம்... உங்களைப் பார்க்க..."

"ஆங்... வாங்க வாங்க... ஊர்லயிருந்து களைப்பா வந்திருப்பீங்க" என்றவள் அந்த வேலைக்காரனிடம் திரும்பி, "முதல்ல இவருக்கு ஒரு டீ சொல்லுப்பா" என்றாள்.

கண்ணனையே பார்த்தாள். ஒரு கிராமத்து அப்பாவியின் வெகுளித்தனமான முகம் பளிச்சென்று தெரிந்தது.

"ஊர்ல எல்லாரும் நல்லாயிருக்காங்களா?"

"ம்" என்றான்.

"இதுக்கு முன்னால சென்னைக்கு வந்திருக்கீங்களா?"

"இல்ல."

"சரி. டீ குடிச்சுட்டு, ரூம்ல போய் குளிச்சு ரெஸ்ட் எடுங்க. மத்ததை சாயங்காலமா பேசிக்கிடலாம்" என்றாள் ருத்ரம்மா.

அவள் சொன்ன ரூம், கடையின் மேல் பகுதி. கடைக்கு அருகிலேயே சின்ன படிகள். மேலேறிப் போனான். ஆஸ்பெஸ்டாஸ் கூரைக்குள் அடைபட்டுக் கிடந்தது அந்த அறை. இதுதான் கடையிலிருந்த முண்டா பனியின் காரர்களுக்கும் அறையாக இருக்கும். உள்ளே ஒழுங்காக அடுக்கி

வைக்கப்படாமல் ஆங்காங்கே தூக்கி வீசப்பட்ட நிலையில் லுங்கிகளும் பனியனுமாய்க் கிடந்தன. இரண்டு சூட்கேஸ்கள், அதனருகில் பெரிய அட்டைப் பெட்டி. கண்ணன் அந்த அட்டைப் பெட்டியைத் தூக்கி ஓரமாக வைத்துவிட்டு, தன் சூட்கேஸை வைத்தான். வெளியே சின்னதாக பாத்ரூமும், டாய்லெட்டும் தனியாக இருந்தன. உடைகளைக் களைந்துவிட்டுக் குளிக்கப் போனான்.

தண்டபாணி ஏற்கெனவே ருத்ரம்மாவிடம் ஃபோனில் விளக்கமாகச் சொல்லியிருந்தான்.

"நான் உங்கிட்ட கடையை விற்ற விஷயம் எதுவும் அவனுக்குத் தெரிய வேண்டாம். ஒரு மாசம் வரை அவனை எப்படியாவது கடையில வேலை பார்க்கச் சொல்லு. அதுக்குள்ள இங்க ஒரு காரியத்தை முடிச்சுட்டு நான் அங்க வாரேன். பெறவு மத்தத பாத்துக்கிடுவோம்" என்றிருந்தான் தண்டபாணி.

அவன் இப்படிச் சொன்னதில் ஏதோ ஒரு பிரச்னை நடக்க இருக்கிறது என்பதை மட்டும் புரிந்து கொண்டாள் ருத்ரம்மா. இந்தப் பிரச்னையில் யார் யார் பாதிக்கப்படப் போகிறார்களோ என்ற சுய பச்சாதாபமும் அவளுக்கு.



ஏனென்றால் பலவேசமுத்துவைப் பற்றியும் தண்டபாணியைப் பற்றியும் அவள் அறியாதது அல்ல. தன்னை ஏமாற்ற நினைத்த தண்டபாணியைப் புரட்டிப் போட்டு, அவன் அசந்து மறந்தவேளையில் இந்தக் கடையை லாகவமாக வாங்கியவள் ருத்ரம்மா. அதற்காக அவன் ஒன்றும் ஏமாற்றுப் பேர்வழியும் அல்ல.

கண்ணனை நினைத்து அவளுக்குப் பரிதாபம் ஏற்பட்டது. இவனிடம் உண்மையைச் சொல்லிவிடலாமா? என்று யோசித்தாள். இப்பவே சொன்னால் கோபத்தில், ஆத்திரத்தில் ஊருக்குக் கிளம்பி விட்டால்...?

திட்டத்தை நிறைவேற்றும் பொருட்டு வந்த பலவேசமுத்துவின் கார் செண்பகத்தின் வீட்டு முன் வந்து நின்றது. பெரிய தாம்பாளத்தட்டு, ஒன்றில் பழவகைகள், தேங்காய், வெற்றிலைப் பாக்கு, அதனுள் இரண்டு நூறு ரூபாய்க் கட்டு சகிதமாய் முதலில் சொகுசு அக்கா இறங்க, பின்னாலேயே கரை வேட்டி பளபளக்க பலவேசமுத்து இறங்கினார். கூடவே தண்டபாணியும்.

பலவேசமுத்து அன்ட் கோவை இப்போது இப்படி எதிர்பார்க்காத ராமக்கனி அம்மாள், தாம்பாளத் தட்டைப் பார்த்ததும் ஒரு நிமிடம் உறைந்து போனாள்.

நேராக வீட்டுக்குள் வந்த சொகுசு, கூடத்தில் தாம்பாளத்தை வைத்தாள். ஓரமாய்க் கிடந்த இரண்டு ப்ளாஸ்டிக் சேர்களை இழுத்துப் போட்டு பலவேசமுத்துவையும் தண்டபாணியையும் உட்கார வைத்தாள். ஓரமாய் கிடந்த பனை ஓலை விசிறிகளை எடுத்து பலவேசமுத்துவுக்கும் தண்டபாணிக்கும் கொடுத்தாள்.

பிறகு, தனது கழுத்தில் தொங்கிய நகைகளை பட்டுசேலையின் வெளியே தெரியுமாறு எடுத்துவிட்டுக் கொண்டாள்.

"சொகுசு... என்னம்மா இதெல்லாம்...?"

"எல்லாம் நல்ல விஷயத்துக்குத்தான். முதல்ல செண்பவத்தைக் கூப்புடுங்க."

"அவா வெளியல்லா போயிருக்கா."

"சரி அவா இல்லாததும் நல்லதுக்குத்தான். நல்ல விஷயம் பேசும்போது அவா ஏதாவது தொண தொணப்பா... விவரம் புரியாதவ. நாலெழுத்துப் படிச்சுட்டாலே அப்படித்தான்... நாம என்னத்தைப் படிச்சோம். புள்ளக்குட்டிப் பெத்துக்கிட்டு வாழலையா?"

"என்ன சொல்லுத சொகுசு?"

"ஆமா... தெரியாத மாதிரி கேட்காதிய, தாம்பூலத்தையும் தேங்காய்ப் பழத்தையும்

# இங்கிலிபீஸு சண்டியரு!

சீன் கானரி... ரோஜர் மூர்... பியர்ஸ் - பிராஸ்னன் இவர்களெல்லாம் யார்? 1962ல் வெளியான முதல் ஜேம்ஸ்பாண்ட் பாணிப் படமான 'டாக்டர் நோ'வில் தொடங்கி கடந்த ஆண்டு வெளியான 'டை அனதர் டே' வரையில் 007ஆக நடித்த மூன்று தலைமுறை நடிகர்கள். அத்தனை பேரும் இப்போது தமிழ் உட்பட இந்திய மொழிகளில் கதைக்கப் போகிறார்கள். மெகா ஹிட் தயாரிப்பாளராக ஹாலிவுட்டை கலக்கிக் கொண்டிருக்கும் அசோக் அமிர்தராஜின் என்டர்டெயின்மெண்ட் கம்பெனியும், சென்னை மெஸ்ஸர்ஸ் பிளாக் பஸ்டர் ஹோம் என்டர்டெயின்மெண்ட் கம்பெனியும் இணைந்து இந்த டப்பிங் தொழிற் சாலையைச் சென்னையில் தொடங்கியிருக்கிறார்கள். அசோக் அமிர்தராஜ், சென்னையில் தமது பள்ளி பருவத்தின்போது, ஜேம்ஸ்பாண்ட் படங்களை, வகுப்புக்கு மட்டம் போட்டு விட்டு ஆர்வத்தோடு பார்ப்பாராம். "இப்போதோ ரிட்டையர் ஆன ஜேம்ஸ் பாண்டுகள் சீன் கானரி, ரோஜர் மூர் இருவரும் ஓய்வு நேரத்தில் என்னோடு டென்னிஸ் ஆட வந்து விடுகிறார்கள். இதுதான் தலைகீழ் மாற்றம் என்பதோ" என்று பெருமிதப்பட்டார். இனி "பாண்ட்! என் பெயர் ஜேம்ஸ்பாண்ட்" என்ற டயலாக் குடிசைப் பகுதிகளில் கூட பிரபலமாகி விடும்.




* தொடக்க விழாவில்

- ஸ்ரீ

பார்த்தா தெரியலையா?"

"புரியுது... யாரு வீட்டுக்குக் கொண்டு போக இங்க வந்திருக்கிய...?"

"நல்ல கதையா போச்சு. நம்ம தண்டபாணிக்குச் செண்பவத்தைப் பொண்ணு கேட்டு வந்திருக்கோம்."

"என்னது?" என்று ஆக்ரோஷமானாள் ராமக்கனி அம்மாள். இந்த நேரத்தில் செண்பகம் மட்டும் இருந்திருந்தால் என்னவெல்லாமோ நடந்திருக்கும்.

ராமக்கனி அம்மாள் கோபமாக அவளைப் பார்த்துவிட்டு அடுக்களைக்குச் சென்று ஒரு டம்ளரில் தண்ணீர் மொண்டு குடித்தாள். ஆத்திரம் தீருமாயென்ன?

"பேசாம வீட்டுக்குள்ள போனா என்ன அர்த்தம்?" என்றாள் சொகுசு.

"என்னது?" என்று கோபமாக வெளியே வந்த ராமக்கனி அம்மாவின், முகபாவனையைப் புரிந்து கொண்ட பலவேசமுத்து, "இங்க பாருங்க. பழசு நடந்தது நடந்து போச்சு. அத மறந்துடுவோம். எனக்கு ஏகப்பட்ட சொத்து இருக்கு. இந்தச் சொத்துக்கெல்லாம் தண்டபாணி மட்டும்தான் வாரிசு. என்னால கஷ்டப்பட்ட குடும்பம் உங்க குடும்பம். இப்ப என்னால நீங்க தலை நிமிர்ந்து நிக்கணும். உங்க குடும்பம் வளரணும். நான் செஞ்ச பாவத்துக்குப் பரிகாரம் செய்யணும். இதைவிட வேற வழி தெரியலை. என் பையனுக்குப் பொண்ணு கொடுக்க நான் நீன்னு ஆயிரம் பேரு லைன்ல நிக்காங்க. எனக்கு நீங்கதான் முக்கியம். நம்ம ரெண்டு பேரும் ஒண்ணுக்குள்ள ஒண்ணா இருக்கணும்னு ஆசைப்படுதேன்... எம் மவனுக்கும் செம்பவத்தைப் புடிச்சுப் போச்சு. அதனால ரொம்ப சீக்கிரமாவே, வார முகூர்த்தத்துல கல்யாணத்தை முடிச்சிடலாம்" என்றார்.

அவர் சொல்லி முடிக்கவும் அங்கே செண்பகம் வரவும் சரியாக இருந்தது.

(தொடரும்)

*எழுத்தாளர் அசோகமித்திரனைப் பற்றி டாகுமெண்டரி தயாரித்திருக்கிறார். அம்ஷன் குமார்.*

# அசோகமித்ரனுடன் ½ மணிநேரம்!

அசோகமித்திரனின் எழுத்தைப் போலவே இந்த டாக்குமெண்டரியும் யதார்த்தமாக அமைந்திருப்பதுதான் இயக்குனரின் வெற்றி. அவருடைய படைப்புகளில் வாசிக்கப்பட்ட அன்றைய செகந்தராபாத் - அவர் வசித்த லான்சர் பாரக்ஸ் வீடு, காற்று வீசும் டாங்க்பண்ட் என்று எல்லா இடங்களிலும் அவரை அழைத்துப் போய்ப் பேச வைத்திருக்கிறார் அம்ஷன். "இங்கே ஒரு ஹாஸ்பிடல் இருந்துதே?" என்று அவர் பேச ஆரம்பித்தவுடன் அவர் அறியாமலேயே காமிராவை ஆன் பண்ணி விட்டேன்!" என்றார் அம்ஷன்.

அவர் வீட்டுப் பசு மீண்டும் மீண்டும் பழைய எசமானரைத் தேடி ஓடி விடுவதையும், ஒவ்வொரு தடவையும் அதைத் தேடிப் பிடித்து வந்து வீட்டில் கட்டியதையும் அசோகமித்திரனே சொல்லக் கேட்டு, 'சுந்தர்' கதையைப் படித்தபோது உண்டான சிரிப்பு, திரையரங்கத்தில் மறுபடி எழுந்து அடங்கியது.

சா. கந்தசாமி, வாசந்தி, 'நர்மதா' ராமலிங்கம், தியோடர் பாஸ்கரன், திருப்பூர் கிருஷ்ணன், கௌரி ராம்நாராயண் என்று ஒவ்வொருவரும் அசோகமித்திரன் எனும் எழுத்தாளரைப் பல கோணங்களில் வியந்தபோது, அப்பா முழுநேர எழுத்தாளர் ஆனபின், சிரமத்தைக் குறைக்க அம்மா எப்படி உழைத்து அவர்களைப் படிக்க வைத்தார் என்பதை மகன் சொல்ல, குடும்ப நோக்கிலும் அவரைச் சித்திரித்தது டாகுமெண்டரியை முழுமை ஆக்கிற்று.

ஏற்கெனவே ஒரு பக்கம் உபயோகித்த தாள்களில்தான் அசோகமித்திரன் பெரும்பாலும் எழுதுவார். (ஒரு கதையின் கையெழுத்துப் பிரதி காணபிக்கப்பட்டபோது, மடித்துக் கிழிக்கப்பட்ட காலண்டர் தாளில் கூட அவர் எழுதியிருப்பது தெரிந்தது!"

அசோகமித்திரனின் படைப்புகளை அந்நிய மொழிகளில் படித்தவர்கள், அவர் எண்ணங்களோடு எளிதாக ஒன்றிப் போக முடிந்தது என்றால் அவற்றில் இழையோடிய மனித நேயமே காரணம்.



* அசோகமித்திரனுடன் அம்ஷன்குமார்

சிகந்தராபாதை விட்டு வந்து இருபத்தைந்து வருடங்களுக்குப் பிறகு '18ஆவது அட்சக்கோடு' நாவலை எழுதிய அசோகமித்திரன், "ஓர் ஊரில் தொடர்ந்து ஐம்பது வருடங்கள் வசித்தால், எழுதுவதற்கு நிறைய விஷயம் இருக்கும்" என்றார். ஆனால் முத்தாய்ப்பாக அமைந்த வாக்கியம்: "இன்னும் நூறு வருஷத்துக்கு எழுதலாம்!"

ராமு என்டோமெண்ட்ஸ் உதவியோடு திரையிடப்பட்ட இந்த டாகுமெண்டரிக்கு, ஆங்கில சப் டைட்டிலும் இருக்கிறது. சென்ற மாதம் லண்டன் வாழ் தமிழர்களுக்காக அம்ஷன் குமார் அங்கே இந்தக் குறும்படத்தைக் காண்பித்திருக்கிறார்.

- சாருகேசி

* சிகந்தராபாத் வீட்டில்...

# ‘கன் மசாலா’

**சா**ஹர் ஏர்போர்ட்டில் ஏழு பேரை துப்பாக்கி முனையில் மிரட்டினார் சி.ஐ.எஸ்.எப் ஜவான் ராம்நாராயண் நாம்தேவ். ஆட்டி வைத்து விட்டாரே! சனியன்று பிற்பகல் ஆரம்பித்த வெறியாட்டம் ஞாயிறு காலை தானே அடங்கியது? அதுவும் நாம்தேவின் உயர் அதிகாரி கராஞ்ச் சேகரின் உயிரைக் குடித்தபின்? இவர் கேட்ட லீவை அவர் கொடுக்க மறுத்துவிட்டார்... அதனால் அவருக்கு இவர் ஒரேயடியாக லீவு கொடுத்து விட்டார்! இந்த உலக வாழ்க்கையிலிருந்தே! இத்தனைக்கும் நாம்தேவ், சிறந்த ‘ட்ரில் காடெட்’, சிறந்த ஷூட்டருக்கான பரிசை வென்றவர். சினிமாப் பிரியர்; இரண்டு திரைக்கதைகள் வேறு எழுதி வைத்திருக்கிறார். மனநலம் குன்றிய தங்கையின் திருமணத்தை முடித்தபின்தான், தான் திருமணம் செய்து கொள்ளப் போவதாக அப்பா அம்மாவிடம் சொல்லி வைத்திருக்கிறார். மினிஸ்டரிலிருந்து மினி அதிகாரி வரை கெஞ்சியும், பிடித்து வைத்திருந்தவர்களை விடாதவர், கடைசியில் அவரது அம்மாவின் கண்ணீருக்குத்தான் மசிந்தார். உயர் அதிகாரிகளின் அலட்சியப் போக்கும். தன் கீழிருப்பவர்களைப் பிழிந்தெடுக்கும் கொடூர மனப்பான்மையும்தான், நாம்தேவ்களை உருவாக்குகின்றன என்கிறார்கள். துயரை விழுங்க தூக்க மாத்திரைகளை விழுங்கிக் கொண்டிருந்தாராம் நாம்தேவ். இனி விழுங்க முடியாது என்ற நிலையில், துப்பி விட்டார், துப்பாக்கியால்!



● பிபாஷாபாஸு

## நீயே பதில் சொல்லடி!



● சேகர் சுமன்

**து**ப்பாக்கியால் துன்பத்துக்குத் தீர்வு காண நினைத்த மற்றொரு காவல் துறைக்காரர், பிரஷாந்த் ஸாவந்த் - அஸிஸ்டெண்ட் போலீஸ் இன்ஸ்பெக்டர். அப்பாவிகளான மனைவியையும் மகனையும் கொன்றுவிட்டு, தன்னைத்தானே சுட்டுக் கொண்டு விட்டார். அடுத்த அறையிலிருந்த வயதான தாய் தந்தையருக்கு, வேலைப் பளுவாலும் உயர் அதிகாரிகள் தொல்லையாலும், தீராத வயிற்று வலியாலும் குடும்பத்துடன் உயிர் விடப் போவதாக ஒரு கடிதம் வேறு எழுதி வைத்திருக்கிறார்... அதே ஞாயிறன்று. காவல் துறையில் நடந்த

## வருகிறார் பத்மா?

சல்மான் ருஷ்டியின் நாவலைவிட சுடும் சூட்டைக் கிளப்பியிருக்கிறது அவரது காதலியான பத்மலக்ஷ்மியின் வரவு.

'லாக்மே இந்தியா ஃபேஷன்' வாரத்தில் கலந்து கொள்ள டெல்லி வர இருப்பதாக உறுதியாகாத அறிவிப்பு மட்டுமே இத்தனைக்கும் வந்திருக்கிறது. 'இத்தனை பெரிய நிகழ்ச்சியில் பங்கேற்பது தொழில் முறையில் எனக்குப் பெரிய அதிர்ஷ்டம்தான்' என்று வேறு ஸ்டேட்மென்ட் விடுத்திருக்கிறார் பத்மா.



"என்னோட முகமும் உடலமைப்பும் மேற்கத்திக்காரர்களுக்கு ரொம்பவும் பிடித்திருக்கிறது. நம்மூர்க்காரர்கள் ஒரு பாரம்பரிய, புராதன, அழகான களை என் முகத்தில் தெரிவதாக நினைக்கிறாங்க. என்னோட ப்ளஸ் பாயிண்டே அதுதான்" என்கிறார் பத்மா.

'பூம்' படத்தின் மூலம் பாலிவுட்டிலும் அறிமுகமாகயிருக்கிறார்.

இரு அவலங்கள்... பதினான்கு மிலியன் மக்களுக்கு நாற்பதாயிரம் போலீஸ் என்ற பற்றாக்குறை நிலையின் வேலை பயங்கரத்தையும், கீழ் நிலை ஊழியர்களுக்கு மனோதத்துவ நிபுணர்களின் முழு நேர ஒத்துழைப்புத் தேவையையும், அதிதீவிரமாகப் பறைசாற்றுகின்றன. வரவர தீவிரவாதிகள் கையில் இருக்கும் துப்பாக்கியைக் காட்டிலும் காவல் துறையினர் கையில் இருக்கும் துப்பாக்கியைப் பார்த்தால்தான் திடுக்... திடுக்கென்கிறது.

திடுக்... திடுக்... என்கிறது... இப்போது நினைத்தாலும் தாங்க முடியவில்லை என்று இதயத்தைப் பிடித்துக் கொள்கிறாரே 'மூவர்ஸ் அண்ட் ஷேகர்ஸ்' புகழ் சேகர் சுமன்? அட்லாண்டிக் சிட்டியில் நடந்த பாலிவுட் அவார்ட்ஸுக்கு காம்பியர் பண்ண நியூயார்க் சென்றிருந்த சேகர் சுமன், கிரான்கேருடன் ஓர் உணவகத்துக்குச் சென்றிருந்தாராம்! பக்கத்து டேபிளில் அமர்ந்திருந்த சில சீக்கியர்கள், இவர்களை 'பில்'லுக்கான கட்டணத்தைக் கொடுக்க விடாமல் தடுத்து, தாமே வலுக்கட்டாயமாகக் கொடுத்தனராம்.

சுமனின் மனைவி அல்கா, ஐந்நூறு டாலர்களுக்கு ஒரு கடையில் மெழுகு வர்த்தி வாங்கியபோது, யாரோ ஒரு முகம் தெரியாத இந்தியர், அந்தத் தொகையைத் தம் அபிமான ஹீரோவுக்காகத் தாமே கட்டுவேன் என அடம் பிடித்துக் கட்டினாராம். போதாக்குறைக்கு டாக்ஸி டிரைவரான இன்னொரு இந்தியர், ஓசியாக இவர்கள் ஹோட்டலில் இறக்கி விட்டாராம். இத்தனைக்கும் ஒருவர்கூடத் தங்கள் பெயரையோ விலாசத்தையோ தெரிவிக்கவில்லையாம். 'அவர்கள் பெருந்தன்மையின் முன் நான் ரொம்பச் சிறுத்து விட்டேன்' என்கிறார் சுமன். ஹூம், 'தர்ம' அடி அல்லவா? வலிக்கத்தான் செய்யும்.

வலிக்கத்தான் செய்யும், உண்மையால் அடித்தால். லாரா தத்தா, பிரியங்கா சோப்ரா, செலினா ஜெட்லி, பிபாஷாபாஸு போன்ற தற்கால ஹாலிவுட் கதாநாயகிகளெல்லாம், "பொய்யான சதி சாவித்ரி இமேஜை விட்டு விட்டு, 'மெய்'யான நிர்வாணங்களைக் காட்டுங்கள்; நாங்கள் முடிந்த வரையில் ஒத்துழைப்போம்; அழகிப் பட்டம் வாங்கிய எங்களுக்கு உடலை எந்த அளவு காட்டலாம் என்பது தெரியும்" என்கிறார்களே? பிபாஷாவின் 'ஜிஸம்' வெளிவந்த அதேநாள் ஐஸின் 'தில் காரிஷ்டா' வெளிவந்தது; 'ஜிஸம்' வென்றதற்குக் காரணம் பிபாஷாவின் 'போல்டு' ஸீன்கள் தானே, என்று வேறு சாதிக்கிறார்கள். ஹூம்... இந்த உடை விஷயம் ஐஸ்வர்யாவைப் பாடாய்ப்படுத்துகிறது. கான் விழாவில் அவர் போட்டுக் கொண்டு வந்த ஆடைகளெல்லாம் 'க்ளாஸி'யாக, இந்தியத் தனத்தைப் பிரதிபலிப்பதாக இல்லையாமே? போடாதே... போடு... என மாற்றி மாற்றித் தாக்கினால்? 'இந்த சொல்லடிகளுக்குப் பதிலை நீயே சொல்லடி' என்று ஐஸ்வர்யாவிடமே விட்டுவிட வேண்டியதுதான்.

- ஜெய்ஸ்ரீ ராஜ்

# ஸ்ரீ சனீஸ்வர பகவானின் ஸ்தலமான
# திருநள்ளாறில்
# வாரம் தோறும் சனிக்கிழமையன்று

நடைபெறும் அன்னதானப்பணியில் கலந்து கொள்ள அன்புடன் அழைக்கிறோம்.

**பேரன்புடையீர் ! வணக்கம். திரு நள்ளாற்றீஸ்வரப் பெருமான் தங்களுக்கு அனைத்து நலன்களையும் தந்தருளப் பிரார்த்திக்கிறோம்.**

**தருமை ஆதீனம் குரு மகா சன்னிதானம் ஸ்ரீலஸ்ரீ சற்குரு சண்முக தேசிக ஞான சம்பந்த பரமாச்சாரியார் சுவாமிகளின் அருளாசியுடன்** ஐந்தாண்டுகளுக்கு மேலாக திருஅண்ணாமலையில் பௌர்ணமி கிரிவலத்தில் தொடர்ந்து அன்னதானப்பணியில் ஈடுபட்டு வரும் **"ஆன்மீகம்"** தெய்வீக மாத இதழ் வாசக அன்பர்களின் வேண்டுகோளுக்கிணங்க, **ஒவ்வொரு சனிக்கிழமை தோறும்** திருநள்ளாறில் தெற்கு வீதியில் அமைந்துள்ள **தருமை ஆதீன கட்டளை மடத்தில்** அன்னதான திருப்பணி நடைபெறுகிறது. இத் திருப்பணியில் பங்கு கொண்டு சனிப்ரீதி செய்வித்து சகலஷேமங்களும் பெற அனைவரையும் அன்புடன் அழைக்கிறோம்.

திருநள்ளாறில் எள் எண்ணெய் தீபமேற்றி அங்கு வரும் அன்பர்களுக்கு எள் சாதத்துடன் அன்னதானம் செய்தால் சனீஸ்வர பகவான் மனம் மகிழ்ந்து எல்லாவகையான தோஷங்களிலிருந்தும் விடுவிப்பார் என்பது திண்ணம். அனைவரும் சகல சௌபாக்கியங்களையும் பெற வேண்டும் என்ற இறை சிந்தனையோடு **ஆன்மீக மாத இதழ்** சார்பாக நடத்தப்படும் **ஆன்மீக அன்னதான அறக்கட்டளை** என்ற அமைப்பின் மூலம் திருநள்ளாறில் அன்னதானம் செய்து நற்பலன்களைப் பெறுவோம்.

**தாங்கள் அளிக்கும் நன்கொடை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்ளப்படும்.**

- ரூ.500- அனுப்பும் அன்பர்களுக்கு, **ஆன்மீகம் மாத இதழ்** ஆறு மாதத்திற்கு அனுப்பி வைக்கப்படும்.
- ரூ.1000- அனுப்பும் அன்பர்களுக்கு, **ஆன்மீகம் மாத இதழ்** ஒரு வருடத்திற்கு அனுப்பி வைக்கப்படும்.
- ரூ.5000- அனுப்பும் அன்பர்களுக்கு, **ஆன்மீகம் மாத இதழ்** ஐந்து வருடங்களுக்கு அனுப்பி வைக்கப்படும்.

அன்னதானத்திற்கு நன்கொடையாக ரூ.500, ரூ. 1000, ரூ. 5000 அனுப்பும் அன்பர்களுக்கு வெள்ளெருக்கு வேர் விநாயகரும், ஸ்ரீ தர்பாரண்யேஸ்வரர், ஸ்ரீ பிராணேஸ்வரி அம்மன் படமும், ஸ்ரீ திருஞானசம்பந்தர் அருளிய கோளறு பதிகம் அடங்கிய நவக்கிரஹ சாந்தி புத்தகமும் அனுப்பி வைக்கப்படும்.

ரூ.5000 - அனுப்பும் அன்பர்கள் சார்பாக, ஒவ்வொரு சனிக்கிழமை அன்று திருநள்ளாறில் அன்னதானம் செய்து ஐந்து ஆண்டுகளுக்கு ஆன்மீகம் மாத இதழ் அன்பர்களுக்கு அனுப்பி வைக்கப்படும்.

எல்லோரும் எல்லா வளமும் பெற வேண்டும் என்ற இறை சிந்தனையோடு ஐந்தாண்டுகளுக்கு மேலாக **காசி, இராமேஸ்வரம், திருஅண்ணாமலை** ஆகிய புண்ணிய ஸ்தலங்களில் **அமாவாசை, பௌர்ணமி** நாட்களில் மாதா மாதம் நடைபெறும் அன்னதான திருப்பணிகளைப் போலவே **ஒவ்வொரு சனிக்கிழமை தோறும் திருநள்ளாறில் தெற்கு வீதியில் அமைந்துள்ள தருமை ஆதீன கட்டளை மடத்தில் அன்னதான திருப்பணி** தொடர்ந்து நடைபெறும்.

இந்த அன்னதான திருப்பணி (திருக்கோயிலுக்கு உட்பட்டது அல்ல) ஆன்மீகம் இதழ் வாசகர்களுக்காகவும், அன்னதான சேவையில் கைங்கர்யத் தொண்டு புரிந்து வரும் அனைத்து அன்பர்களுக்காகவுமே நடத்தப்படுகிறது.

- நன்கொடை அனுப்பும் அன்பர்கள் Aanmeeka Annadhana Charitable Trust, Chennai - 4 என்ற பெயரில் Cheque / D. D/ M. O. மூலம் கீழ்கண்ட முகவரிக்கு அனுப்பி வைக்கவும். அன்னதான திருப்பணிகளை நலம் தரும் இறைபணி சேவையாக "ஆன்மீக அன்னதான அறக்கட்டளை" திருநள்ளாறில் செய்து வர தங்களது ஒத்துழைப்பை என்றும் அன்புடன் வேண்டுகிறோம்.




**நன்கொடைகளுக்கு 80G பிரிவின் படி வரி விலக்கு உண்டு.**

Cheque / D. D/ M. O. அனுப்ப வேண்டிய முகவரி


## ஆன்மீக அன்னதான அறக்கட்டளை

**AANMEEKA ANNADHANA CHARITABLE TRUST (Regd.)**

68, Nadu Street,(Opp. Sri Kapaleeswarar Temple) Mylapore, Chennai - 600 004.

TEL : 2495 9302, E-mail:siva siva @ vsnl.net




சனிபகவான் யந்திரம்

**ஸ்ரீ சனிபகவானின் ஸ்தலமான திருநள்ளாறில் சனிக்கிழமையில் செய்யும், அன்னதான சேவையின் போது வாழை இலை போட்டு எள் சாதத்துடன் செய்யும் அன்னதானத்திற்கு இணையான தர்மமே நவக்கிரஹ பரிகாரங்களில் உயர்ந்ததாகும்.**

சபாபதி வாசலுக்கு வந்து ஸ்கூட்டரை எடுத்தபோது கடிகாரத்தைப் பார்த்தான். மணி ஒன்பது நாற்பது.

காலை ஒன்பது மணிக்குக் கூட்டம் என்று போட்டிருந்தார்கள். எந்தக் கூட்டம் குறிப்பிட்ட நேரத்தில் தொடங்குகிறது? பத்து மணிக்கு ஆரம்பித்தாலே பெரிய விஷயம்.

ஆனால் சபாபதியைப் போன்ற புலனாய்வுப் பத்திரிகை நிருபர்கள் கால நேரமெல்லாம் பார்த்துக் கொண்டு போக முடியாது. அதிலும் இது போன்ற கட்சி நிர்வாகிகள் கூட்டம் நடக்கும்போது, மேடையைத் தவிர பிற இடங்களில்தான் அதிகச் செய்திகள் கிடைக்கும். பொறுமையாகக் காத்திருக்க வேண்டும். எந்தக் கணத்திலும் ஒரு சுவாரசியம் நிகழ்ந்துவிடக் கூடும்.

ஆனால் இன்றைக்கு எதிர்பாராத விதமாகத் தாமதமாகிவிட்டது. சற்று வேகமாகவே ஸ்கூட்டரில் விரைந்தான்.

பிள்ளையார்கோயில் சந்தில் திரும்பும்போது எதிரே குணசேகரன் வந்தான். அவன் வேறொரு பத்திரிகையின் நிருபர். எல்லா இடங்களிலும் புகுந்து புறப்பட்டு வருகிறவன். மற்ற நிருபர்கள் அறிய முடியாத செய்திகளைக்கூட மோப்பம் பிடித்து விடுவான்.

சபாபதியைப் பார்த்ததும் நிற்கச் சொல்லி சைகை காட்டினான். சபாபதி ஸ்கூட்டரின் வேகத்தைக் குறைத்து அவனருகே நிறுத்தினான்.

"எங்கே போய்க்கிட்டிருக்கே?" என்று கேட்டான் குணசேகரன்.

"இன்னிக்கு த.ந.க.நிர்வாகிகள் கூடி அரசுக்கு எதிரா போராட்டத் திட்டம் அறிவிக்கிறாங்களே, தெரியாதா? நீ வரலியா?" என்று கேட்டான் சபாபதி.

"அங்கே நம்ம ராமு போயிருக்கான். நான் வேற ஒரு முக்கியமான விஷயமா போய்க்கிட்டிருக்கேன்" என்ற குணசேகரன் சபாபதியின் அருகே நெருங்கி வந்து, "ஆமா, தனியாவா போறே? எதுக்கும் கொஞ்சம் ஜாக்கிரதையா இருந்துக்க" என்றான்.

"நீ என்ன சொல்றே?" ஆச்சரியத்தோடு கேட்டான் சபாபதி. "த.ந.க.வோட நமக்கு எதுவும் பிரச்னை இல்லையே. அவங்க நம்ம மாதிரி பத்திரிகைக்காரங்களுக்கு ஆதரவாத்தானே நடந்துக்கறாங்க. நான் எதுக்கு ஜாக்கிரதையா இருக்கணும்?"

"அட, நான் அவங்களைச் சொல்லலைப்பா. அவங்க எப்பவுமே பத்திரிகைகளை மதிக்கிறவங்களாச்சே. போன இதழ்லே நீ எழுதின கட்டுரையை மறந்துட்டியா? 'ஆளுங்கட்சி எம்.எல்.ஏவின் அடாவடிகள்; மந்திரி மறைமுகத் தொடர்பு' அப்படீன்னு அட்டைப்படக் கட்டுரையா வந்துச்சே."

"ஓ. அதுவா?" சபாபதிக்கு நினைவுக்கு வந்துவிட்டது. அந்தத் தொகுதி எம்.எல்.ஏவின் அடாவடித்தனங்கள், கட்டைப்பஞ்சாயத்து, கள்ளச் சாராயம், பாதிக்கப்பட்டவர்களின் கண்ணீர்க் கதைகள், இவற்றோடு




அமைச்சருக்கு உள்ள தொடர்புகள், என்று அனைத்து விஷயங்களையும் ஆதாரத்தோடு கிழி கிழியென்று கிழித்திருந்தான். அந்தக் கட்டுரை அரசியல் வட்டாரத்தில் பெரும் பரபரப்பை உண்டாக்கியிருந்தது.

"ஆமா, அந்தக் கட்டுரைக்கு என்ன?" என்று கேட்டான் சபாபதி யோசனையோடு.

"என்னப்பா இப்படிக் கேட்கிறே? அந்த எம்.எல்.ஏ உன் மேல ஆத்திரமா இருக்காராம். அவரோட ஆளுங்க உன்னைத் தேடிக்கிட்டு இருக்கிறதா கேள்விப் பட்டேன். அதான் சொல்றேன். கொஞ்ச நாளைக்குத் தனியா எங்கேயும் போகாதே" சின்னக் குழந்தைக்குச் சொல்வது போலச் சொன்னான் குணசேகரன்.



"அட, விடுப்பா. நம்ம தொழில்லே அதெல்லாம் பார்த்தா முடியுமா?"

"அதுக்கில்லப்பா. கொஞ்சம் எச்சரிக்கையா இருந்துக்கன்னுதான் சொல்றேன். இல்லேன்னா உங்க நிருபர் ராஜனுக்கு ஆனது போல கைகால் முறிஞ்சு ஆஸ்பிட்டல்ல கிடக்கும்படியா ஆயிடப் போவுது."

குணசேகரன் உண்மையான அக்கறையோடுதான் சொன்னான். கடந்த இரண்டு ஆண்டுகளில் சபாபதி சார்ந்திருக்கிற 'வீரவாள்' பத்திரிகைக்கு ஏற்பட்ட தொல்லைகளும் துயரங்களும் கொஞ்சமா என்ன?

பத்திரிகை அலுவலகத்தின்மீது

வடுவூர் சிவ. முரளி

தாக்குதல், மின் சப்ளை நிறுத்தப்பட்டது. ஆசிரியர் மீதும் நிருபர்கள் மீதும் வழக்குகள், கைது, ஏஜெண்டுகள் மற்றும் விற்பனையாளர்கள் மீது தாக்குதல், பத்திரிகைக் கட்டுகள் தீ வைத்துக் கொளுத்தப்பட்டது என்று எவ்வளவோ தொந்தரவுகள். அத்தனையையும் கடந்து நெருப்பாற்றில் நீந்தி தான் வருகிறது 'வீரவாள்'.

அப்போதெல்லாம் வளர்ந்து வருகிற எதிர்க்கட்சியான த.ந.க துணை நின்றதை மறக்க முடியாது. த.ந.க தலைவர்கள் 'வீரவாள்' மீதான அடக்குமுறையைக் கண்டித்துக் கண்டனக் கூட்டங்கள் நடத்தினார்கள். சட்டமன்றத்தில் குரல் கொடுத்தார்கள். அக்கட்சியின் தொண்டர்களே பல ஊர்களில் 'வீரவாள்' பிரதிகளைத் தெருத் தெருவாகக் கொண்டு போய் விற்றார்கள்.

அவ்வளவு ஏன், இன்று அவர்கள் அறிவிக்கப் போகிற போராட்டத்துக்கு அவர்கள் சொல்லியிருக்கும் காரணங்களில் ஒன்று பத்திரிகைகள் மீதான அரசின் அடக்குமுறை.

"என்னப்பா சபாபதி, ஒரேயடியா யோசனையில மூழ்கிட்டே" என்று கேட்டபடியே அவனது தோளில் தட்டிய குணசேகரன், "சரிப்பா, அப்புறம் பார்க்கலாம்'' என்று விடை பெற்றுக் கொண்டு போனான்.

கூட்சி நிர்வாகிகள் கூட்டம் நடக்கவிருந்த கல்யாண மண்டபத்தை சபாபதி அடைந்தபோது ஆங்காங்கே தொண்டர்களும் பிரமுகர்களும் கும்பல் கும்பலாகப் பேசிக் கொண்டிருந்தார்கள். கோஷ்டிகளுக்குத்தான் குறைவில்லையே.

ஸ்கூட்டரை ஓர் ஓரமாக நிறுத்திவிட்டுக் காமிராவைத் தோளில் தொங்கவிட்டுக் கொண்டே கூட்டத்துக்குள் நுழைந்தான் சபாபதி.

அப்போது வேகமாக வந்து நின்ற காரிலிருந்து இறங்கினார் மணிவேலன். த.ந.கவின் முன்னணித் தலைவர்களில் ஒருவர். 'வீரவாள்' மீதான அரசின் அடக்குமுறையை எதிர்த்துக் குரல் கொடுத்தவர். அவரோடு சபாபதிக்கு ஓரளவு பரிச்சயம் உண்டு.

சுற்றி நின்றவர்களின் வணக்கங்களை ஏற்றுக் கொண்டு பார்வையைச் சுழலவிட்ட மணிவேலன் சபாபதியைப் பார்த்ததும்,




"அடடே, நீங்க 'வீரவான்' சபாபதி தானே? வாங்க'' என்றார் தோழமையுடன்.

சபாபதி கை கூப்பி வணக்கம் தெரிவித்தான்.

"நல்லா இருக்கீங்களா? ஆமா, போன வாரம் வந்த 'ஆளுங்கட்சி எம்.எல்.ஏ.வின் அடாவடிகள்' நீங்க எழுதினதுதானே? ரொம்ப நல்லா எழுதியிருந்தீங்க. தொடர்ந்து இதே மாதிரி அநியாயக்காரர்களின் முகமூடிகளைக் கிழியுங்க. அக்கிரமம் எங்கே நடந்தாலும் தைரியமா தட்டிக் கேளுங்க. நாங்க எப்போதும் உங்களுக்குத் துணை நிற்போம்" மேடையில் உரையாற்றுவது போல உணர்ச்சி பொங்கக் கூறினார் மணிவேலன்.

அந்த வார்த்தைகளைக் கேட்டபோது சபாபதிக்குப் புது ரத்தம் பாய்ந்தது போல ஓர் உணர்ச்சி உண்டாயிற்று. ஒரு பக்கம் பாராட்டும், மறுபக்கம் விரோதமும் வளரும் ஆபத்தான விளையாட்டு இந்தப் பத்திரிகைத் துறை.

ஆளுங்கட்சியினரால் தனக்கு மீண்டும் ஆபத்து என்று அவரிடம் கூறலாமா என்று ஒரு கணம் நினைத்த சபாபதி உடனே அந்த எண்ணத்தை மாற்றிக் கொண்டான். வேண்டாம். எந்தக் கட்சியுடனும் அதிகம் இழையக் கூடாது. நடுநிலை மாறக் கூடாது.

கூட்டம் ஆரம்பமாயிற்று.

மணிவேலன்தான் தலைமை வகித்தார். அரசின் ஊழல்களையும், மக்கள் விரோத நடவடிக்கைகளையும், எதிர்க்கட்சியினர் மற்றும் பத்திரிகையாளர்கள் மீதான அடக்குமுறை மூலம் ஜனநாயகத்தின் குரல் வளை நெரிக்கப்படுவதையும் கடுமையாகக் கண்டனம் செய்தார். அரசின் இந்த அராஜகங்களைக் கண்டித்து வருகிற ஐந்தாம் தேதி சாலை மறியல் போராட்டம் நடைபெறும் என்று அறிவித்தார்.

அதனையடுத்து ஒவ்வொரு பகுதியிலும் போராட்டத்துக்குத் தலைமை வகிப்பவர்கள் பட்டியலை இன்னொருவர் வாசித்தார்.

அப்போதே கொஞ்சம் சலசலப்பு தொடங்கியது. சில பெயர்கள் அறிவிக்கப்பட்டபோது இலேசான முணுமுணுப்புகள். அதிருப்திக் குரல்கள் எழுந்தன.

கட்சியில் இருக்கும் கோஷ்டிப் பூசல்களைப் பற்றி ஏற்கெனவே ஓரளவு அறிந்திருந்த சபாபதி உன்னிப்பாகக் கவனித்துக் கொண்டிருந்தான். சலசலப்பு கொஞ்சம் கொஞ்சமாக அதிகரித்தது.

“பதினாறாவது வட்டத்தின் சார்பாகப் போராட்டத்துக்குத் தலைமை வகிப்பவர் கே.ஆர். ஆனந்தன்.”

பட்டியலை வாசித்தவர் கடைசி வார்த்தையை முடிப்பதற்குள் கூட்டத்திலிருந்து ஒரு குரல் ஆவேசமாக எழுந்தது. “யார்யா அவன் ஆனந்தன்? கட்சிக்காக அவன் என்னய்யா பண்ணியிருக்கான்?”

“அதைக் கேக்க நீ யாருடா? கட்சிக்கு உண்மையா பாடுபட்டவங்க யாருன்னு தெரியுமா உனக்கு?'' என்று கேட்டது இன்னொரு குரல்.

இரு தரப்பிலும் ஆவேசக் குரல்கள் எழுந்தன. பெரிய மீசை வைத்திருந்த ஒருவர் எழுந்து மணிவேலனுக்கு முன்னால் கையை நீட்டி, “உங்களுக்கு வேண்டியவர்ங்கிற ஒரே காரணத்துக்காகத்தானே ஆனந்தனைப் போட்டிருக்கீங்க? காலங்காலமா கட்சிக்குப் பாடுபட்ட நாங்களெல்லாம் நேத்து வந்தவனுக்குப் பின்னால நிக்கணுமா?'' என்று சப்தம் போட்டார்.

மணிவேலன் கோபமாக ஏதோ சொன்னார். உடனே நாலைந்து பேர் அந்த மீசைக்காரர் மீது பாய்ந்தார்கள். வேட்டிகள் உருவப்பட்டன. செருப்புகள் சீறி எழுந்தன.

சபாபதியின் பத்திரிகையாள மூளை பரபரப்படைந்தது. அவசர அவசரமாகக் காமிராவை எடுத்துச் சரி பார்த்து அந்த மோதல் காட்சியைப் படம் பிடித்தான்.

''டேய்! பத்திரிகைக்காரன் படம் எடுத்துட்டான்.''

''வீரவாள்காரன்டா! அடிடா அவனை!''

நாலைந்து பேர் சபாபதி மீது பாய்ந்தார்கள். அவனைப் பிடித்துத் தள்ளினார்கள். காமிராவைப் பிடுங்க முயற்சித்தார்கள்.




அப்போது மணிவேலன் ஆவேசமாகக் கர்ஜித்தார். 'வீரவான்காரனா? ஆட்டைக் கடிச்சு மாட்டைக் கடிச்சு கடைசியில நம்மளையே பதம் பார்க்க ஆரம்பிச்சுட்டானா? உதைச்சுக் காமிராவைப் பிடுங்குங்கடா!''

சபாபதி ஒருகணம் திகைத்து நின்றான். மணிவேலனா இப்படிப் பேசுகிறார்? மறுகணம், காமிராவைக் காப்பாற்றக் கூட்டத்துக்குள் புகுந்து ஓடினான்.




## சிறுகதை, சிறுவாக்கியப் போட்டி
## பரிசுத் தொகை ரூ. 20,000

எழுத்தாள அன்பர்களுக்கு வணக்கம்.

தங்களுக்கு நல்ல, இலக்கியச் செய்தி ஒன்றைத் தெரிவிப்பதில் மகிழ்ச்சியடைகிறோம்.

56 ஆண்டுகளாக நடைபெற்று வரும் இலக்கிய மாத இதழ் 'அமுதசுரபி'. நாட்டிற்கு சிறுசேமிப்பின் முக்கியத்தைத் தெரிவித்து, உணர்த்த, சிறுசேமிப்பை மையக் கருத்தாக வைத்து சேமிப்பு பல்கிப் பெருக சிறுகதைப் போட்டியையும், சிறு வாக்கியப் போட்டியையும் (Slogans) அறிவிக்கிறோம்.

சிறுசேமிப்பின் அவசியத்தைத் தமிழக அரசு பல விதங்களில் விளம்பரப்படுத்துகிறது. என்றாலும் சிறுகதை மூலம் நாட்டு மக்களுக்குச் சேமிப்பின் சிறப்பை எடுத்துக் கூறவே சிறுகதைப் போட்டியை நடத்தவிருக்கிறோம். சமூக விழிப்புணர்வுக்குச் சிறுகதை - ஒரு திருக்குறள் போன்றது. **6 சிறுகதைகளுக்கு ரொக்கப் பரிசு மொத்தம் ரூ.17,000.** பரிசு பெற்ற சிறுகதைகள் அமுதசுரபி இதழில் வெளிவரும்.

சிறு சேமிப்பின் சிறப்பைக் கூறும் **10** சிறந்த சிறு வாக்கியங்களுக்கு ரூ. 3,000 பரிசுகள் உண்டு. புதுக் கவிதைகளுக்கும் பரிசுகள் உண்டு.

சிறுவாக்கியங்கள் ஒவ்வொன்றும் 6 சொற்களுக்கு மிகாமல் மக்கள் மனத்தில் பளிச்செனப் பதிய வேண்டும். சேமிப்பில் முதலீடு செய்யத் தூண்ட வேண்டும். **ஜூன் 30ஆம் தேதிக்குள் கதைகளை / சிறு வாக்கியங்களை** அனுப்ப வேண்டும். உங்கள் படைப்பாற்றல் நாட்டிற்குப் பயன்தரட்டும். நீங்கள் எத்தனை வேண்டுமானாலும் எழுதலாம். வெற்றி பெற வாழ்த்துகள்.

மேலும் விவரங்களுக்கு 'அமுதசுரபி' ஜூன் இதழைப் பாருங்கள்.

*அமுதசுரபி*, ஏ-7, இரண்டாவது அவென்யூ, அண்ணாநகர் கிழக்கு, சென்னை-600 102.
தொலைபேசி : **2628 6869, 2628 7879,** தொலைநகல் **2628 3366**

# சிவகாமியின் சபதம்

ஆறாம் அத்தியாயம்

## ஏகாம்பரர் சந்நிதி

பரதகண்டம் எங்கும் புகழ் பரவியிருந்த காஞ்சி ஏகாம்பரேசுவரர் கோவிலில் உச்சிக்கால பூஜை நடந்து கொண்டிருந்தது. அதற்கு அறிகுறியான ஆலாசிய மணியின் ஓங்கார நாதமும் பேரிகை முழக்கமும் கேட்டுக் கொண்டிருந்தன.

கோயிலுக்கு வெளியே கோபுர வாசலிலும் சந்நிதி வீதியிலும் கணக்கற்ற ஜனங்கள் நெருங்கி மொய்த்துக் கொண்டிருந்தார்கள். பல்லவ சக்கரவர்த்தி பரிவார சகிதமாக ஆலயத்துக்கு வந்திருந்ததுதான் அவ்விதம் ஜனக் கூட்டம் திரண்டிருந்ததற்குக் காரணமாகும்.

ஆலயத்துக்குள்ளே ஏகாம்பரநாதரின் சந்நிதி என்றுமில்லாத சோபையுடன் அன்று விளங்கிற்று.

வெள்ளிக்குத்து விளக்குகளில் ஏற்றியிருந்த பல தீபங்களின் ஒளியில், சந்நிதியில் நின்ற இராஜ வம்சத்தினரின் மணிமகுடங்களும் ஆபரணங்களும் ஜாஜ்வல்யமாய்ச் சுடர் விட்டுப் பிரகாசித்தன.

சந்நிதியில் ஒரு பக்கத்தில் இராஜ குலத்து ஆடவர்களும், மற்றொரு பக்கத்தில் அந்தப்புரத்து மாதர்களும் நின்றார்கள்.

அவர்கள் யார் யார் என்பதைச் சற்றுக் கவனிப்போம்.

எல்லாருக்கும் முதன்மையாகப் பல்லவ சாம்ராஜ்யத்தின் சக்கரவர்த்தி

**அமரர் கல்கி**

மாமல்ல நரசிம்மர், அறுநூறு வருஷமாக அவருடைய மூதாதையர் அணிந்த கிரீடத்தைத் தம் சிரசில் அணிந்து, கம்பீரமாக நின்றார். கரங்களைக் கூப்பி இறைவனை இறைஞ்சி வழிபட்டுக் கொண்டிருந்த நிலையிலும் அவருடைய தோற்றத்திலே பரம்பரையான இராஜ குலத்தின் பெருமிதம் காணப்பட்டது.

அவருக்கு இருபுறத்திலும் இலங்கை இளவரசர் மானவன்மரும் சேனாதிபதி பரஞ்சோதியும் நின்றார்கள். பரஞ்சோதிக்கு அடுத்தாற்போல், பல்லவ வம்சத்தின் மற்றொரு பிரிவைச் சேர்ந்தவனும், வேங்கி நாட்டை மீண்டும் புலிகேசிக்குப் பறி கொடுத்து விட்டுக் காஞ்சியில் வந்து அடைக்கலம் புகுந்தவனுமான அச்சுதவர்மன் அடக்க ஒடுக்கத்துடன் நின்றான்.

அவனுக்குப் பின்னால் கொடும்பாளூர்ச் சோழ வம்சத்தைச் சேர்ந்த செம்பியன் வளவனும், அச்சுத விக்கிராந்தனுடைய சந்ததியில் தோன்றிய உண்மையான வஜ்ரபாஹுவும் நின்றார்கள்.

இன்னும் பின்னால், பல்லவ சாம்ராஜ்யத்துப் பிரதம மந்திரி சாரங்கதேவ பட்டர், முதல் அமைச்சர் ரணதீர பல்லவராயர், மற்ற மந்திரி மண்டலத்தார், கோட்டத் தலைவர்கள் முதலியோர் ஒருவரையொருவர் நெருங்கியடித்துக் கொண்டு நின்றார்கள்.

நல்லது! எதிர்ப்பக்கத்தில் நிற்கும் பெண்மணிகளை இனி பார்க்கலாம். முதல் பார்வைக்கு, அந்தப் பெண்மணிகள் எல்லாரும் சௌந்தர்ய தேவதையின் பலவித வடிவங்களாகவே தோன்றுகிறார்கள்.

சிறிது நிதானித்துப் பார்த்துத்தான், அவர்களில் யார் இன்னவர் என்று தெரிந்து கொள்ள வேண்டியிருக்கிறது.

முதலில் காலஞ் சென்ற மகேந்திர சக்கரவர்த்தியின் பட்டமகிஷி புவனமகாதேவி சாந்தமும் பக்தியுமே உருக் கொண்டாற் போன்ற தெய்வீகத் தோற்றத்துடன் நின்றார்.

அவருக்கு அருகில் மாமல்ல சக்கரவர்த்தியின் தர்மபத்தினியும் பாண்டியராஜன் திருக்குமாரியுமான வானமாதேவி நின்றாள். சக்கரவர்த்தினியோடு இணைந்து நின்று இளவரசி குந்தவிதேவி தன் கரிய விழிகளினால் குறுகுறுவென்று அங்கு மிங்கும் பார்த்துக் கொண்டிருந்தாள்.

வானமாதேவிக்கு அருகில் பக்தியும் தூய்மையும் சௌந்தரியமுமே உருக்கொண்டவள் போல் நின்ற மற்றொரு பெண் தெய்வத்தைச் சிறிது கவனமாகப் பார்த்துக் கொள்ளுங்கள். சுமார் பதினெட்டுப் பிராயம் உடைய இந்த இளமங்கைதான் சோழ வம்சத்தின் கொடும்பாளூர்க் கிளையைச் சேர்ந்தவனான செம்பியன் வளவனுடைய திருப்புதல்வியான மங்கையர்க்கரசி, பிற்காலத்தில் பாண்டியன் நெடுமாறனின் தேவியாகி, ஞானசம்பந்தரை மதுரைக்குத் தருவித்து, சிவனடியார் கூட்டத்தில் என்றும் அழியாத புகழ் பெறப் போகிறவர். இன்னும் பல அந்தப்புரமாதரும் அங்கே இருந்தார்கள். அவர்களையெல்லாம் பற்றி நாம் தனித்தனியாகத் தெரிந்து கொள்வது அவசியமில்லையாதலால், மேலே செல்வோம்.

டண் டாண், டண் டாண் என்று ஆலாசிய மணி அவசர அவசரமாக அடித்தது. தம் தாம், தம் தாம் என்று பேரிகை பரபரப்புடன் முழங்கிற்று. சங்கங்கள், எக்காளங்கள், மேளங்கள் தாளங்கள், - எல்லாமாகச் சேர்ந்து சப்தித்து ஆலயத்தின் விசாலமான மண்டபங்களில் நாலாபுறமும் கிளம்பிய எதிரொலியுடன் சேர்ந்து மோதிய போது, நாதக் கடல் பொங்கி வந்து அந்தக் கோயிலையே மூழ்க அடித்தது போன்ற உணர்ச்சி அனைவருக்கும் உண்டாயிற்று.

ஏகாம்பரேசுவரருக்கு தீபாராதனை நடந்ததை முன்னிட்டு இவ்வளவு ஆரவார ஒலிகளும் எழுந்தன. அந்த ஒலிகளுக்கு மத்தியில் பரவசமடைந்த பக்தர்களின் தழுதழுத்த குரல்களிலிருந்து கிளம்பிய "நமப் பார்வதீ பதயே!", "ஹரஹர மகா தேவா!" முதலிய கோஷங்களும் ஏற்பட்டன.

தீபாராதனை சமயத்தில் பலர் பக்தியுடன் கைகூப்பி நின்றனர். பலர் கன்னத்தில் அடித்துக் கொண்டனர். இளவரசன் மகேந்திரனும் இளவரசி குந்தவியும் மற்றவர்களைப் பார்த்து விட்டுச் சடசடவென்று

தங்கள் கன்னத்தில் போட்டுக் கொண்டது. வெகு வேடிக்கையாயிருந்தது.

தீபாராதனை முடிந்ததும் குமார சிவாச்சாரியார் கையில் விபூதிப் பிரஸாதத்துடன் கர்ப்பக்கிருஹத்துக் குள்ளிருந்து வெளியே வந்தார்.

சக்கரவர்த்தியின் அருகில் வந்து நின்று, சிவாச்சாரியார் உரத்த குரலில் கூறினார்: "காலனைக் காலால் உதைத்தவரும், சிரித்துப் பரமெரித்தவரும், கஜமுகாசுரனைக் கிழித்து அவன் தோலை உடுத்தவரும், நெற்றிக் கண்ணில் நெருப்பை உடையவருமான திரிபுராந்தகரின் அருளால், பல்லவேந்திரருக்குப் பூரண வெற்றி உண்டாகட்டும்! புலிகேசியை வதம் செய்து வாதாபியை அழித்து வெற்றி வீரராய்த் திரும்புக! ஜய விஜயீபவா!"

இவ்விதம் சிவாச்சாரியார் சொல்லி விபூதிப் பிரஸாதத்தைச் சக்கரவர்த்தியின் கையில் கொடுத்தார். அதை மாமல்லர் பக்தியுடன் பெற்று நெற்றியிலே தரித்த போது, உள்ளே சிவலிங்கத்துக்கு அருகில் எரிந்து கொண்டிருந்த தீபம் திடீரென்று சுடர் விட்டு எரிந்து அதிக ஒளியுடன் பிரகாசித்தது. அப்படி எரிந்த தீபப்பிழம்பிலிருந்து ஒரு சுடர் சடசடவென்று சப்தத்துடன் கீழே விழுந்தது. சில விநாடி நேரம் பிரகாசமான ஒளி வீசி விட்டு மங்கி அணைந்தது.

இந்தச் சம்பவமானது, சக்கரவர்த்தி எந்த நோக்கத்துடன் கிளம்புகிறாரோ அந்த நோக்கம் நன்கு நிறைவேறும் என்பதற்கு ஒரு நன்னிமித்தம் என்ற எண்ணம் அங்கே கூடியிருந்த எல்லோருடைய மனத்திலும் ஏக காலத்தில் தோன்றவே, 'ஜய விஜயீபவா!'' "ஹர ஹர மகாதேவா!" என்ற கோஷங்கள் கிளம்பிக் கர்ப்பக் கிருகம், அர்த்த மண்டபம், மகாமண்டபம் எல்லாம் அதிரச் செய்தன.

பல்லவேந்திரரின் திக் விஜயத்துக்கு ஏகாம்பரநாதர் அநுமதி கொடுத்து விட்டார் என்ற செய்தி வெளி மண்டபங்களிலும் கோயில் பிராகாரங்களிலும் கோயிலுக்கு வெளியே வீதிகளிலும் கூடியிருந்த ஜனங்களிடையே பரவி எங்கெங்கும், "ஹர ஹர மகாதேவா!" என்ற கோஷத்தைக் கிளப்பிற்று. அப்படிக் காஞ்சி நகரையே மூழ்கடித்த உற்சாக ஆரவார ஜயகோஷத்தில் கலந்து கொள்ளாமல் மௌனம் சாதித்தவன் ஒருவனும் அந்தக் கூட்டத்தில் இருந்தான். அவன் பல்லவ சக்கரவர்த்தியின் ரதசாரதியான கண்ணபிரான்தான்.

## ஏழாம் அத்தியாயம்

# கண்ணனின் கவலை

கோபுர வாசலில் அழகிய அம்பாரிகளுடன் பட்டத்து யானைகள் நின்றன. அரண்மனையைச் சேர்ந்த தந்தப் பல்லக்குகளும் தங்கப் பல்லக்குகளும் பளபளவென்று ஜொலித்துக் கொண்டிருந்தன. சக்கரவர்த்தியின் அலங்கார வேலைப்பாடமைந்த ரதமும் இரண்டு அழகிய வெண்புரவிகள் பூட்டப் பெற்று நின்றது.

குதிரைகளின் கடிவாளத்தை இழுத்துக் கொண்டு கண்ணபிரான் தன் ஆசனத்தில் உட்கார்ந்திருந்தான். அவனுடைய முகத்தில் என்றுமில்லாத கவலை குடி கொண்டிருந்தது.

அந்த அழகிய தங்க ரதத்தையும் அழகே வடிவமாய் அமைந்த உயர் சாதிப் புரவிகளையும் பார்ப்பதற்காக ஜனங்கள் ரதத்தைச் சூழ்ந்து நின்றார்கள்.

அவர்களில் ஒருவன், "என்ன, சாரதியாரே! முகம் ஏன் வாட்டமாயிருக்கிறது?" என்று கேட்டான்.

கண்ணன் அந்தக் கேள்விக்கு மறுமொழி ஒன்றும் சொல்லவில்லை.

அப்போது பக்கத்தில் நின்ற இன்னொருவன், "கவலைக்குக் காரணம் கேட்பானேன்? நாளைக்குப் போர்க்களத்துக்குப் புறப்பட வேண்டுமல்லவா! பெண்சாதி



பிள்ளையை விட்டு விட்டுப் போக வேண்டுமே என்ற கவலைதான்!" என்றான்.

இதைக் கேட்டதும் கண்ணபிரானுடைய கண்கள் நெருப்புத் தழல் போல் சிவந்தன. கையிலிருந்த குதிரைச் சாட்டையை - அந்த உயர் சாதிக் குதிரைகள் மேல் என்றும் உபயோகிக்க நேராத அலங்காரச் சாட்டையை - மேற் கண்டவாறு சொன்ன ஆளின் மீது கண்ணன் வீசினான்.

நல்லவேளையாக அந்த மனிதன் சட்டென்று நகர்ந்து கொண்டபடியால் அடிபடாமல் பிழைத்தான். சற்றுத் தூரத்தில் நின்றபடியே அந்த விஷமக்காரன், "அப்பனே! ஏன் இத்தனை கோபம்? உனக்கு யுத்தகளத்துக்குப் போக விருப்பமில்லா விட்டால் ரதத்தை என்னிடங் கொடேன்! நான் போகிறேன்!" என்றான்.

அதற்குள் அவன் அருகில் நின்ற இன்னொருவன், "அடே பழனியாண்டி! எதற்காகக் கண்ணபிரானின் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொள்கிறாய்? அவனைச் சக்கரவர்த்தி நாளைக்குப் புறப்படும் சேனையுடன் யுத்தகளத்துக்குப் புறப்படக் கூடாது என்று சொல்லி விட்டாராம். அது காரணமாகத்தான் அவனுக்குக் கவலை!" என்று சொல்லவும், பக்கத்தில் நின்றவர்கள் எல்லோரும் 'த்ஸெள' 'த்ஸெள' 'அடடா' 'ஐயோ! பாவம்!' என்று தங்கள் அநுதாபத்தைத் தெரிவித்துக் கொண்டார்கள்.


லயத்திலிருந்து வெளிவந்த புவனமகாதேவி முதலியவர்களைக் கண்ணபிரான் அரண்மனையிலே கொண்டு போய்ச் சேர்த்துவிட்டுத் தன் வீட்டுக்குத் திரும்பினான்.

குதிரைகளைக் கொட்டடியில் விட்டுத் தட்டிக் கொடுத்துவிட்டு கண்ணன் தன்னுடைய வீட்டுக்குள் நுழைந்தபோது, அங்கே விநோதமான ஒரு காட்சியைக் கண்டான்.

கண்ணனுடைய மகன் பத்து வயதுச் சிறுவன், கையில் ஒரு நீண்ட பட்டாக் கத்தியை வைத்துக் கொண்டு, அப்படியும் இப்படியும் சுழற்றிக் கொண்டிருந்தான். அவ்விதம் அவன் கத்தியைச் சுழற்றிய போது, ஒவ்வொரு சமயம் அவனுடைய முகமானது ஒவ்வொரு தோற்றத்தைக் காட்டியது.

சில சமயம் அந்தப் பால்வடியும் முகத்தில் கோபம் கொதித்தது. சில சமயம் அந்த முகம் நெருக்கடியில் சிக்கிக் கஷ்டப்படுவதைக் காட்டியது. சில சமயம் எதிரியை வெட்டி வீழ்த்தியதனால் ஏற்பட்ட குதூகலத்தை அந்த முகம் உணர்த்தியது!

இவ்விதம் அந்தச் சிறுவன் கத்தியைச் சுழற்றி யுத்த விளையாட்டு விளையாடுவதைச் சற்றுத் தூரத்தில் உட்கார்ந்திருந்த கமலி வெகு உற்சாகத்துடன் பார்த்துக் கொண்டிருந்தாள்.

அவளுக்குத் தெரியாதபடி சப்தமின்றி வீட்டுக்குள்ளே வந்த கண்ணபிரான் மேற்படி காட்சியைப் பார்த்ததும் முதலில் அவனுடைய முகத்தில் சந்தோஷப் புன்னகை உண்டாயிற்று. புன்னகை ஒரு கணத்தில் மாறி முகச் சுளுக்கம் ஏற்பட்டது.

கோபமான குரலில், "முருகையா! நிறுத்து இந்த விளையாட்டை!" என்று கண்ணபிரான் அதட்டியதைக் கேட்டதும் சிறுவன் பிரமித்துப் போய் நின்றான்.

கமலியும், வியப்பும் திகைப்புமாகக் கண்ணனைப் பார்த்தாள்.

"தலையைச் சுற்றிக் கத்தியை வீசி எறி! குதிரை ஓட்டும் சாரதியின் மகனுக்குப் பட்டாக்கத்தி என்ன வந்தது கேடு? வேண்டுமானால் குதிரைச் சாட்டையை வைத்துக் கொண்டு விளையாடு! கத்தியை மட்டும் கையினால் தொடாதே! தெரியுமா?" என்று கண்ணன் கர்ஜனை புரிந்தான். இதைக் கேட்ட சிறுவன் கத்தியை இலேசாக தரையில் நழுவ விட்டுக் கமலியை அணுகி வந்து அவளுடைய மடியில் உட்கார்ந்து தேம்பித் தேம்பி அழத் தொடங்கினான்.

கமலி, "இது என்ன கண்ணா! குழந்தையை எதற்காக இப்படி அழச் செய்கிறாய்? நாளைக்கு நீ யுத்தகளத்திற்குப் புறப்பட்டாக வேண்டும். திரும்பி வர எத்தனை நாள் ஆகுமோ, என்னவோ?" என்றாள்.

"கமலி! அந்த ஆசையை விட்டு விடு! உன் புருஷன் போர்க்களத்துக்குப் போகப் போவதில்லை. குண்டுச் சட்டியில் குதிரை ஓட்டிக் கொண்டு நான் காஞ்சி நகரத்திலேயேதான் இருக்கப் போகிறேன். சக்கரவர்த்தியின் கட்டளை அப்படி!" என்றான் கண்ணன்.

கமலியின் முகத்தில் அப்போது சொல்லி முடியாத ஏமாற்றத்தின் அறிகுறி காணப்பட்டது.

"இது ஏன் கண்ணா? சக்கரவர்த்தி எதற்காக உன்னை இப்படி வஞ்சனை செய்தார்? கால் ஒடிந்த ஆயனச் சிற்பியைக் கூடப் போர்க்களத்துக்கு அழைத்துப் போகிறாராமே?" என்று கேட்டாள்.

"இராமர் வானர சைனியத்தோடு இலங்கைக்குப் போனாரே, அப்போது அந்த

இலங்கைத் தீவைச் சமுத்திரத்தில் அமிழ்த்தி விட்டு வந்திருக்கக் கூடாதா?" என்றான் கண்ணபிரான்.

"என்ன இப்படிப் புதிர் போடுகிறாய்? இராமர் இலங்கையைச் சமுத்திரத்தில் அமிழ்த்தாததற்கும் நீ போருக்குப் போகாத தற்கும் என்ன சம்பந்தம்?" என்றாள் கமலி.

"சம்பந்தம் இருக்கிறது. இலங்கை அப்போது சமுத்திரத்தில் மூழ்கியிருந்தால், அந்த ஊர் இளவரசர் இப்போது இங்கே வந்திருக்க மாட்டார் அல்லவா? அவருக்கு ரதம் ஓட்டுவதற்காக நான் இங்கே இருக்க வேண்டுமாம்! சக்கரவர்த்தியின் கட்டளை!"

"ஆஹா! அப்படியானால் மானவன்மரும் யுத்தத்துக்குப் போகப் போவதில்லையா? நமது சக்கரவர்த்தியும் அவரும் சிநேகிதம் என்று சொல்கிறார்களே?"

"பிராண சிநேகிதந்தான். அதனாலே தான் இந்தத் தொல்லை நேர்ந்தது. மானவன்மர் போர்க்களத்துக்கு வந்து அவருடைய உயிருக்கு அபாயம் நேர்ந்து விட்டால், இலங்கையின் இராஜவம்சம் நசித்துப் போய் விடுமாம். மானவன்மருக்கு இன்னும் சந்ததி ஏற்படவில்லையாம். ஆகையால், இலங்கை இளவரசர் போருக்கு வரக் கூடாதென்று சக்கரவர்த்தியின் கட்டளை. அவருக்காக என்னையும் நிறுத்திவிட்டார்!"

"இதுதானே காரணம்? அப்படியானால், நீ கவலைப் பட வேண்டாம். கண்ணா! கூடிய சீக்கிரத்தில் இலங்கை இளவரசரும் நீயும் போருக்குப் புறப்படலாம்!" என்றாள் கமலி.

"அது என்னமாய்ச் சொல்லுகிறாய்?" என்று கண்ணபிரான் சந்தேகக் குரலில் கேட்டான்.

"காரணத்தோடுதான் சொல்லுகிறேன். இலங்கை இராணிக்குச் சீக்கிரத்தில் குழந்தை பிறக்கப் போகிறது."

"ஓகோ! இலங்கை இளவரசிக்கு உடம்பு சௌக்கியமில்லை என்று சொன்னதெல்லாம் இதுதானா?"

"ஏகாம்பரேசுவரா! இலங்கை இளவரசிக்குப் பிறக்கும் குழந்தை, ஆண் குழந்தையாய்ப் பிறக்கட்டும்!" என்று கண்ணன் ஏகாம்பரர் ஆலயம் இருந்த திக்கு நோக்கிக் கைகூப்பி வணங்கினான்.

(தொடரும்)

## அருள்வாக்கு

'அபரிக்ரஹம்' என்பதைப் பெரிய தர்மமாக சாஸ்திரங்களில் சொல்லியிருக்கிறது. 'பரிக்ரஹம்' என்றால் உடைமை சேர்த்துக் கொள்வது; அப்படிச் சேர்த்துக் கொள்ளாமலிருப்பதே 'அபரிக்ரஹம்.' 'நீ ஜீவிப்பதற்கு எது அத்யாவச்யமோ, அதற்கு அதிகமாக ஒரு துரும்பு கூடச் சேர்த்துக் கொள்ளாதே' என்பது தான் அபரிக்ரஹ தர்மம். இதை யோக சாஸ்திரத்தில் ஸாதகன் அடிப்படையாகக் கொள்ள வேண்டிய ஐந்து 'யம'ங்களிலேயே ஒன்றாகப் பதஞ்ஜலி (யோக ஸூத்ரத்தில்) சொல்லியிருக்கிறார். 'யமம்' என்றால் அடக்கி வைப்பது. மஹாபாபிகளையும் அடக்கி வைத்துத் தண்டிப்பதால் யமனுக்கு அப்படிப் பெயர். மனஸை அடக்குகிறதற்குப் பதஞ்ஜலி யோகஸூத்ரம் எழுதினார். அதிலே ஐந்து யமங்களாக அஹிம்ஸை, ஸத்யம், அஸ்தேயம் (திருடாமை), பிரம்மசர்யம் ஆகிய வற்றோடு அபரிக்ரஹத்தையும் சொல்லியிருக்கிறது. 'அது வேணும், இது வேணும்' என்று பொருளைச் சேர்த்துக் கொள்கிற ஆசை அடங்கணும் என்றே இதைச் சொல்லியிருக்கிறார். இந்த ஆசை அடங்கினால், பணத்தாசை, அதற்காக எந்த தேசத்துக்கு வேண்டுமானாலும் போய் என்ன தொழில் வேண்டுமானாலும் செய்யலாம் என்ற பறப்பு, எந்தப் பொய் புரளி வேண்டுமானாலும் பண்ணிப் பணம் பண்ணலாம் என்ற அரிப்பு எல்லாமே போய்விடும்.



ஜீவாதாரத் தேவைக்கு ஜாஸ்தியாக எதைச் சேர்த்துக் கொண்டாலும் அது கொள்ளையடித்து வைத்துக் கொள்கிற தோஷம்தான் என்று கருதி, அபரிக்ரஹ தர்மத்தைப் பின்பற்ற முயல வேண்டும்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ
சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய சுவாமிகள்

## ஊர்க்குருவி



* சீனியர் பாப்பாக்கள்!

# செட் இல்லை, லொகேஷன் இல்லை, –ஓர் அசத்தல் படம்!



* ஏஞ்சலினா ஜூலி

தலையிலிருந்த தொப்பியைக் கழற்றிவிட்டு அதைக்கொண்டே விசிறிக்கொண்டது, கொஞ்ச நாளாய் காணாமல் போயிருந்த ஊர்க்குருவி.

"அப்பப்பா என்ன வெயில்! என்ன வெயில்........ஸ்.ஸ்.."

"ஏ.சி.க்குள்ள வந்தபிறகும் வியர்க்குதா?"

"உங்களுக்கென்ன உள்ளுக்குள்ள உட்கார்ந்து ஜாலியா நெட்லேயும், டி.வி.யிலயும் நியூஸ் மேஞ்சிட்டு இருக்கீங்க? அலையறவன் என் பாடு உங்களுக்கு எப்படித் தெரியும்?"

"அதுவும் சரிதான்....சரி நியூஸைச் சொல்லு"

"ரேடியோ மிர்ச்சி, எஃப்.எம் துவக்க விழாவுக்குப் போயிருந்தேன். தாஜ் ஹோட்டல் பால் ரூம் வாசல்லயே ஏகப்பட்ட மிர்ச்சி (மிளகாய் வத்தல்) மூட்டை"

"எதுக்கு?"

"ஆங்... அவ்வளவையும் அரைச்சு உன் கண்ணுல ஊத்த. என்னன்னு சொல்ல விடுவியா...

இன்டர்வெல் கட் பண்ணிட்டு...! ஒரு புதுமைக்காக அப்படிப் பண்ணியிருக்காங்க. வந்தவங்களுக்கெல்லாம் ஒரு கொத்து மிர்ச்சியைக் கொடுத்து 'இந்தாங்க'ன்னு சொல்ல, ஆடிப் போய்ட்டாங்க.''

''அடடா...''

''நடிகை ஜோதிகா துவக்கி வைக்கறாங்கன்னு சொன்னாங்க. சுத்திச் சுத்தித் தேடிப் பார்த்தும் ஜோதிகாவைக் காணலை. திடீர்னு 'லைட்' டெல்லாம் ஆஃப் ஆக, கும் மிருட்டு. இருட்டுக்குள்ளயிருந்து 'குண்டு குண்டு குண்டுப் பெண்ணே' பாட்டு ஒலிக்க, அந்த அரங்கத்தோட ஒரு ஓரத்துல டிராலி ஒன்று மெதுவா வந்தது. அந்த இடத்துககு மட்டும் இப்ப வெளிச்சம் ரவுண்ட் ஷேஃப்ல விழ, அட! படத்துல பார்த்த ஜோதிகாதானா இதுன்னு சந்தேகம் வந்துட்டு, அவ்வளவு 'ஸ்லிம்'. ஜோதிகாவும் டைம்ஸ் ஆஃப் இந்தியா எம்.டி வினித் ஜெயினும் டிராலில வந்தாங்க. மொத்தக் கூட்டமும் அசந்து போச்சு போ!''

''சரி இதுல டைம்ஸ் ஆஃப் இந்தியா வினித் ஏன் வந்தாரு?''

''அடே, இந்த ரேடியோ மிர்ச்சி எஃப்.எம். அவங்களோடதுதான். ஏற்கெனவே வடநாட்டுல இந்த மிர்ச்சியை அலையவிட்டு ரெஸ்பான்ஸைப் பார்த்துட்டு, இப்ப தமிழகத்துலயும் ஆரம்பிச்சிருக்காங்க.''



• 'தனிமை' டீம்



• மிர்ச்சி

''சென்னையில அவங்க பத்திரிகை ஆரம்பிக்கப் போறதால்ல செய்தி வந்தது?''

''அதப்பத்திதான் கேட்டேன்... மிர்ச்சியைப் பற்றிக் கேளுங்களேன்னுட்டாங்க.''

''ஓஹோ....''

''அப்புறம் ஜார்ஜ் புஷ்ஷும், டோனி ப்ளேயரும் நடந்து வர்ற ஸ்டைலைப் பார்த்துட்டு நம்ம தலைவர்களை நினைச்சா வருத்தமாத்தான் இருக்கு''.

''ஐயையோ... ஏன் இவ்வளவு ஃபீல் பண்ற குருவியே''.

''வேற என்ன பண்ண? நம்ம தலைவர்களோட வயசைப் பாருங்களேன். ஜோதிபாசுதான் சீனியர், வயசு 88. அடுத்த இடத்துல கேரளாவைச் சேர்ந்த கருணாகரன் 85. நம்ம பிரதமருக்கு 79, அதே வயசுதான் கலைஞருக்கும். ராமகிருஷ்ண ஹெக்டே 76, சந்திரசேகர் 76, பால்தாக்கரே 75, அத்வானி 74, ஜார்ஜ் பெர்னாண்டஸ் 73, அப்துல்கலாம் 72, இப்படி எழுபது வயசுக்கு மேலதான் நம்ம அரசியல் வாதிகளுக்கு வாழ்வே. இளைஞர்களுக்கு வழிவிடலாமில்லையா?''

''அரசியல்ங்கறது சாதாரண விஷயமில்ல குருவியே? வயசாக ஆகத்தான் அனுபவம் கிடைக்கும். அந்த அனுபவத்தை வச்சுத்தானே அரசியல் பண்ண முடியும்?''

''போங்கப்பா, இதையே இன்னும் எத்தனை ஜென்மத்துக்குச் சொல்வீங்களோ? ஆங்... ஹாலிவுட் விஷயத்துக்கு வர்றேன்.''




• வினித்தும் ஜோதிகாவும்

"ஹாலிவுட்டா?"

"ஆமாப்பா.... கோடம்பாக்கம் கம்ப்ளீட்டா காலி. எல்லாரும் கலை நிகழ்ச்சிகளுக்காக லண்டன், துபாய் போய்ட்டாங்களே. அதான் ஹாலிவுட்!"

"சொல்லு,சொல்லு..."

"நம்ம ஏஞ்சலினா ஜூலி இல்ல..."

"என்னமோ உன் பக்கத்து வீட்டுல காபிதூள் கடன் கேட்கறவ மாதிரி நம்ம ஏஞ்சலினாங்கற?, ஹாலிவுட் நடிகைன்னு சொல்லு..."

"இடையில கட் பண்ணாதடா, 'மூட் போயிடும்' அவங்களோட லேட் டஸ்ட் படம் 'வோர்ல்டு ஆஃப் டுமாரோ'. இந்தப்படத்துல 'உலகத் திரைப்பட வரலாற்றில் முதன் முறையாகங்கற மாதிரி' ஒரு விஷயம் பண்ணியிருகாங்க."

"அதென்ன விஷயம்?"

"நடிகர்கள் எல்லோரும் வெள்ளை சுவருக்கு முன்னால நின்னுதான் நடிச்சிருக்காங்க. எந்த லொகேஷனுக்கும் போயி படம் பண்ணலையாம். ஒரு செட்கூடக் கிடையாது. டேபிள் சேர் கூட இல்லையாம். படம் முழுவதையும் ஷூட் பண்ணி முடிச்சுட்டு லொகேஷனை கம்ப்யூட்டர் மூலமா பொருத்தியருககாஙகளாம்!"

"அட அசத்தலா இருக்கே"






"ஆமாம்பா, அதுதான் ஹாலிவுட், 1939ம் வருஷம் நியூயார்க்ல நடந்த உலகக் கண்காட்சிக்கு ஒரு பெரிய அச்சுறுத்தல் வந்ததாம். அதே மிரட்டல் வில்லன்களைக் கண்டுபிடிச்சு அழிக்கிறதுதான் கதை."

"பழைய நிகழ்ச்சிகளோட கற்பனை கலந்து படம் எடுக்கறது ஹாலிவுட்ல ஃபேஷனாகிப் போச்சு."

"இன்னொரு விஷயம் கேளு, தமிழக மக்கள் மெகா சீரியல்களுக்குள்ள முங்கிக் கிடக்க, அமெரிக்கத் தமிழர்கள் மேடை நாடகங்களின் பக்கம் போய்கிட்டிருக்காங்க. சமீபத்துல கலிபோர்னியா தமிழ்ச் சங்கத்துக்காக ஆனந்த் ராகவ் எழுதி தீபா ராமானுஜம் குழுவினர் மேடையேற்றினாங்க 'தனிமை'ங்கற நாடகத்தை"

"ஆனந்த் ராகவ்வா... நம்ம கல்கிலகூட புன்னகை பூமிங்கற தலைப்புல தாய்லாந்து பற்றி எழுதினாரே... அவருதானே?"

"ஆமா அவரேதான், 'தனிமை' தலைப்பிலேயே விஷயம் புரிஞ்சிரிக்குமே, மேடை நாடகத்திலேயும் தொழில் நுட்பம் இவ்வளவு புகுந்துட்டாங்கற அளவுக்கு ஆச்சர்யம்."

"அப்படியா"

"ஆமா... ரொம்ப நல்லாப் பண்ணியிருந்தாங்க. சரிப்பா, வெயில் குறைஞ்சுட்ட மாதிரி இருக்கு.. நான் வரட்டா" என்ற ஊர்க்குருவி, 'தேங்ஸ்' சொல்வதற்குள்ளேயே அவசரமாகப் பறந்தது.

# "உயிர் போய் வந்தது!"

அரசு பெண்கள் மருத்துவமனை அது. பிரசவ வலியோடு சேர்க்கப்பட்ட லதாரெட்டிக்கு அழகான ஆண் குழந்தை பிறந்தது. சிறிது நேரத்திலேயே அவரிடமும் அவரது உறவினர்களிடமும் குழந்தையைக் காட்டினார் டாக்டர். குழந்தை பிறந்த தேதி, நேரம், எடை, தாயின் பெயர், ஆண் போன்ற விவரங்கள் எழுதிய இரண்டு அட்டைகளை, குழந்தையின் கையில் ஒன்றும் லதா ரெட்டி கையில் ஒன்றுமாகக் கட்டினார்கள்.

முதல் குழந்தை ஆணாய்ப் பிறந்ததில் எல்லோருக்கும் ஏக சந்தோஷம். திடீரென்று இரண்டு நர்ஸ்கள் வந்தார்கள். குழந்தை எடை குறைவாக இருந்ததால் (I.4. இ.இ) இன்குபேட்டரில் வைத்துக் கவனிக்க வேண்டும் என்றார்கள். லதாரெட்டியும் அவரது உறவினர்களும் சம்மதித்தார்கள். தினமும் சென்று குழந்தையைப் பார்த்து வந்தார்கள்.

ஒரு வாரம் கழித்து ஒரு நர்ஸ் வந்தார். ரிஜிஸ்டரில் கையெழுத்து வாங்கினார். பிறகு குழந்தையை எடுத்து வந்து லதாரெட்டியின் அம்மா அஞ்சம்மாவிடம் "இந்தாங்க உங்க குழந்தை!" என்று கொடுத்துவிட்டு ஒன்றும் தெரியாதது போல சென்றுவிட்டார். ஆசையாகக் குழந்தையை வாங்கிப் பார்த்த லதாவுக்கு ஷாக்! அவள் கையிலிருந்தது பெண் குழந்தை!

இது ஏதோ தவறுதலாக நடந்த மாற்றமல்ல. அரசு மருத்துவமனையில் தெரிந்தே மாற்றியிருக்கிறார்கள். இந்த ஹைதராபாத் சம்பவம் பற்றி இந்தியா முழுதும் பரபரப்பு...

ஹைதராபாத்திலிருந்து சுமார் நாற்பது கி.மீ தூரத்திலிருக்கிறது ரங்கா ரெட்டி மாவட்டம். அங்குள்ள சின்ன கொல்ல பள்ளி என்ற கிராமத்தில் லதாரெட்டியைச் சந்தித்தோம்.

"கண்ணுக்கு முன்னாலேயே இப்படிப்பட்ட தவறு நடக்கும்போது எப்படிப் பொறுத்துக்கிட்டு இருக்க முடியும்? நர்ஸ், வார்டு பாய் எல்லார்ட்டயும் போய் சொல்றேன், 'இது என் குழந்தையில்லை, எனக்கு ஆண் குழந்தைதான் பிறந்தது'ன்னு. யாரும் கண்டுக்கலை. அந்த நேரத்துல டாக்டர் வேற இல்லை. எனக்கும், அம்மாவுக்கும் கண்ணீர்தான் கொட்டுது. அப்புறம், 'நான் போலீஸ்ல போய்ப் புகார் பண்ணப் போறேன்னு கிளம்பியதும், குழந்தையைக்

* குழந்தை கிடைச்சானே..! - லதா

# -அரசு ஆஸ்பத்திரி அவலம்!

கொடுத்த நர்ஸ் ஓடிவந்து, 'காலைல டாக்டர் வந்துடு வார். அவர்ட்ட கேளுங் கன்'னு சொன்னாங்க.

"இங்க வீட்லயிருந்த என் வீட்டுக்காரருக்குத் தகவல் சொன்னேன். எங்க உறவினர்களோட அவரும் வந்தாரு. ஆஸ் பத்திரியோட ரெசி டென்ட் டாக்டர்ட்ட போய் அப்பவே புகார் பண்ணினோம். அவர் ஒரு பெரிய குண்டைத் தூக்கிப் போட்டார்.



• ஐங்காரெட்டியும் லதாவும்

"உனக்குப் பிறந்தது பெண் குழந்தைதான். ஆண் குழந்தைன்னு உங்ககிட்ட தப்பா சொல்லிட்டாங்க. உங்க குழந்தையைத்தான் உங்களுக்குக் கொடுத் திருக்கோம்"னு சொன்னார். என்னமோ ஃப்ராடு நடக்குதுன்னு மட்டும் புரிஞ்சு போச்சு" என்ற லதாவை இடைமறித்து அவரது கணவர் ஐங்காரெட்டி பேசினார்.

"எனக்குப் பிறந்தது ஆண் குழந்தைதான். பெண் குழந்தையில்லை! அந்தக் குழந்தை கிடைக்கற வரை ஆஸ்பத்திரியை விட்டு நகர மாட்டேன்னு கண்டிப்பா லதா சொல்லிட்டா. உடனே நான் போலீஸ் ஸ்டேஷன்ல புகார் கொடுத்தேன். என்னோட பத்திரிகையாள நண்பர்ட்டயும் விவரத்தைச் சொல்ல, ஆஸ்பத்திரிக்குத் திரண்டு வந்துட்டாங்க.



• பேரப்புள்ள வந்துட்டான் - அஞ்சம்மா

"இதுக்கிடையில அந்தக் குழந்தையை என் மனைவி ஏற்காததால, வேறொரு ஆஸ்பத்திரிக்கு அனுப்பி கவனிக்க ஏற்பாடு பண்ணிட்டாங்க. போலீஸ் தொடர்ந்து விசாரணை நடத்திச்சு. ரெக்கார்டுகளை அலசிப் பார்த்தாங்க. எங்களுக்குக் குழந்தை பிறந்த சமயத்தில பிறந்த மற்ற குழந்தைகளைப் பற்றி தகவல் களைத் திரட்டி விசாரணை நடத்தினாங்க போலீஸ். அந்தச் சமயத்துலதான் எதிர் பாராதவிதமா ஒரு சம்பவம் நடந்தது. யாரோ ஒருத்தர் போலீஸுக்கு ஃபோன் பண்ணி, 'இங்க மெகபூபாங்கற பெண்ணுக்கு ஏற் கெனவே மூணு பெண் குழந்தைகள். நாலா வதா பிறந்ததும் பெண் குழந்தைன்னு சொன்னாங்க. ஆனா அவங்க வீட்ல ஆண் குழந்தை இருக்கு'ன்னு சொல்லியிருக்காங்க. போலீஸ் போய் விசாரிச்சப்போ மெகபூபா உண்மையை ஒப்புக்கிட்டாங்க. திரும்ப எங்க குழந்தை எங்களுக்கே வந்ததுல ரொம்ப மகிழ்ச்சியாயிருக்கோம். உயிர் போய் வந்த மாதிரி இருக்கு" என்கிறார் ஐங்காரெட்டி.

"இந்தக் குழந்தைத் திருட்டு ஆஸ்பத்திரி யில உள்ளவங்களோட அனுமதியோடத் தான் நடந்திருக்கணும். நான் கொஞ்சம் போராடுனதால என் குழந்தை கிடைச்சது. எத்தனை பேரை ஏமாத்திருப்பாங்கன்னு கவலையா இருக்கு. எப்படி இது நடந்த துன்னு போலீஸ் விசாரணை நடத்தினா லும்... இனிமே ஜென்மத்துக்கும் அரசு ஆஸ் பத்திரி பக்கமே தலைவச்சுப் படுக்க மாட் டேன்" என்கிறார் லதா ரெட்டி.

ஹைதராபாத்திலிருந்து
**எஸ்.சந்திரமௌலி**
படங்கள் : **சந்திரசேகர சிங்**

# படையும் சிரிக்கும்!

வெளியில தலை காட்டாம
இப்படி புற்றுலியே அடைஞ்சு கிடந்தா புற்று
நோய் வராம என்ன செய்யும்?

சீக்கிரம்
இன்னொரு
சட்டையை
உரிச்சுக் குடுங்க...
பாத்திரக்காரன்
போயிடப்
போறான்..!

பக்கத்து புற்றுப் பாம்புக்கு சினிமாவுல
நடிக்க சான்ஸ் கிடைச்சிருக்காம்.

அதான்
தலை
வால்
தெரியாம
துள்ளுதோ..?

என்னங்க, உங்க புற்றுக்கு வெளியில நாகராஜன்னு போர்டு வச்சிருக்கீங்க...?

நாகராஜன்

எந்தப் புற்றில எந்தப் பாம்பு இருக்குமோங்கற சந்தேகம் வராம இருக்கத்தான்...!

ஏன்யா உன் பாம்பு படம் எடுக்க மாட்டேங்குது...?

ரெண்டு படம் எடுத்து ஊத்திக்கிட்டதால, நொந்து போயிடுச்சுங்க.

நாம நல்ல பாம்பு ஜாதி... அதை மறந்துட்டு, நீ அந்தக் கட்டுவிரியனோட சுத்தறது எனக்குக் கொஞ்சம் கூடப் பிடிக்கலை.

-எம்.ஆர்.மூர்த்தி
கார்டூன் : பிள்ளை



**கோ**வில் பூஜை நடந்து கொண்டிருந்தது! பூஜை என்றால் விசேஷமாக ஒன்றும் நடந்துவிடாது. விளக்குச் சுடர் தலை தூக்கும்! தூபக்காலில் ஒளி மிளிரும். சிறுசுகள் தவ்வித் தவ்விக் குதித்து மணிக் கயிற்றைப் பிடித்து இழுத்தால், ஏழு மணிச்சப்தம் கடக் கடக்கென்று முட்டி மோதி முழங்கும்! மற்றபடி விசேஷம் ஒன்றுமில்லை. வாசலில் பந்தல், மணலில் சிறுசுகள் கூட்டம்! இன்று பிறை நிலவு நாள்! ஏழாம் பிறையோ எட்டாம் பிறையோ, இலேசாக வீசிய காற்றில் கோவில் மரம் குலுங்கிற்று! வசந்தியும் வாத்தியாரைப் போலவே இந்தக் காட்சியைப் பார்த்துக் கொண்டிருந்தாள்!

"இப்படி வாங்க" என்று ஜாடை காட்டினாள்.

"என்ன வசந்தி?"

"சொர்க்கம் சொர்க்கம்னு சொல்றாங்களே...!"

"ம்..."

"அங்க இப்படித்தான் காத்தும் பிறை நிலாவுமா இருக்குமா?"

"நான் கண்டேனா?"

"இந்த ராத்திரி மூச்சுடும் இங்கயே இருந்தா?"

"இருப்போம்."

"க்கும்."

"பேசாம சாமியக் கும்பிடு."

"எல்லாம்தான் சாமியக் கும்புடுதுக."

"பின்னே?"

அவள் வாத்தியாரைப் பார்த்தாள்.

"எல்லாம் மனசுலெ இருந்தா போதாதா!"

"உங்களுக்குச் சேதி தெரிஞ்சிருக்கும்னு நெனைச்சேன்."

"என்ன சேதி?"

"எங்க ஜாதி நாட்டாமை சொன்னார்."

வாத்தியார் குறுநகையோடு வசந்தியைப் பார்த்தார். எல்லாம் புரிந்து கொண்டாற்போல் ஒரு பிரகாசம்.

**அ**ன்று மாலை முளைப்பாரி ஊர்வலம். இன்றோடு திருவிழா முடிகிறது. கொட்டுச் சப்தம் நெருங்கிவிட்டது. அதே கொட்டுக்காரர்கள்தான். அதே அடி! பெட்ரோமாக்ஸ் லைட்டைத் தூக்கிக் கொண்டு வந்தவன் வாத்தியாரைப் பார்த்துச் சிரித்தான். இன்று தீப்பந்தங்கள் இல்லை. நிலாதான் இப்படிக் கொட்டுகிறதே! தெரு திருப்பத்திலே வசந்தியைப் பார்த்து விட்டார். வெங்கலச் சட்டியில் முளைப்பாரி. அந்தச் சிறு கழுத்து

# சுவாசிக்கத் தெரிந்தவர்கள்

## மினிதொடர்

## 3



குழைந்தது. குலவைச் சப்தமும் கும்மிப் பாட்டும் காதில்தான் விழுந்தன. இரண்டு கைகளையும்

பாரதிபாலன்

உயர்த்திப் பிடித்திருந்தாள் ஜாக்கெட்டில் வியர் வைத் தடம்! இன்றைக்கு ஆலீவ் பச்சையில் ஒரு பழைய பட்டுச் சேலை! நெற்றி வியர்த்தது.

உன்னைப் பார்க்கப் பார்க்க எனக்கு ஆசை! எனக்கு வேறு ஒன்றும் வேண்டாம். சும்மாவே நீ அழகு! கூட இந்தத் திருவிழா அழகும் சேர்ந்து கொண்டால்? இந்த நிலவு வெளிச்சத்தில் உன்

முகத்தைப் பார்க்கிறப்ப எனக்கு என்னவோ செய்கிறது! ஜிலுஜிலுவென்று என் நெஞ்செல்லாம் காற்று நிறைகிறது! உனக்கே தெரியாமல் ஓடி வந்து உன்னை அப்படியே இறுக்கிக் கொள்ள வேண்டும் போல் என் நெஞ்சு துடியாத் துடிக்கிறது! வசந்தா தலைச்சுமை அசையாமல் வாத்தி யாரைப் பார்த்தாள். முகமெல்லாம் முத்து முத்தாய் வியர்வை. அந்த பெட்ரோமாக்ஸ் விளக்குக்காரன் அவளுக்குப் பக்கமாகத்தான் நடக்கிறான். அந்த வெளிச் சம் பட்டு அவள் முகம் தகதகவென்றிருந்தது. வாத்தி யாருக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை. 'அவ் வளவு சந்தோஷம்! அவள் அவரைக் கடந்துவிட்டாள். அவள் முதுகு மட்டும் தெரிகிறது. பின்னாடியே போய் அவள் இடையில், ஒரு கை கொடுத்து கூடவே அணைத் துக் கொண்டு நடக்க வேண்டும் போல துறுதுறுப்பு!

தெருவில் மீண்டும் இருள். கொட்டுச் சப்தம் தேய்ந்து விட்டது. ஊர்வலம் ஆற்றுப் பாதையைத் தொட்டு விட்டது. வாத்தியார் குறுக்குச் சந்து வழியாக ஆற்றுப் பாதைக்குப் போய்விட்டார். அவர் நெஞ்சில் அந்த ருசி இன்னும் மாறவில்லை! ஆறு அமளிப்பட்டது! விவரம் தெரிந்த நாளாக இந்த ஆற்றைப் பார்த்துக் கொண்டுதான் இருக்கிறது! வயல் வெளியெல்லாம் பசுமை பொங்கித்தான் இருக்கிறது! முளைப்பாரி கரைக்கிறேன் என்று ஆற்றுக்கு வருவது முளைப்பாரி கரைக்க மட்டும் தானா? உண்மையில் உறவைச் சேர்க்கத்தான் இப்படி வருகிறது! காணாத உறவுகள் காணவும், நெருங்காத உறவு நெருங்கவும், இப்படி ஊர் முழுவதையும் வளைத்து, ஒன்று சேர்த்து விடுகிறது!

திரும்பி வரும்போது, மல்லன் தோட்டத்து வேலி பக்கம் வரும்போது தெய்வானையைப் பார்த்தார் வாத்தியார். அவள் இவரைப் பார்த்தும் பார்க்காததுமாய் நகர்ந்துவிட்டாள். சற்றுத் தூரம் நடந்தபின் இவரே பேசினார்.

"என்ன தெய்வானை, எப்படி இருக்க?"

"இருக்கோம்."

"இருக்கோம்னா?"

"நல்லா இருப்பவங்க இருப்பாங்க!"

"ஏன் இப்படிப் பேசுத?"

"அதான் ஊர் பேசுதே! படிச்சவுங்க. அதான் தூக்கி யெறிஞ்சு பேசுறீங்க. நாங்க படிச்சா இருக்கோம்...?"

"ந்தா எதுக்கு இப்ப?"

"நல்லதுக்குச் சொல்லுச்சு. அத பொல்லாததுனா?"

"என்னா நல்லது சொன்ன?"

"சுந்தரியக்கா மனசு எனக்குத் தானே தெரியும்."

"அவள எனக்குத் தெரியாதா?"

"தெரிஞ்சுதானா இப்படிப் போய் விழுறீங்க..."

"கெணத்துலெயா வுழுந்தாச்சு!"

"அது நிம்மதியத்த பாடு."

"என்னா சொல்றே!"

"நா ஒண்ணச் சொல்ல; அவ ஏங்கூட மல்லுக்கு வரவா?"

"எதுக்குச் சுத்தி வளைக் குறே..."

"நான் சொன்னா கேக்கவா போறீங்க..."

"சொல்லுன்னுதான சொல்றது"

தெய்வானை சுற்றும் முற் றும் ஒரு பார்வை பார்த்தாள். ரோதை மாரியப்பன் சம்சாரம். விடுவிடுவென்று நடந்தவளை கையைப் பிடித்து இழுத்து நிறுத்திக் கொண்டாள். அவ ளுக்குக் காது கொஞ்சம் மந்தம்! இரண்டு பேராகச் சேர்ந்து பேசிக் கொண்டு நடந்து வருவதைப் பார்க்கின்ற கண்களுக்குப் பழுதாகப்படும். ஒப்புக்கு இவளையும் சேர்த் துக் கொண்டால் சௌகர்யம்.

"சுந்தரியக்காவுக்கே இவளப் பிடிக்காது. பெரிய இவ மாதிரி மெட்டுப் பண்ணிக்குவா..."

"சரி... என்னான்னு சொல்லு"




"இம்புட்டுத் தூரம் போயி டும்னா கண்டுச்சு! உங்களை என்னமோ பண்ணிப்புட்டா! இல்லாட்டி இப்படியா கெடையா கெடப்பீங்க...

"வசந்தியப் பத்தி நீ தெரிஞ்சுக்கிட்டது அம்புட் டுத்தேன்..."

"அதான் சொன்னது. நாங்க எது சொன்னாலும் இனி குத்தமாத்தேன் படும்..."

"ஆமா... ஆமா...!"

"சுந்தரியக்கா இவனைப் பத்தி எம்புட்டு சொல்லி யிருக்கு தெரியுமா? இவனுக்குப் பயந்தே உங்களைக் கொசத் தெரு வழியா பள்ளிக்கூடத்துக்குப் போகச் சொல்லணும்னுச்சு..."

அவள் வாய்ப் பொசுக்கி அவர் நெஞ்சு சுட்டுவிட்டது. படபடவென்று நெஞ்சுத் துடிப்பு கூடிற்று! இப்படிப் பட்ட பொம்பளை எங்கு கால் வைத்தாலும் முள்ளாத்தான் இருக்கும்! கால் பட்டாலும் கண் பட்டாலும் முள்தான். மேற்கொண்டு பேசவில்லை. நெடுநெடுவென்று வேலியோரம் நிற்கும் தென்னை வரிசைகளைப் பார்த்தார். நிலவொளி கசிந்து தென்னங் கீற்று மினிர்ந்தது! அவர்களைக் கொட்டுக்காரர்கள் கடந்தார்கள். காவி உறையில் எல்லாம் மூடி விட்டார்கள். மேளம், ஊது குழல், ஆர்மோனியம் எல்லாம் மூடி, கைச்சுமையாக நடந்தார்கள். நான்கு நாட்கள் அந்த வாத்தியங்கள் பட்டதை நினைத்துப் பார்த்தார். இரவு பகல், சாமம் என்று எல்லோர் நரம்புகளுக்குள்ளும் புகுந்து கொண்டு என்ன பாடு படுத்தியது! இப்போது பெட்டிப் பாம்பாய் நகர்கிறது.




"சொன்னா கோவிக்கலென்னா ஒண்ணு சொல்றேன்..."

"சொல்லு."

"அபாண்டமாச் சொல்றாளேங்கப் படாது. எதுக்குடா வம்புன்னுட்டுத்தேன் வாய் தொறக்காம இருக்கேன்."

"எதுக்கு இவ்வளவு பீடிகை?"

"நா யாரையும் கெடுக்கணும்னு நெனக்கலை. நெசம் சொன்னா, ரொம்பப் பேருக்குப் பிடிக்குறதுல்ல..."

அவள் முகத்தைக் கூர்ந்துக் கவனித்தார்.

"நீங்க நினைக்குறாப்புலெ அவ நல்லவ இல்லெ..."

"அப்பஎன்னா!" அலறிவிட்டார்.

"வடக்குத் தெருவுலே மாடு முட்டி மவன் இருக்கானே! பந்தல்வேலை பாத்துக்கிட்டு, அவனைக் கேளுங்க..."

"அவனையா, எதுக்கு?"

"முன்னாடி அவன்தான், அவுங்க வீட்டுக் கிட்ட ஒரு கடை வெச்சிருந்தான். எப்படி நட்டமானாங்குறீங்க...?"

"புரியறாப்புலெ சொல்லு!"

"ஆமா! உங்களுக்கு வெளக்கணும். கோடி காட்டினா போதாதா?"

"உன்னைப் பார்த்தா எனக்குப் பயமா இருக்கு!"

"நான் என்ன பிசாசா!"

"இப்படி ரத்தமும் சதையுமா குதறிப் போட்டா!"

"இப்ப உங்களுக்கு எல்லாம் பிசாசாத் தானே தெரியும்."

அவள் விறுவிறுவென்று கையை வீசி நடந்துவிட்டாள். கோபத்தில் காலை இழுத்து இழுத்து நடந்து பொம்பளைங்க கூட்டத்தில் கலந்துவிட்டாள். வாத்தியாரின் சந்தோஷம் முழுவதும் வடிந்துவிட்டது! ஒரே தாவாகத் தாவி நெஞ்சுக் கறியைத்தான் கடித்துவிட்டாள். அதுவும் அவள் எடுத்துக் கொள்ளும் உரிமை! தன் மனைவி சுந்தரிக்குத் தோழி! தோழியோ பேச்சுத் துணையோ! இந்த வசந்திக்கும் நெருக்கம்தான். நெருப்பாய் இப்படிக் கக்குகிறாளே! எந்த உரிமையில் இப்படிப் பேசுகிறாள்? என்ன உரிமையுணர்ச்சி? அடுத்த வீட்டிற்குள் அத்துமீறி நுழையும் உரிமையுணர்ச்சி! எங்கு வேண்டுமானாலும் போகலாம்! எதை வேண்டுமானாலும் தொடலாம்; எப்படியும் நிற்கலாம்! நடக்கலாம்! எப்படி இப்படி ஒரு உரிமை! யார் கொடுத்தது!

"வாத்தியாரய்யா!"

சட்டென்று திரும்பினார். நாலைந்து அடி தள்ளி, ஜாதி நாட்டாமையும், கோவில் பிள்ளையும் நடந்து வந்து கொண்டிருந்தனர். கோவில் பிள்ளை ஒரு வழியில் வாத்தியாருக்கு உறவு!

"பள்ளிக்கூடம் லீவு விட்டாச்சாக்கும்."

"இனி ஜூன் மாசம்தேன்."

"கழுதைகளாச் சுத்தப் போவுது போங்க..."

"பெரியகுளத்துக்கு எழுதிப் போட்டிருக்கு..."

"அதெல்லாம் ஆவுற காரியமாங்குறேன். கழுதைங்க ஆளுக்கு அஞ்சோ பத்தோ போட்டு பழுதுபாத்துட்டா, மழை, தண்ணி காலத்துலெ சௌகரியமா இருக்குங்க..."

"செய்யலாம்யா."

"அப்புறம், செட்டியார் உங்க சங்கதிய பத்தித்தேன் சொல்லிட்டு வந்தார்..."

வாத்தியார் கோவில்பிள்ளை முகத்தைப் பார்த்தார்.

(தொடரும்)



# வச்சா குடுமி!



ஒன்று கைவசம் இருக்கிறது. இருந்தாலும் ஆசை யாரைவிட்டது!. இன்னும் ஒன்று இருக்கலாம் என்று தோன்றுகிறது!'

- இரண்டு விஷயங்களில் இப்படி கருதுகிறார் பிரபல டென்னிஸ் வீரர் ஆன்ட்ரே அகாசி.

விம்பிள்டன், ஆஸ்திரேலியன் ஓப்பன், யு.எஸ்.ஓப்பன் ஆகிய கிராண்ட்ஸ்லாம் பந்தயங்களில் கோப்பையை அனாயாசமாகப் பெற்ற அகாசி, பெரும் போராட்டத்திற்குப் பின்தான் 1999ல் பிரெஞ்சு ஓப்பன் கோப்பையைக் கைப்பற்ற முடிந்தது.

இப்போது நடந்து கொண்டிருக்கும் பிரெஞ்சு ஓப்பன் பந்தயத்திலும் கோப்பையைத் தட்டிச் செல்ல வேண்டுமென்று ஆசைப்படுகிறார் இந்த முப்பத்துமூன்று வயது அமெரிக்கர்.

அப்படியென்றால் மொட்டையடித்துக் கொள்வாரா? தெரியாது. முன்னாள் காதலி ப்ரூக் ஷீல்ட்ஸைக் காதலித்தபோது தலையை அவர் முழுக்க மழுங்கடித்ததுண்டு. மொத்தத்தில் அகாசி 'வச்சா குடுமி - சிரைச்சா மொட்டை'க்கு வாழும் உதாரணம்.

விரைவில் கிராண்ட்ஸ்லாம் பந்தயங்களுக்கு முழுக்குப் போட்டு விடுவார் அகாசி என்கிறார்கள். அவரேகூட அது குறித்து மறைமுகமாகக் கருத்துத் தெரிவித்திருக்கிறார், என்றாலும் அகாசியை இரு விஷயங்களுக்காக மறக்க முடியாது. ஒரே ஆண்டில் நான்கு கிராண்ட்ஸ்லாம் பந்தயங்களிலும் கோப்பையைப் பெற்ற மிகச் சில டென்னிஸ் வீரர்களில் இவரும் ஒருவர். போர்க்-ஜான் மெக்கென்ரோவுக்குப் பிறகு டென்னிஸ் ரசிகர்களால் மிகவும் எதிர்பார்க்கப்பட்ட 'சபாஷ், சரியான போட்டி' பந்தயங்கள் அகாசிக்கும் சாம்ப்ராஸுக்குமிடையே நிகழ்ந்தவைதான்.இவற்றில் அதிகமுறை வென்றவர் சாம்ப்ராஸ் என்றாலும், இதுவரை பிரெஞ்சு ஓப்பன் கோப்பையை சாம்ப்ராஸால் பெற முடியவில்லை.

முதல் பாராவில் இரு விஷயங்களைப் பற்றிய கருத்து அகாசிக்கு இருக்கிறது என்றோம்.

ஒன்று பிரெஞ்சு ஓப்பன் கோப்பை, மற்றொன்று? இதோ அந்த விவரம்.

இம்முறை அகாசியும் அவரது வாழ்க்கைத் துணைவியார் ஸ்டெஃபி கிராஃபும் இணைந்து மிக்ஸட் டபுள்ஸ் போட்டியில் பங்கு கொள்வார்கள் என்று பலரும் நினைத்திருக்க, ஸ்டெஃபி ஆப் சென்ட்.

"என்னோடு சேர்ந்து ஆட வேண்டாமென்பதற்காக இவள் எந்த எல்லைக்குப் போவாள் என்பதை நினைத்தால் ஆச்சரியம் தாங்கவில்லை" என்று கிண்டல் செய்திருக்கிறார் அகாசி.

ஸ்டெஃபி இப்போது கர்ப்பமாயிருக்கிறார். அகாசிக்கும் அவருக்கும் இரண்டாவது குழந்தை பிறக்கப் போகிறது.

- குல்லு

வைகைச் செல்வி

பாவம் மரம்!
கோடை வெய்யில்
கொளுத்தும்போது
ஓடத் துடித்தும் பூமி விடாது
இலைகளுக்கு -
பச்சையைத் தவிர
வேறென்ன தெரியும்?
பூக்களாலோ பெரிய இம்சை.
தேனீக்கும் வண்டுக்கும்
தீனி போட்டு மாளுமா?
வானத்தைத் தொடுகின்ற
உயரம் இருந்தென்ன?
கொறிக்கும் அணில்கள்
பறிக்கும் காய்களைத்
திருட்டு வௌவால்
சுருட்டும் பழத்தை
காக்கையும் குருவியும்
தலைமேல் அமர
எச்சத்தைத் தவிர
வேறென்ன மிச்சம்?

மரத்தைக் காக்க
மனிதன் நினைத்து
கட்டாந்தரையில்
கடும் புயல் காற்றில்
தட்டாமாலை
சுற்றிய மரத்தை
வெட்டியெடுத்துக்
கட்டில் செய்ய -
மெத்தையிட்டுக்
கூடு கட்ட
புத்தம் புதிய
மருமகள்
வந்தாள்.

# மரமகள்

# தி.மு.கவைக் குழிதோண்டிப் புதைக்கிறாரே கலைஞர்...?

● லெ.நா. சிவகுமார், சென்னை - 33

? 'கான்' திரைப்பட விழாவுக்கு நீதிபதி ஸ்தானத்தில் சென்றிருக்கும் ஐஸ்வர்யா ராய், கவர்ச்சி உடையில் சென்றது சரியா?...

! ஊரோடு ஒத்து வாழ்கிறார்போல் உடுத்தியிருந்தார்; ஆனால் சொந்த ஊரைப் பிரதிபலிக்கவில்லை.

● எம்.சம்பத், வேலாயுதம்பாளையம்

? 'மகாத்மா காந்தி பிறந்த மண்ணில் கத்தி மற்றும் சூலம் ஏந்தச் சொல்வது காஞ்சி சங்கராச்சார்யார் போன்றவர்களுக்கு அழகா?' என்று கலைஞர் கேட்பது சரிதானே?

! 'சரிதான். ஆனால், தேர்தல் சமயங்களில் கொலையெல்லாம் சகஜம்தான்' என்று அவர் அறிக்கை விடுவதும் எந்த வகையிலும் சரியல்ல; அழகல்ல! உட்கட்சித் தேர்தலுக்கே அவரது கட்சிக்குள் கொலை விழுகிறதே!

● எஸ். இராமலிங்கம், ஆத்தூர்

? கோயில்களில் கட்டணம் வசூலிப்பதை எதிர்த்துப் போராட்டம் நடத்தப் போவதாக இந்து முன்னணி தலைவர் இராம கோபாலன் அறிவித்துள்ளாரே...?

! கோயில் நிலங்களையும் சொத்துக்களையும் ஆக்கிரமிப்பவர்களிடமிருந்து போராட்டம் நடத்தி மீட்டு, கோயில்களில் பணிபுரிபவர் சம்பளத்துக்கும் ஒரு வேளையாவது பூஜைக்கும் ஏற்பாடு செய்து விட்டு, பிறகு கட்டண எதிர்ப்புப் போராட்டம் நடத்தட்டும்.



* ஊரும் உடையும்!

● மல்லிகை மன்னன், மதுரை - 17

? துரியோதனனிடம் வைத்திருந்த அளவு கடந்த பாசத்தால் அவனது தவறுக்குத் துணைபோன திருதிராஷ்டிரன், தனது ஆட்சியைப் பறிகொடுத்து குலமே நாசமாகச் செய்தான். இன்று அதே தவறை கருணாநிதி செய்து தி.மு.க.வைக் குழி தோண்டிப் புதைக்கப் பார்க்கிறாரே?

! திருதிராஷ்டிரனுக்குப் பார்வை இல்லை; கலைஞருக்குப் பார்வை இருந்தும் பாசம் கண்ணை மறைத்துவிட்டது; கட்சி பலியாகிவிட்டது. இப்போது அதிருப்தி மேலும் வெடிக்காமல் இருக்க உயர் மட்டத்தில் 'ஒருவரே போட்டி, "ஏகமனதான" தேர்வு' என்ற உத்தியைக் கையாளப் போவதாகச் செய்தி. உருப்படுமா...?

● பி.குமார், சேலம் - 6

? 2013ல் பா.ஜ.க. ஆட்சியைப் பிடிக்கும் என்கிறாரே சி.பி. ரதாகிருஷ்ணன்?

! அடேயப்பா! 2013! ஓ, தமக்குத் தொலை நோக்குப் பார்வை இருப்பதாகக் காட்டிக் கொள்ள விரும்புகிறார் போலும்!

● இரா. புவனேஸ்வரி, சென்னை - 81

? பில்வி சூனியத்தின் மூலம் நம் வாழ்வைப் பிறர் நிர்மூலமாக்க முடியுமா?

! பிறரால் முடியாது. ஆனால், அவ்வாறு அவர்கள் செய்ய முடியும், முற்படுகிறார்கள் என்பதை நம்புவதன் மூலம், நாமே நம் வாழ்வை மிகச் சுலபமாய் நிர்மூலமாக்கிக் கொள்ளலாம்.

● டி.வி.பாலகிருஷ்ணன், காந்தி நகர், குஜராத்

? டைம்ஸ் ஆஃப் இந்தியா, எகனாமிக் டைம்ஸ் இதழ்களில் வந்துள்ள முழுப் பக்க தமிழ் நாடு அரசு சாதனை விளம்பரங்கள் கின்னஸ்ஸில் இடம் பெறுமா?



* காலமும் களவும்!



* கோயிலும் கட்டணமும்!

! சாதாரண அரசுத் திட்டங்களைச் சாதனைகளாக மாற்றிக் காட்டும் சாகசத்தில் சாதனை என்ற வகையில் இடம் பெறலாம்.

● ஜி. ராமதாஸ், தஞ்சாவூர்

**? அழகிரி - ஸ்டாலினிடையே இணக்கம் ஏற்பட்டுவிட்டால் தி.மு.க. வலிமை பெறுமா..?**

! இணக்கமாவது ஒண்ணாவது; அது கலைஞரின் பகற்கனவு!

● இரா. சம்புலிங்கம், அம்மனூர்

**? Banana Republic என்றால் என்ன...?**

! சும்மா சும்மா ஆட்சிக் கவிழ்ப்பு நிகழும் அரசியல் வலு இல்லாத தேசம்.

● கே. துரைசாமி, மங்களப்பட்டி

**? உடம்புக்கு ஏற்படும் துன்பங்கள் பெரிதா? மனத்துக்கு ஏற்படும் துயரங்கள் பெரிதா..?**

! கேரி ஜான் கல்லர் என்ற அமெரிக்கர் சமீபத்தில் எவரெஸ்ட் சிகரத்தில் ஏறி சாதனை படைத்துள்ளார். இவர் ஒற்றைக் கை மனிதர். துன்பங்களை ஒதுக்கிவிட்டு ஜெயிப்பது மனம்தானே!

● ஆர். அப்துல் சலாம், திருச்சி - 21

**? பின்லேடன் மட்டும் இந்துவாகப் பிறந்திருந்தால் உலக அமைதியைப் பரப்பியிருப்பான்... என்று விச்வ ஹிந்து பரிஷத் பொதுச் செயலாளர் பிரவீன் தொகாடியா கூறியிருப்பது எதைக் காட்டுகிறது?**

! தொகாடியாவுக்கு இந்து மதமும் தெரியவில்லை; பின் லேடனையும் புரியவில்லை என்பதைக் காட்டுகிறது.

● இரா. சக்கரபாணி, மதுரை - 7

**? சமயச் சண்டைக்குக் காரணம் அரசியல்வாதிகளே என்று ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகள் கூறுகிறாரே?...**

! சமயவாதிகளின் விபரீத விசித்திரப் போக்குக்குக் காரணம் அரசியல் ஆசைகளே!

● கே. ரமேஷ், ஈரோடு - 10

**? பாகிஸ்தான் சிறையிலிருந்து இருபது இந்தியர்கள் விடுதலையானது குறித்து...?**

! மகிழ்ச்சி. அவர்களுள் பலர் சொன்ன சோகக் கதைகளைக் கேட்டால்தான் 'சே! என்ன நாடு இது!' என்று பாக். மீது கோபம் வருகிறது.

● டி.எஸ்.டி. ராயன், நலத்துக்குடி

**? பொருளாதாரத்தில் பின்தங்கிய முன்னேறிய வகுப்பினருக்குப் பதினான்கு சதவிகிதம் ஒதுக்கீடு அளிக்க ராஜஸ்தான் மாநிலம் முன் வந்துள்ளதை வரவேற்கலாமல்லவா?**

! அனைத்துப் பிரிவினருக்குமே இதை விஸ்தரிக்க முயற்சி செய்யலாம். அர்த்தமுள்ள இட ஒதுக்கீடாக அமையும்.

● பொன்விழி, அன்னூர் ☐

**? வீர் சாவர்க்கர் படம் பாராளுமன்றத்தில் இருக்கும்போது, வைகோ விடுதலைப்புலிகளை ஆதரித்துப் பேசியது தவறா...?**

! இரண்டுக்கும் வித்தியாசம் உண்டு. இன்று சாவர்க்கர் படம் வெறும் சர்ச்சை தான். வைகோவின் வார்த்தைகள் சட்ட மீறல் என்று கருதப்படுகிறது. பொடா பாய்கிறது. இது சரியா தவறா என்பதை உச்ச நீதிமன்றம்தான் சொல்ல வேண்டும். இன்று நாம் கூறக் கூடாது. சீக்கிரமாகத் தீர்ப்பு வழங்கினால் நல்லது என்று வேண்டுமானால் கேட்டுக் கொள்ளலாம்.



• கட்சியும் கொலையும்!

• சாகசமும் சாதனையும்!

☐ ரூ.100 பரிசு பெறுபவர் :
பொன்விழி,
குமார் கல்யாண் ஸ்டோர்,
24/25, கோவை ரோடு,
அன்னூர் - 641 653

★ரூ. 50 பரிசு
பெறுபவர் :
டி.வி. பாலகிருஷ்ணன்,
பிளாட் எண் 382-2,
காந்தி நகர் - 29
குஜராத் - 382 029.

'உன்னைப் பாத்து எத்தனை நாளாச்சு?' - வாசல் கதவு சித்ராவை விசாரித்தது. கூர்க்கா அடையாளம் தெரிந்துகொண்டு மலர்ச்சியானான். "சின்னம்மா! வாங்க... வாங்க..."

வரவேற்புக் கிடைத்த போதும் அவளால் சட்டென்று உள்ளே நுழைந்துவிட முடியவில்லை. அளவு கடந்த தயக்கம் திரண்டெழுந்து அவளைத் திணறடித்தது. துவண்டு,

தன்னைப் பிச்சைக்காரியென்று நினைத்து விட்டதற்காக அவனைக் குறை சொல்லவும் முடியாது. தன் தோற்றமும், நிலைமையும் அப்படித்தானே இருக்கிறது? சித்ராவுக்குள் கழிவிரக்கமும் அது விளைவித்தத் துயரமும் பொங்கின.

சித்ரா வாயைத் திறந்து பதில் பேசும் முன், தோட்டக்காரர்கள், டிரைவர்கள் அனைவரும் அங்கே ஓர் உடனடி மாநாடாகக் குழுமினார்கள்.

"முதலாளி பொண்ணுடா. இந்த வீட்டுச் சின்னம்மா...! அவங்களைப் போய்... வாடா இப்படி..." அதட்டியவனை அப்புறப்படுத்தினார்கள். "நீங்க போங்கம்மா.."

தடுப்பதற்கும், மறப்பதற்கும் எவரும் இல்லை. வீடும் திறந்துதான் கிடந்தது. ஆனாலும் சித்ராவால் உரிமையோடு உள்ளே புக இயலவில்லை.

"எங்க பொண்ணு செத்துட்டா. இனிமேல் அந்த உறவைச் சொல்லிக்கிட்டு இந்த வீட்டு வாசப்படி

# கண்ணாமூச்சி

பின்னிய கால்களைச் சிரமப்பட்டு நிடப்படுத்திக் கொண்டு உள்ளே நுழைந்தாள்.

'செடியாய்த்தானே நட்டு வைத்துவிட்டுச் சென்றாய். எப்படிப் பூவும், பிஞ்சுமாகக் குலுங்குகிறேன் பார்' - சித்ராவிடம் பெருமையடித்துக் கொண்டது மாதுளை.

சித்ராவின் தயக்கக் கால்கள் போர்ட்டிகோவைத் தொட்ட நேரம், "ஏய்... நில்லு... நில்லு!" அதட்டல் குரல் அவளை நிறுத்தியது.

"பிச்சை கேக்கிற நீ காம்பவுண்டுக்கு வெளியே இருந்து கேக்கிறதுதானே? இப்படி விடுவிடுன்னு உள்ளே நுழையறே? போ... போ வெளியே."

சித்ரா வீட்டை விட்டு வெளியேறியதற்குப் பிறகு வேலைக்குப் புதிதாகச் சேர்ந்தவனாக இருக்க வேண்டும். இவளை அவனுக்கு அடையாளம் தெரியவில்லை.

மிதிக்காதே.." - கண்கள் சிவந்து, உதடுகள் துடிக்க அப்பா உதறிய ஆக்ரோஷ வார்த்தைகள் அவளைப் பின்னுக்கு இழுத்தன.

ரகு ஞாபகம் வந்தான். தயக்கத்தையும், தன்மானத்தையும் துடைத்துத் தூர எறிந்துவிட்டு அழைப்புமணியை ஒலித்தாள் சித்ரா.

"யாரது...?" கேட்டுக்கொண்டே மாடிப்படிகளில் இறங்கிக் கொண்டிருந்த அம்மா, சித்ராவைப் பார்த்ததும்



திகைத்துப் போனாள். பாசத் திகைப்பு. அன்பு அதிர்ச்சி.

காண்பதை உண்மையென்று நம்பவும், சுதாரித்துக்கொண்டு செயல்படவும் அம்மாவுக்குச் சில விநாடிகள் அவகாசம் தேவைப்பட்டன.

அதிர்ச்சியிலிருந்து மீண்டவள், சட்டென்று பரபரப்பாகி மீதிப்படிகளை கிடுகிடுவென்று விரைவாகக் கடந்தாள். ஆவலோடு சித்ராவை நெருங்கினாள்.

"சி...சித்ரா...!" குரல் உணர்ச்சி வெள்ளத்தில் உடைபட்டது. உருகிக் கரைந்தது. மகளை வருடிய தாயின் பார்வையில் தாங்கிக் கொள்ள முடியாத வேதனை "எ...என்னம்மா இது கோலம்?"

அம்மாவின் பதற்றப் பார்வை பதிகிற இடத்தை விழிகளால் தொடர்ந்தாள் சித்ரா. சட்டையில் அங்குலக் கிழிசல். மறைக்க வேண்டிய புடைவைத் தலைப்பை எடுத்துக் கழுத்தைச் சுற்றிப் போர்த்திக் கொண்டாள். புடைவையிலிருந்த ஒட்டுத் துணித் தையல் கேலியாகச் சிரித்தது.

யாரை நேசிக்கிறோமோ அவர்களின் நலக்கேடு நிச்சயம் நெஞ்சைப் பிளக்கும். அம்மாவின் நெஞ்சும் பிளந்துதான் போனது. சித்ரா நின்றிருந்த ஏழ்மைக் கோலம், அவள் உயிரையே உலுக்கியது.

"ஏன்? ஏம்மா இப்படி ஆயிட்டே?" மகளின் கைகளைத் தன் கைகளுக்குள் எடுத்துக் கொண்ட அம்மா, "உன்னை இப்படி கந்தத் துணியும் காஞ்சு போன உடம்புமா பாக்கிறதுக்காகத்தானா பாவி உன்னைப் பெத்து வளத்தேன்...?" சின்ன விசும்பலில் தொடங்கி, தாளமாட்டாமல் வெடித்தாள் அழுகையாக.

அம்மா சற்று நிதானமடையும்வரை காத்திருந்தாள் சித்ரா.



பிறகு, "அ...அப்பா இல்லையாம்மா?" மெதுவாகக் கேட்டாள்.

கண்களைத் துடைத்துக்கொண்ட அம்மா, "இல்லை. போர்டு மீட்டிங்குன்னு போயிருக்கார். சாயந்திரம்தான் வருவார். நீ உள்ளே வா..."

"அப்பா திட்டுவாராம்மா? அவர் வந்ததும் வர்றேனே...?" தணிந்த குரலில், வெகுவாகத் தயங்கியபடியே கேட்டாள் சித்ரா. விழுந்துவிட்ட உறவு விரிசல் ஏற்படுத்திய தயக்கம்.

தடுமாறினாள் அம்மா.

'அவதான் நாம யாரும் வேணான்னு உதறிட்டு ஓடிட்டாளே? அப்புறமும் என்ன சதா அவளைப் பத்தியே பேச்சு? இன்னொரு தடவை சித்ராவைப் பத்திப் புலம்பினே... கொலை விழும்!'

கணவரின் ரௌத்ரம் கண்முன் நிழலாடியது. பரிதாபமாக நின்றிருந்த மகளை ஏறிட்ட அம்மாவின் அடிவயிறு குமுறியது. தாய்மையின் குமுறல் உள்ளே எழுந்த கலக்கத்தையும் அச்சத்தையும் ஓரங்கட்டியது.

"அப்பாகிட்டே நான் பேசிக்கிறேன். நீ முதல்ல உள்ளே வா..." மகளின் கன்னத்தை மென்மையாக வருடினாள் அம்மா. "முகத்தைப் பாத்தாலே பசி தெரியுது. முதல்ல ஏதாவது சாப்பிடு. அப்புறமா விவரமாப் பேசிக்கலாம்..."

**வர்ஷா**

பாகற்காய்கூட கசப்பை மறந்துவிடும் அம்மா பரிமாறினால். அம்மா உருட்டிக் கொடுத்தாளானால் வெற்றுத் தயிர்சாதம் கூட அமிர்தத்தின் சாயலைப் பூசிக் கொள்ளும்.

வெகு நாட்களாக அம்மாவின் பாசச் சுவை கிடைக்காமல் கிடந்த மனசு ஊறியது. கண்கள் கசிந்தன. ஞாபகங்களில் நனைந்தன. மனசு பழசை இழுத்துப் போட்டுப் புரட்டியது.

இட்லிகளுக்கிடையில் ஒளிந்திருக்கும் தூத்பேடா, தோசைக்கடியில் பதுங்கிக் கிடக்கும் மைசூர்பாகு.

எப்படி முளைத்தன இவையெல்லாம்? - உணவுத்தட்டின் முன் அமர்கிற சித்ரா குழம்பியதே கிடையாது. அப்பாவுக்குத் தெரியாமல் இனிப்புகளைத் தன்வசம் சேர்க்க அம்மா செய்கிற தந்திரங்களைப் பற்றி அவளுக்குத் தெரியும்.

வெகுவான முறைகள் தப்பித்துவிட்டாலும், இனிப்பும் கையுமாக சித்ரா, அப்பாவிடம் சிக்கிக் கொள்கிற தினங்களும் உண்டு.

"என்ன பழக்கம் இது? எப்பப் பாரு ஸ்வீட்டையே சாப்பிட்டுக்கிட்டு... மத்தது எதையும் கையால கூடத் தொடாம...'' அதட்டித் தீர்த்துவிடுவார் அப்பா.

''அவளுக்குப் பிடிச்சதை சாப்பிடட்டுமே! விடுங்களேன்!''

"நீ கொடுக்கிற செல்லம்தான் கெட்டுப் போறா சித்ரா. இனிமேல் அவளுக்குக் கண்டதை திங்கக் கொடுத்தேன்னு வை. உன்னைத்தான் காய்ச்சுவேன் நான். ஜாக்கிரதை..''

சித்ராவின் படிப்பு குறித்தும் அப்பாவின் அணுகுமுறையே தனிதான். தான் படிக்காததையெல்லாம் சேர்த்து வைத்து தன் ஒற்றை மகள் படித்துத் தீர்த்துவிட வேண்டும் அவருக்கு. தந்தையின் கண்களில் சித்ரா விழுகிற எல்லாக் கணங்களிலும் கண்டிப்பாக அவள் கைகளில் ஏதேனும் ஒரு புத்தகம் இருந்தேயாக வேண்டும். இல்லையெனில் தொலைந்தாள். நெருப்பைக் கக்கும் அப்பாவின் பார்வை. வார்த்தைகள் சாட்டையாய் வீசும்.

இது விஷயத்திலும் அப்பாவின் கண்களில் மண்ணைத் தூவ உதவுவது அம்மாவின் கண்ணாமூச்சி ஆட்டம்தான்.

களைக்கொத்தியும், களிமண்ணுமாக நிற்கிற சித்ராவை நோக்கிப் பரக்கப் பரக்க ஓடிவருவாள். "அப்பா வர்றார். தோட்டத்தில் காத்து வாங்கிக்கிட்டே படிச்சிக்கிட்டு இருந்தேன்னு சொல்லு... இந்தா..'' ஏதாவது ஒரு புத்தகத்தை சித்ராவின் கைகளில் திணிப்பாள்.

அம்மாவின் கண்ணாமூச்சி ஆட்டமும் அப்பாவிடம் ஒருநாள் தோற்றுத்தான் போனது. அவர் சித்ராவின் காதலை தீவிரமாக எதிர்த்தபோது...

ஞாபகங்கள் கண்ணீர்த் துளிகளாக மாறி, சித்ராவுக்கு முன்னாலிருந்த உணவுத் தட்டை மறைத்தன, அம்மாவும்கூட உணர்ச்சி வசப்பட்டுக் கிடந்தாள்.

"சாப்பிடு சித்ரா. பசியில் வாடிக் கிடக்கே. எதையும் மனசில் நினைக்காம சாப்பிடும்மா..'' ஒரு கவளம் எடுத்து சித்ராவின் வாயில் ஊட்டி விடுவதற்காக அம்மா யத்தனிக்க, பொட்டென்று உடைந்துபோன சித்ரா அம்மாவின் இடுப்பைக் கட்டிக் கொண்டாள். முதுகு குலுங்கியது. தாரை தாரையாக வழியத் தொடங்கிய கண்ணீர் அம்மாவை நனைத்தது.

''அம்மா, நீதாம்மா அப்பாகிட்டேப் பேசணும்..''

''ம்..'' அம்மாவின் இலேசான தலையசைப்பில் தவிர்க்க முடியாத அவநம்பிக்கை.

உள்ளே நுழைந்ததுமே சித்ராவைக் கவனித்துவிட்டார் அப்பா. கால தாமதமின்றி உடனடியாக ரௌத்ரமானார். கோபவார்த்தைகள் அனல் அம்புகளாய்ச் சீறிப் பாய்ந்தன.

"இவளை யார் உள்ளே விட்டது? நீதான் செத்துப் போயிட்டேன்னு தலை முழுகிட்டோமே? அப்புறம் ஏன் இங்கே வந்தே...?''

"அவ நம்ம மகள். நம்மகிட்ட வராம எங்கே போவா...?'' அம்மா குறுக்கிட்டாள்.

அப்பா முடிக்கும் முன்பாகவே, "அப்பா, எ... எனக்குப் பணம் வேணும்..'' தடதடத்தபடி பேசினாள் சித்ரா. குரலை உறுதியாக

**"இத்தாங்க, உங்களுக்கு வாஸ்து சாஸ்திரத்தில ரொம்ப நம்பிக்கை இருக்கலாம். அதுக்காக எங்கிட்டவந்து வாஸ்து சாஸ்திரப்படிதான் 'பல் கட்டணும்'னு அடம் பிடிக்கிறது ரொம்ப ஓவர்!"**

- மலர் கண்ணன்

வைத்துக் கொள்ள அவள் செய்த முயற்சி வீணானது.

" நினைச்சேன். சொல்ல சொல்லக் கேக்காம, கோடி கோடியாக் கொட்டிக் கிடக்கிற சொத்தையெல்லாம் விட்டுட்டு அந்த மாசச் சம்பளக்காரனோட ஓடிப்போனே? இப்பப் புரியுதா பணத்தோட அருமை? ஆனா, சல்லிக்காசு கிடையாது. தர மாட்டேன்."

"ரகுவுக்கு ஹார்ட் பிராப்ளம். மேஜர் சர்ஜரி பண்ணணுமாம். ரெண்டு லட்சம் வேணும். எப்படியும் எனக்கு வரப்போற சொத்துதானே? இப்ப எனக்குத் தேவையா இருக்கு. கொடுங்க..."

"என்னது, உனக்கு வரப்போற சொத்தா?



எந்தத் தாத்தாவும் எந்தப் பேத்திக்காகவும் நயாபைசா சம்பாதிச்சு வைக்கலை. எல்லாம் என் சொந்த உழைப்பு. யாருக்கு வேணா தானம் பண்ணுவேன்..."

"யாருக்கோ தானம் பண்றதை நீங்க பெத்த பொண்ணுக்கு தானம் பண்ணுங்களேன். அவளுக்கும் நம்மை விட்டா யாரிருக்கா?"

எதிர்பாராதவிதமாகச் சட்டென்று அமைதியானார் அப்பா. பிறகு வெகு நிதானமாகச் சொன்னார்: "பணம் கொடுக்கிறேன். ஆனா ஒரு கண்டிஷன்..."

அவர் நிறுத்தினார். அவர் தொடர்வதற்காகக் காத்துக் கொண்டிருந்தாள் சித்ரா.

"அந்தச் செல்லாக்காசு ரகுவோட நீ வாழ்ந்து கிழிச்சதெல்லாம் போதும். அவனை விவாகரத்துப் பண்ணிடு. விட்டுட்டு வந்துடு. நான் பாக்கிற வேற நல்ல மாப்பிள்ளையைக் கல்யாணம் பண்ணிக்க..."

சிலையாகச் சமைந்து போனாள் சித்ரா. உடல் முழுக்கச் செருகிய குழாய்களோடு பலவீனமாகத் துடித்துக் கொண்டிருக்கும் ரகுவின் உயிர் சித்ராவுக்குள் ஊசலாடியது. அனல் கம்பிகள் தீண்டியது போல் கனன்று எரிந்தது இதயம்.

"ரகுவைப் பிரிய என்னால் முடியாதுப்பா..." அழுத்தமாகச் சொல்லிவிட்டு வெளியேறினாள் சித்ரா.

அப்பா தராவிட்டால் என்ன? ரங்கசாமி சித்தப்பாவிடம் கேட்டுப் பார்க்கலாம். இல்லையெனில் மூர்த்தி மாமாவிடம் கேட்போம். எந்த இடத்திலிருந்தாவது கிடைக்காதா என்ன பணம்?

வலுக்கட்டாயமாகச் சேகரித்துக் கொண்ட நம்பிக்கைகளோடு மருத்துவமனையை நோக்கி நடந்தாள் சித்ரா. டாக்டரைப் பார்த்து, 'பணம் கிடைக்கத் தாமதமாகும் போலிருக்கு. ஆபரேஷனை பிறகு வச்சுக்கலாம்' என்று சொல்ல வேண்டும்...

**ம**றுநாள் டாக்டரை தேடிச்சென்று சந்தித்தபோது...

"ரகுவுக்கு ரெண்டு நாள்ல ஆபரேஷன் ஃபிக்ஸ் பண்ணியிருக்கேன் சித்ரா..."

"டாக்டர்... ப..பணம்..." இழுத்தாள் சித்ரா.

"ஆமாமாம். உங்கம்மாதான் வந்து பணத்தைக் கட்டிட்டுப் போனாங்க..."

மறைத்து மறைத்து இனிப்புகள் பரிமாறிய அம்மா... பரபரத்து புத்தகம் திணித்த அம்மா...

இப்போது அப்பாவுக்குத் தெரியாமல் ரகுவின் ஆபரேஷனுக்காகப் பணம் கட்டியிருக்கும் அம்மா...

ஒன்றின் மேல் ஒன்றாகப் படிந்து நிறைந்த நேச நினைவுகளில் நெகிழ்ந்து போனாள் சித்ரா. நெகிழ்ச்சியும் உணர்ச்சியும் கண்களில் தளும்பின.

ஒளிந்து மறைந்த, ஒளித்து மறைத்து, பதுங்கிப் பதுங்கி அப்பாவுக்குத் தெரியாமல் அம்மா ஆடுகிற கண்ணாமூச்சி சித்ரா அறிந்ததுதான்.

அவளும்கூட அறியாத இன்னுமொரு கண்ணாமூச்சி இருக்கிறது. அதுவும்கூட அக்கறை, பாசம், அன்பு அனைத்தும் நிறைந்ததுதான்.

வங்கிக் கணக்கில் குறைகிற இரண்டு லட்சங்களையும் அப்பா கண்டுகொள்ளப் போவதில்லையே... ●

அழுக்கேறிய காடா வேஷ்டியில், குத்துக்காலிட்டு உட்கார்ந்து கொண்டு, நீராகாரத் தண்ணீர் சொட்டச் சொட்ட, ஒரு கையில் பழைய சோற்றையும், மற்றொரு கையால் பச்சை மிளகாயையும் ருசித்துச் சாப்பிடும் 'மாயி' பட சரத்குமாரை மறக்கவே முடியாது. மீண்டும் அதேபோல் கச்சிதமாய் 'பாறை' படத்தில் லாரி டிரைவராகப் பொருந்தியிருக்கிறாராம் சரத்குமார்.

இந்தப் படத்தில் சரத்குமாரின் ஆடைகளுக்கான மொத்தச் செலவே இரண்டாயிரத்து ஐந்நூறு ரூபாய்தான் என வாய் பிளக்க வைக்கிறார் தயாரிப்பாளர் எஸ்.எஸ். துரைராஜ். நான்கு கைலிகள், அரை டஜன் பருத்திச் சட்டைகள், லாரி டிரைவர் இமேஜுக்கு ஏற்ற மூன்று ட ஷர்ட்டுகள் மட்டுமே வாங்கச் சொல்லி உத்தரவு போட்டிருக்கிறார் இயக்குனர். அதோடு இந்த ஆடைகளைத் தேவையான அளவுக்கு அழுக்காக்கிய பிறகு சரத்குமாரை அணிய வைத்தாராம்! இந்த அளவுக்கு இயல்பை நேசிக்கும் அந்த இயக்குனர் கே.எஸ். ரவிக்குமார் என்றால், நம்ப சிரமமாகத்தான் இருக்கிறது. "பாறையும் கமர்ஷியல்தான் என்றாலும், முதன் முறையாக நிறைய யதார்த்தத்திற்கு முயன்றிருக்கிறேன்" என்று உறுதிமொழி தருகிறார்.

படம் வந்தால் பாறையில் ஈரமிருக்கிறதா என்பது பட்டவர்த்தனமாகி விடும்.



• 'திருமலை' விஜயுடன் டி.பி. கஜேந்திரன்

• 'ஒளி' முரளி- பூனம்

# "காதலிக்கிறவங்க காதைப் பிடிச்சுத் திருகு!"

ஸ்வீட்டி, சோனா இருவரும் இணைபிரியா தோழிகள். ஆனால் இருவரையும் பரம எதிரிகளாக்கி விடுகிறது காதல். சோனா காதலித்த ராஜகுமாரனை, ஸ்வீட்டி கல்யாணம் செய்துகொள்கிறாள். இந்தக் கல்யாண ரகசியம் தெரிந்து விடக் கூடாது என்பதற்காக சிங்கப்பூருக்கு உல்லாசப்பயணம் போய்விடும் சோனாவை இந்தியா திரும்ப விடாமல் ஸ்வீட்டி காய்களை நகர்த்த, கதையும் சூப்பராய் நகரும் என்று முழுக்கதையையும் தைரியமாய்ச் சொல்லும் இயக்குனர் கே. ஜெயபாண்டியன், எஸ்.ஏ. சந்திரசேகரனிடம் பத்து ஆண்டுகள் பயிற்சி எடுத்துக் கொண்டாராம்! இந்தக் கதையை தேவராஜ் என்ற புதியவர் தயாரிக்க ஒப்புக் கொண்டதே தனிக் கதையாம். "தயாரிப்பாளருக்குக் காதல் என்றாலே பிடிக்காது, காதல் என்றால் அதற்கு, துரோகம் என்றொரு அர்த்தம் உண்டு என்று அடிக்கடி சொல்லுவார். கதையைக் கேட்டதும் கொதித்துப் போய் 'இந்தப் படத்தை நான் தயாரிச்சே தீருவேன், காதல் காதல்ன்னு நேரத்தை வீணாக்குகிறவர்களுக்கு என்னோட சொந்தச் செலவுலே பாடம் நடத்தின மாதிரி இருக்கட்டும்' என்று களத்தில் இறங்கிவிட்டார். காதலிக்கிறேன்னு சொல்றவங்களைக் காதைப் பிடிச்சுத் திருகிற ஒரு கலகலப்பான கேரக்

* 'லவ்ஸ்' தேவா, ஸ்வீட்டி டார்லேயும் நடிக்கிறார்" என்கிறார் இயக்குனர். படத்தின் பெயர்: 'லவ்ஸ் - காதலுக்கு கண்ணில்லை; இலக்கணமும் இல்லை!

**கா**சோலை திரும்பி வந்த வழக்குகளில் எக்குத்தப்பாய் சிக்கிக் கொண்டிருக்கும் நடிகர் முரளிக்கு ஒளி பிறக்கிறதோ இல்லையோ, 'ஒளி' படத்தின் மூலம் மீண்டும் ஒரு ரவுண்டு வருவார் என்கிறது கோடம்பாக்கம்.



* 'பாறை' படப்பிடிப்பில் இருந்த சரத்குமாரிடம் தமது முதுகை விளம்பரப் பலகையாக்கிக் காட்டும் வேளச்சேரியைச் சேர்ந்த விபரீத ரசிகர் செல்வம்.



* 'ப்ரியமான தோழி' ஜோதிகா, மாதவன்

இதயம் படத்தில் எப்படி காதலுக்காக கசிந்துருகி, ரசிகர்களின் கண்களையும் கசிய வைத்தாரோ, அது போன்றதொரு மென்மையான மிடில் கிளாஸ் இளைஞனாக லயித்து நடித்திருக்கிறார் என்கிறார்கள். படத்தின் நாயகி பூனம் ஏற்கெனவே சின்ன சின்ன பாத்திரங்களில் தலை காட்டியிருந்தாலும், தனிக் கதாநாயகியாக தமிழில் அங்கீகாரம் பெற 'ஒளி'யைத்தான் நம்பியிருக்கிறேன் என்கிறார்.

**பா**ரதி படத்தில் குவளைக்கண்ணனாக நடித்து முத்திரை பதித்த மூத்த இயக்குனர் டி.பி. கஜேந்திரன். பந்தா-பரமசிவம் படத்தில் இவர் ஆக்‌ஷன் காமெடி செய்து கலக்கியதைக் கண்டு, விஜய் தமது 'திருமலை' படத்தில் அவரை காமெடி செய்ய அழைத்திருக்கிறாராம். ஆர். சுந்தர்ராஜன், மணிவண்ணன், ரமேஷ் கண்ணா வழியில் இப்போது இயக்கத்தை விட்டுவிட்டு, நகைச்சுவை நடிகராகிவிட்ட இயக்குனர்களின் பட்டியலில் டி.பி. கஜேந்திரனும் சேர்கிறார்.

"எனக்கு என்னோட உருவமும், உயரமும்தான் ப்ளஸ்" என்று தம்மைத் தாழ்த்திக்கொண்டு பேசும் இந்த அபார இயக்குனரின் எந்தப் படமும் தயாரிப்பாளரை நஷ்டப்படுத்தியதில்லையாம்! அப்புறம் ஏனுங்க அண்ணாச்சி ஆக்டிங்?

"**இ**ன்றைக்கு விக்கிற படம், விக்கிரமன் படம் அல்லது விக்ரம் படமாத்தான் இருக்கு. பேசாம பெயர்ல 'விக்' வர்றமாதிரி பார்த்துக்கிட்டா படம் வித்துடும்னு தோணுது" - 'பிரியமான தோழி' கேசட் வெளியீட்டு விழாவில் நடிகர் பார்த்திபன் இப்படிப் பேசியதும் கூட்டத்தில் சிரிப்பலை. டைரக்டர் விக்கிரமன் பேசும்போது, பதிமூன்று வருஷத்துக்கு முந்தி இந்தப் படத்துக்கு அட்வான்ஸ் வாங்கியதாகக் குறிப்பிட்டார்.

நெசமா?

— ரவுண்ட்ஸ்பாய்

ராசிக்கல் மோதிரம் வாங்க ராசியான கடை P.R. ஜுவல்லரி

# P.R. JEWELLERY

**GOLD, SILVER, DIAMOND & BIRTH STONES**
Old No. 102, New No. 138, USMAN ROAD,
T. NAGAR, CHENNAI - 600 017.
PH: 24344442, 24327764 TUESDAY HOLIDAY
(10.00 AM to 1.30 — 3.30 PM to 8.00 PM)

**PROPRIETOR : P. RAVINDHIRAN**

எங்கு ஜோதிடம் பார்த்தாலும் **P.R.** ஜுவல்லரிக்கு வந்து ரூ.400/-க்கு ராசிக்கல் வாங்கி பயன் பெறுங்கள். கல் ஒரிஜினல் என முழு உத்திரவாதம் தருகிறோம்.

| ராசி | ராசிக்கல் | வெள்ளி மோதிரம் விலை | |
|---|---|---|---|
| மேஷம், விருச்சிகம் | பவழம் - | 2 CARAT | 400/- |
| ரிஷபம், துலாம் | வைரம் - | 5 CENT | 2250/- |
| மிதுனம், கன்னி | மரகத பச்சை - | 20 CENT | 400/- |
| கடகம் | முத்து - | 2 CARAT | 400/- |
| சிம்மம் | மாணிக்கம் - | 20 CENT | 400/- |
| தனுசு, மீனம் | புஷ்பராகம் - | 1 CARAT | 400/- |
| | கனகபுஷ்பராகம் - | ½ CARAT | 1000/- |
| மகரம், கும்பம் | நீலம் - | 20 CENT | 400/- |

எங்களிடம் நியூமராலஜிபடியும் கல் மோதிரங்கள் கிடைக்கும்.

**TOPAZ, MOONSTONE, AMETHYST, TARQUISE, TIGER EYE, BLOOD STONE, OPAL, AQUAMARINE.**

மதர் மோதிரம், மதர் டாலர் தங்கத்திலும், வெள்ளியிலும் ரெடியாக கிடைக்கும்.

தங்கத்தில் ஒவ்வொரு ராசிக்கும் மோதிரம் ரூ. 1800/- முதல் 5000/-ம் வரை உடனே கிடைக்கும்.

அனைவரும் அணியக்கூடியது கார்னெட் வெள்ளி மோதிரம் விலை ரூ. 400/- இதை அணிவதால் படிப்பு, ஞாபக சக்தி, வேலை வாய்ப்பு, வியாபாரம், செல்வ வளம் பெருகும்.

தபால் மூலம் மோதிரம் 1க்கு ரூ 450/-

M.O. (or) D.D. அனுப்பவும்.

தபால் எழுதினால் முழு விவர பாம்லட் இலவசமாக அனுப்புகிறோம்.

மேஷ ராசி, விருச்சிக ராசி - பவழம் * ரிஷப ராசி, துலாம் ராசி - வைரம் * மிதுன ராசி, கன்னி ராசி - மரகதப் பச்சை

கடகராசி - முத்து * சிம்மராசி - மாணிக்கம் * தனுசு ராசி, மீனராசி - புஷ்பராகம் * மகரராசி, கும்பராசி - நீலம் *

குறிப்பு : தினசரி காலை ராஜ் டீவியில் 6.55 மணிக்கு சிறப்புப் பேட்டியை பார்க்கவும்



ஒவ்வொரு குறிப்பும் உணர்த்தும் விடையை எதிரே உள்ள கோடுகளில் நிரப்புங்கள். வட்டத்துக்குள் உள்ள எழுத்துக்களை மட்டும் ஒழுங்குபடுத்தினால் விடைப் பகுதியில் உள்ள குறிப்பு உணர்த்துவது கிடைத்துவிடும்.

1. பர்மாவின் தற்போதைய பெயர் ◯ _ _ _ _ _

2. குஷ்பூ நடித்த முதல் தொலைக்காட்சித் தொடரின் பெயர் _ ◯ _ _ _ _

3. ஆலிவ் இலைகளை அலகில் கொண்ட புறா உணர்த்துவது _ ◯ _ _ _ _

4. ஏசு கிறிஸ்து பிறந்த ஊர் ◯ _ _ _ _ _

5. ஸ்பெஷல் அல்ல ◯ _ _ _ _ _

6. கடும் விஷம் கொண்ட கொடுக்குகள் கொண்டது _ _ _ _ ◯

'தேசிங்குராஜன் கோட்டையாரு'க்கு வேட்டு வைத்தவர்

_ _ _ _ _ _ _

- ஜி.எஸ்.எஸ்.

விடைகள் :
1. மியான்மர் 2. மருமகள் 3. சமாதானம் 4. பெத்லகேம் 5. சாதாரணம் 6. கருந்தேள்
பெருமாள்சாமி (செஞ்சியாரின் உதவியாளர்)



# வெட்டு வைத்தவர்!

கடவுள் வருவாரா?

கூப்பிட்டால் வருவார். (கூப்பிடா விட்டாலும் கூடவே வருவார்)

கடவுள் கொடுப்பாரா?

கேட்டால் கொடுப்பார். (கேட்காவிட்டாலும் வேண்டுமளவு கொடுப்பார்)

கடவுள் எங்கே இருக்கிறார்? எங்கும் இருக்கிறார்; உள்ளும் புறமும் உள்ளார்; எமக்குள்ளும் உமக்குள்ளும் எல்லாவற்றுக்குள்ளும்.... எங்கும்... எதிலும்.... சரி. கடவுளைப் புரிந்து கொள்ள எவ்வளவு திறமை வேண்டும்?

திறமை வேண்டாம்; நம்பிக்கை வேண்டும். அறிவு வேண்டாம்; அன்பு மட்டுமே வேண்டும்.

கடவுளிடம் நம்பிக்கை என்பதைவிட நம்பிக்கையையே கடவுள் என்கிறது ஆன்மிகம்.

சாட்சாத் இராமபிரான் கடலைக் கடக்க பாலம் கட்ட வேண்டியிருந்தது. ஆனால், இராமன் திருப்பெயரை ஓதினால் கடலைக் கடந்துவிடலாம் என்று நெஞ்சார நம்பிய அனுமனால் பலமுறையும் பாலமில்லாமலே கடலைக் கடக்க முடிந்தது. (போகட்டும். அனுமன் எத்தனை முறை கடலைக் கடந்தார்?)

குருக்ஷேத்திர யுத்தம் தொடங்குவதற்கு முன் கண்ணபிரானிடம் உதவி கேட்டு ஒரு பக்கம் அர்ச்சுனன்; இன்னொரு பக்கம் துரியோதனன். இருவரும் கண்ணன் இருக்குமிடம் அடைந்தபோது, அந்த மாயனோ ஆழ்ந்த உறக்கத்தில்! தலைமாட்டில் அமர்ந்த துரியோதனன் தான் தான் முதலில் வந்ததாய்க் கூற, கால்மாட்டில் இருந்த அர்ச்சுனனையே தான் முதலில் பார்த்ததாய்ப் பரந்தாமன் கூற...

'எப்படியாயினும் தான் மட்டும் தனியனாய், ஆயுதமற்றவனாய், போர் புரியாதவனாய் ஒரு புறம்; திறமையுடன் போர் செய்யக் கூடியத் தன்னுடைய வீரர்கள் லட்சக்கணக்கானோர் இன்னொரு புறம்; இதில் யாருக்கு எது வேண்டுமோ அதனை அவர்கள் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம். ஆனால், தேர்ந்தெடுக்கும் முதல் வாய்ப்பு இருவரில் இளையவனான அர்ச்சுனனுக்குத்தான். கண்ணன் இப்படிச் சொன்னவுடன் அர்ச்சுனன் எதைத் தேர்ந்தெடுத்தான்? 'தனியனே ஆனாலும் கண்ணன் தனக்கு வேண்டும்!'

துரியோதனனுக்கு ஏக மகிழ்ச்சி. 'ஒற்றை



# ஐயம் தவிர்...!

# இந்த நூற்றாண்டில் இந்து மதம் 9

## டாக்டர் சுதா சேஷய்யன்

யாய் நிற்கும் வெற்றுக்கையனை வைத்துக் கொண்டு என்ன செய்வது? முட்டாள் அர்ச்சுனன். நல்லவேளை, நமக்கு நிறைய வீரர்கள் கிடைத்தார்கள்.'

"எப்படி, இப்படி ஒரு தேர்வு செய்தாய் அர்ச்சுனா?" கண்ணனின் கேள்விக்கு அர்ச்சுனன் பதிலிறுத்தான். "நம்பிக்கை! உன்மீது கொண்ட நம்பிக்கைதான் கண்ணா!"

நம்பிக்கை என்பதுதான் அடிப்படை. கடவுள் மீது கொள்ளும் பக்திக்கு மட்டுமல்ல; வாழ்வில் செய்யும் எந்தச் செயலுக்கும், எந்த முயற்சிக்கும் நம்பிக்கையே அடிப்படை. சமுதாய அமைப்புகள், நிறுவனங்கள், நாடுகள் ஆகியவற்றின் திட்டங்களுக்கும் செயல்பாடுகளுக்கும்கூட நம்பிக்கையே பிரதானம்.

திருஞானசம்பந்தப் பெருமானும் திருநாவுக்கரசு பெருமானும் வேதாரண்யம் என்னும் திருமறைக்காட்டில் இருந்தார்கள். அந்தச் சமயம், மதுரையிலிருந்து பாண்டி மாதேவி மங்கையர்க்கரசியாரும் அமைச்சர் குலச்சிறையாரும் அனுப்பிய தூதர்கள் வந்தார்கள். பாண்டி நாட்டில் அக்கால கட்டத்தில் இருந்த புறச்சமய ஆதிக்கத்தைப் பற்றிச் சொல்லி, திருஞானசம்பந்தரை மதுரை மாநகருக்கு எழுந்தருளும்படி வேண்டினார்கள். விவரத்தை நாவுக்கரசரிடம் தெரிவித்துவிட்டுப் புறப்படத் துணிந்தார் ஞானசம்பந்தர். வாழ்க்கையில் பற்பல அனுபவங்களைக் கண்டு, புறச் சமயத்தாரால் பல துன்பங்களையும் பட்டிருந்த நாவுக்கரசர், வயதில் இளையவராய் இருந்த ஞானசம்பந்தக் குழந்தையை நோக்கினார். 'ஐயோ. இந்தக் குருத்துக்கு ஏதும் கேடு வந்திடுமோ?' என்று வாத்ஸல்யத்தில் பதறியது பெருந்தகையின் மனம். "கிரக நிலைமைகள் சரியில்லை; இப்போது கிளம்பத்தான் வேண்டுமா?" என்று மெல்லத் தடுத்தார்.

"போற்றுவது ஆண்டவனின் திருப்பாதங்கள் என்றால் எந்தப் பழுதும் வராது; அஞ்சாதீர் ஐயனே" என்று சமாதானம் உரைத்த ஞானசம்பந்தர், அந்தத் தருணத்தில்தான் 'கோளறு திருப்பதிகம்' பாடினார்.

'கோள்கள் – கிரகங்கள் நல்லவை; மிக மிக நல்லவை; குற்றமற்றவை – ஏன் தெரியுமா? அர்த்தநாரீஸ்வரனாய், நீலகண்டனாய், கங்கையையும் நிலவையும் தன் திருமுடியில் தாங்கியவனாய், உள்ள இறைவன் என் உள்ளத்தில் உள்ளபோது, ஞாயிறு, திங்கள், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி, ராகு, கேது என்னும் இக்கிரகங்கள் நல்லவையன்றோ!' என நவின்றார். நம்பிக்கையை ஊட்டிவிட்டு, தானும் நம்பிக்கையோடு புறப்பட்டார்.



ஒரு செயலைத் தொடங்கும்போது, அது நன்கு நடக்கும் என்னும் நம்பிக்கை அத்தியாவசியம். அது இருந்தால் மட்டுமே, அதற்கான முழு உழைப்பையும் மனிதன் தருவான். இல்லையென்றால், 'என்ன செய்து, என்ன பிரயோஜனம்?' என்று உழைப்பு குன்றிவிடும்; செயல் குன்றியதால் செய்கையும் படுத்துவிடும்; சோர்வு தோல்வியில் தள்ளும். நம்பிக்கை உற்சாகம் தரும்; உற்சாகம் உழைப்பை மேம்படுத்தும்; நடக்க முடியாததைக் கூட

நம்பிக்கை நடத்திக் காட்டும். 'உழைப்பு இருக்கக் கூடிய ஒருவனுக்குத் தெய்வம் தன் ஆடையை இறுக்கிக் கட்டிக் கொண்டு இறங்கிவந்து உதவி செய்யும்' என்றார் வள்ளுவர். நம்பிக்கை கொண்ட அர்ச்சுன னுக்கு, உழைப்பை, கீதையின் மூலம் உபதேசித்த கண்ணன், தானே களமிறங்கித் தேரோட்டியாக நின்றாரல்லவா!

ஆதிசங்கரரின் மாணவர் சநந்தனர். குருவிடம் ஆழ்ந்த பக்தியும் நிறைந்த நம்பிக்கையும் கொண்டவர். ஒருமுறை ஏதோ வேலையாக, கங்கையின் அக்கரைக்குப் போயிருந்தார். திரும்புவதற்குள் கங்கையில் வெள்ளம் பெருகிவிட்டது. குரு பாடம் நடத்தும் வேளையும் நெருங்கிவிட்டது. குரு பாடம் தொடங்க அழைத்த அழைப்பும் கேட்டுவிட்டது. கங்கையின் கரைகளைத் தொட்ட வெள்ளம், சநந்தனரின் உள்ளத் தைத் தொட முடியவில்லை. கங்கையைக் கடக்கத் தொடங்கினார்; பொங்கும் புனலில் அவர் கால் பதித்து நடக்க, அவர் கால் பதித்த இடமெல்லாம் கங்காமாதா ஒரு தாமரையை மலர்த்த, தங்குதடையின்றி இக்கரையை அடைந்தார் அந்த மாணவர். அன்று முதல் சநந்தனர் என்பவர் 'பத்ம பாதர்' ஆனார்.

ஆதிசங்கரரின் பிரதமசீடர்களில் ஒருவரான பத்மபாதரின் வாழ்வில் நடந்த இந்நிகழ்வு எதை உணர்த்துகிறது? பெரு நதியின் வெள்ளத்தை எதிர்கொள்ளும் ஆற்றலையும் வலுவையும் அள்ளித் தந்தது, நம்பிக்கை என்னும் அமுதசுரபியேயாகும்.

மனித வாழ்க்கையின் ஆதாரமாக 'நம் பிக்கை' என்பதையே வைக்கிறது சனாதன தர்மம். 'நம்பிக்கை ஆழமாக வேரூன்றினால், பக்திப் பயிர் தழைக்கும்' என்கிறது நாரத பக்தி சூத்திரம். 'ஒருவ னின் ஆன்மீக ஏற்றத்துக்கான முதல் படிக்கட்டு, நம் பிக்கை' என்கிறார் சைதன்ய மகாபிரபு.

அருளுக்கும் ஆன்மிகத்திற்கும் மட்டுமல்ல; அன்றாட வாழ்விற்கும் நம்பிக் கையே ஆதாரம். அதனாலேயே, 'ஆண்ட வனை நம்பு' என்பதி னும், 'நம்பிக்கையே ஆண்டவன்' என்பது சாலச் சிறந்தது.

திருநறையூர் என்னும் நாச்சியார் கோயிலில் அருள்பாலிக்கும் தாயாருக்கு 'வஞ்சுளவல்லி' என்பதோடு 'நம்பிக்கை நாச்சியார்' என்றே திருநாமம் உண்டு.

நம்பிக்கை என்பதற்கான ஆற்றலை உணர்ந்து கொண்ட இந்து தர்மம், அதையே, தனிமனித வளர்ச்சிக்கான உபாயமாகவும், அதே நேரம், சமுதாயக் கூட்டுறவுக்கான உத் வேகமாகவும் கொண்டது.

கதோபநிடதத்தில் உள்ள ஒரு கதை: பண்டைய காலத்தில் ஒரு செல்வச் சீமான்:



## யுக்தி

சீதாபிராட்டியைத் தேடிச் சென்றபோது அநுமன் கடலைத் தாண்டிப் போக வேண்டியிருந்தது என்பது நமக்குத் தெரியும்.

ஆனால், மொத்தம் எத்தனை முறை ஆஞ்சநேயர் கடலைத் தாண்டினார் என்று தெரியுமா?

கணக்குப் போட்டுப் பார்ப்போமா?

இராமாயணத்தின்படி,

சீதையைத் தேடிச் சென்றபோது - ஒருமுறை;

யுத்தத்தின்போது சஞ்சீவினி மூலிகை களைத் தேடிப் போனது, மலையைப் பெயர்த்துக் கொணர்ந்தது, மீண்டும் மலையைக் கொண்டு வைத்தது, மீண்டு வந்தது - ஆக நான்கு முறைகள்.

மீண்டும் யுத்தத்தில் சக்தி ஆயுதம் தாக்கி லக்ஷ்மணன் மயங்கி விழுந்தபோது, முன் கூறியபடியே மருந்துமலையாம் சஞ்சீவினி மலையைக் கொண்டு வந்து, கொண்டு வைத்தது - மீண்டும் நான்கு முறைகள்

ஆக மொத்தம் பத்துமுறை அனுமன் கடலைத் தாண்டிப் பறந்திருக்கிறார்.

ஆஹா!

வியப்பைச் சற்றே உள்ளடக்கி

# கலாட்டாவுக்கு நடுவே!

கொண்டு இன்னொன்றையும் யோசிப்போமா?

அவ்வளவு பெரிய சஞ்சீவிப் பர்வதம் - மருத்து மலை. முதன்முறை அதைத் தேடவே அநுமன் சற்று அல்லலுற வேண்டியிருந்தது. இரவோடிரவாகக் கஷ்டப்பட்டுக் கொண்டு வந்த அந்த மலையை, அத்தனை யுத்த கலாட்டாக்களுக்கு நடுவிலேயும் மீண்டும் அதன் இடத்திலே கொண்டுபோய் வைத்தாரே. அந்தப் பொறுப்புணர்வை என்னென்பது!

'அட! கொண்டு வந்தாச்சு. போர்க்களத்து வீரர்களைக் காப்பாற்ற ரொம்பவும் பயனுள்ள மலை. குறைந்தபட்சம் யுத்தம் முடிகிறவரை வைத்துக் கொள்வோம்,' என்றுகூட நினைத்தாகத் தெரியவில்லை.

எடுத்த பொருளை, அதன் பயன்பாடு முடிந்தவுடன் எடுத்தெறிந்துவிடாமல், எடுத்த இடத்திலேயே பிறருக்கும் பயன்படும்படி மீட்டு வைக்கும் அருங்குணம் ஆஞ்சநேயரிடத்தில் இருந்ததையல்லவா இது காட்டுகிறது! 'அந்தந்தப் பொருள் அதனதன் இடத்தில்' என்னும் தத்துவம் சிறியதுதான். ஆனால், இல்லத்தைத் துப்புரவாய் வைத்துக் கொள்ள நினைக்கும் இல்லத்தரசி முதல், பெரிய பெரிய பணிகளைச் செய்யும் நிறுவன நிர்வாக இயக்குநர் வரை, சகலரையும் சங்கடப்படுத்தக் கூடியது பொருட்களைச் 'சகட்டுமேனிக்குப் போட்டு விடும்' பழக்கமே, ஆகும்.



சின்ன விஷயம்-ஆனால், ஆஞ்சநேயரின் பெரிய மாலையில் சின்ன முத்துக்களும் உள்ளன.

தானதருமம் செய்தால் புண்ணியம் கிட்டும் என நினைத்தார். எனவே, வேள்வி செய்தார்; அதில் தானம் கொடுத்தார். தானம் தானே; நல்லவற்றைத் தராமல் தொத்தல் மாடுகளையும் பயனில்லாதவற்றையும் தந்தார். அவருக்குச் சூட்டிகையான ஒரு மகன். தந்தை செய்யும் தவறு அவன் நெஞ்சில் தைத்தது. "அப்பா, என்னை யாருக்கு தானம் கொடுக்கப்போகிறீர்கள்?'' _ மீண்டும் மீண்டும் தொணதொணத்தான். திரும்பத் திரும்ப அவன் கேட்டதில் கோபம் கொண்ட தந்தை, எரிச்சலில் சொன்னார்: ''உன்னை யமனுக்கு தானம் கொடுத்து விட்டேன், போ!''

யமனுக்கு தானம் என்றால் மரணமல்லவா! மரணத்தைப் பற்றிய ஐயம் ஒருபுறமும், மரணத்துக்குப் பின் என்னவென்னும் அவா ஒருபுறமும் கூத்தாடிய அந்தச் சிறுவனின் மனத்திற்குள், அதே நேரத்தில், 'சிரத்தை' புகுந்தது. (சிரத்தை என்பது ஆழ்ந்த நம்பிக்கை.)

யமனைக் கண்டு மரணம் பற்றித் தெரிந்து கொள்வதென்ற நம்பிக்கையுடன் புறப்பட்டான் பாலகன் நசிகேதஸ். யமனுலகம் போய்ச் சேர்ந்தபோது யமனே வெளியே போயிருந்தான். நம்பிக்கையைத் தளரவிடாமல் மூன்று நாட்கள், யமன் வீட்டு வாசலில் நசிகேதஸ் காத்திருந்தான். மூன்று நாட்கள் பொறுத்துத் திரும்பி வந்த யமன், சிறுவனின் சிரத்தையைக் கண்டு வியந்து, தான் மூன்று நாட்கள் தாமதப்படுத்தியதற்காக மூன்று வரங்கள் கேட்கச் சொன்னான். முதல் வரத்தினால் தந்தையின் கோபம் தணிதல், இரண்டாம் வரத்தினால் உண்மையான முறையில் யாகமும் தானமும் (புண்ணியம் என்ற பெயரால் சகட்டுமேனிக்குச் செய்யாமல், சிரத்தையோடு தானம் செய்யும் முறையை நசிகேதஸ் கேட்டதால், அந்த யாகமே 'நசிகேதஸ் யாகம்' என்றழைக்கப் படும் என்று வரம் கொடுத்தான் யமன்) என்று கேட்டுவிட்ட சிறுவன், மூன்றாவது

வரத்தின் மூலம் 'மரணத்தின் மூலம் எது? என அறியக் கேட்டான்.

ஏற்கெனவே 'சிரத்தை' இருந்த நெஞ்சிற்குள் இப்போது 'துணிவு' புகுந்தது.

மரணத்தைப் பற்றிச் சொல்லாமல், யமன் எவ்வளவோ தட்டிக் கழித்த போதிலும், லௌகீக இன்பங்களைப் பற்றிச் சொல்லி ஏமாற்ற முனைந்தபோதிலும், இறுதியில், நசிகேதஸின் சிரத்தை வென்றது.

நம்பிக்கை இருந்தால் துணிவும் தைரியமும் வரும்; தர்மமும் தார்மிகமும் வழி காட்டும்.

தனிமனிதனை வளப்படுத்தும் இந்த நம்பிக்கையையே, சமுதாய வளத்துக்கும் ஆதாரமாக்கினால், ஆற்றல் பெருகும் எனவும் கண்டது பாரதம்.

பற்பல மொழிகளில், பலப்பல இனங்களில், பலதரப்பட்ட பழக்க வழக்கங்களில் பரவிக் கிடக்கும் பாரத மக்களை ஒன்றிணைக்கும் பெரிய சக்தி என்ன தெரியுமா? சக்தி.... என்ன?.....ஆமாம். தாங்கள் எல்லோரும் ஒரு 'சக்திதேவி' பெற்ற புதல்வர்கள் என்னும் எண்ணம். பாரத பூமி, அகண்ட பாரத தேசம் எனப்படும். அன்னை பராசக்தியின் பல்வேறு பாகங்களிலிருந்து தோன்றியதாகவே பாரத தேசம் கருதப் படுகிறது. நம் நாட்டின் பற்பல நகரங்களின் பெயர்கள் இதனைச் சுட்டும். மும்பை மும்பாதேவியிலிருந்தும், சென்னை சென்னம்மாவிலிருந்தும் வந்ததாகக் கருதப்படுவது மாதிரியே அம்மனின் அருட்திருநாமங்களைக் கொண்டே வேறு பல ஊர்களின் பெயர்களும் உருவாகியுள்ளன. சிம்லா _ சியாமளா; கல்கா _ காளிகா; சண்டிகர் _ சண்டிகா; பாட்னா _ படன் தேவி _ இந்தப் பட்டியலை நீட்டிக் கொண்டே போகலாம்.

நல்வழி காட்டுவது மாத்திரமின்றி, நம்பிக்கை, ஒருங்கிணைக்கும்; ஒன்று சேர்க்கும்.

மனோதத்துவம் 'மனதின் ஆக்கபூர்வ அமைப்பு (positive frame of mind) என்று சொல்வதை....

மேலாண்மை அறிவியல் 'முனைப்பு அணுகுமுறை' (focussed outlook) என்று சொல்வதை... மானுடவியல் 'நேர் நோக்கம்' (straight objective) என்று சொல்வதை... சற்றே ஆழப் படுத்தி இந்து தர்மம் 'சிரத்தை' என்கிறது.

ஒரு யோகி இருந்தார். அவரது மந்திர சக்தி மீது நம்பிக்கை கொண்ட மக்கள், மழை பொய்த்தபோது அவரிடம் சென்று மன்றாடினார்கள். நீங்கள் யாகம் செய்தால் மழை வரும்' என்றார்கள். மந்திரபலத்தின் மூலம் இயற்கையோடு விளையாடத் தயங்கிய யோகி முதலில் மறுத்தார். ஆயினும், ஊருக்கே நன்மை என்பதால் யாகம் செய்ய ஒப்புக் கொண்டார்.

நாள் குறித்து, நட்சத்திரம் பார்த்து, மேளதாளங்கள் வைத்து, விமரிசையாக யாக ஏற்பாடுகளைச் செய்தனர் ஊர் மக்கள். குறிப்பிட்ட நாளில் யோகி வந்தார். பூர்ண கும்பத்தோடு ஊர்ப் பெரியவர்கள். பட்டும் பளபளப்புமாக இருந்த பெரியவர்களைப் பார்த்த யோகி உள்ளூரக் கவலைப்பட்டார். 'மழை வருமா?'

சுற்றி நோக்கிய யோகி திடீரென்று தீர்மானித்தார். 'நிச்சயம் மழை வரும்.' ஓரேயொரு குட்டிப் பையன், கையில் குடையுடன் உட்கார்ந்திருந்தான்... நவீன நசிகேதஸ்களும் இருக்கத்தான் செய்கிறார்கள்.

(தொடரும்)



## வீசுது த்ரிஷா அலை!

கண்களில் கிலோ கணக்கில் சோகத்தை ஒளித்து வைத்திருக்கும் த்ரிஷாவுக்குக் கதாநாயகி வேடமெல்லாம் எடுபடாது என்று கணக்குப் போட்டது கோடம்பாக்கம். ஆனால் 'சாமி' படத்தில் விக்ரமோடு போட்ட அதிரடி டப்பாங்குத்து ஆட்டம் கண்டு ஆடிப்போன தயாரிப்பாளர்கள், 'சபாஷ்! சரியான சாய்ஸ்' என்று த்ரிஷாவிடம் கால்ஷீட் கேட்டு நச்சரிக்கிறார்களாம். சூர்யா, ஷாம், மாதவன், விக்ரமைத் தொடர்ந்து 'அலை' படத்துக்காகச் சிலம்பரசனோடு ஜோடி சேர்ந்திருக்கும் த்ரிஷாதான் கோடம்பாக்கத்தின் லேட்டஸ்ட் ட்ரீம் கேர்ள்!

• 'அலை' படத்தில் சிம்புவுடன்




• ஹரி

சமீப காலமாக டிக்கெட் கொடுப்பவர் தவிர வேறு மனிதத் தலைகளையே பார்க்க முடியாத திரையரங்கக் கவுண்டர்களில் திருஷ்டி சுற்றிப் போடும் அளவுக்குக் கூட்டம். ‘சாமி’ படம் பார்க்கலேன்னா நீ பூமிக்குப் பாரம் என்கிற லெவலில் ரசிகர்களின் ‘பஞ்ச்’ டயலாக் வேறு.

எல்லாத் தரப்பு ரசிகர்களையும் இழுத்துப் பிடித்து உட்கார வைக்கிற சூப்பர் ஃபாஸ்ட் திரைக்கதையைக் கொண்டு படத்தை இயக்கியிருக்கும் ஹரி கோடம்பாக்கத்தின் இன்றைய மோஸ்ட் வான்டட் இயக்குனர். சாமியை இயக்கிய அந்த ஆசாமியை, பட அதிபர் ஏ.எம். ரத்னம் அலுவலகத்தில் அழுக்கினோம்.



“திருநெல்வேலி நாசரேத் பக்கமுள்ள கச்சனா விளைதாங்க நம்ம ஊரு. பொறந்தது கிராமம்தான்னாலும், வளர்ந்தது எல்லாம் சினிமா குடியிருக்கிற சாலிகிராமத்துல தான். அப்பாவுக்கு இங்கே தான் பிசினஸ். பள்ளிக் கூடம் படிச்சது ஏ.வி.எம். ஆவிச்சி ஸ்கூல்லே. பி.காம். படிச்சது நந்தனம் கலைக் கல்லூரியிலே. படிக்கிற வயசுலே சினிமாகூட அதிகம் பார்த்ததில்லே. சுற்றம் நட்புன்னு எல்லாருமே பிசினஸ் பண்றாங்க. நாமளாவது ஏதாச்சும் வித்தியாசமா பண்ணலாமேன்னு யோசிச்சப்போ, சாலிகிராமத்துலே ஸ்டூடியோ வாசல் எல்லாம் எப்போதும் திறந்தே கிடந்தது கண்ணுல பட்டுச்சு. சும்மா வேடிக்கை பார்த்துட்டு வருவோம்ன்னு உள்ளே நுழைஞ்சப்போ, எந்த வாச்மேனும் என்னைத் தடுக்கலே! இப்படித்தான் சினிமாவுக்குள்ளே வந்தேன்.

“செந்தில்நாதன், கே. நட்ராஜ், அலெக்ஸ் பாண்டியன் இவங்ககிட்டே உதவி இயக்குனரா வேலை செஞ்சுட்டு, ‘அவதாரம்’ படத்துலே நாசர்சார்கிட்டே இணை இயக்குனரா இருந்தேன்.

அப்புறம் பாலச்சந்தர் சார் பள்ளிக் கூடத்துலே ‘கல்கி’ படத்துக்கு ஒர்க் பண்ணினேன். கடைசியா சரண்ஜி.

“பல படங்கள் ஒர்க் பண்ணிட்டே, இனி தனியா படம் பண்ண வேண்டியது தானே”ன்னு நண்பர்கள் சொன்னாங்க. ஆனால் எனக்கு நம்பிக்கையில்லே. சினிமாங்கிறது நாலு சுவத்துக்குள்ளே டிஸ்கஸ் பண்றது மட்டுமில்லேன்னு புரிஞ்சுகிட்டேன். அதனாலே, நாசர் சார்கிட்டே இணை இயக்குனரா இருந்தப்போ படப்பிடிப்பு முடிஞ்சதும், புரொடெக்ஷன் மேனேஜர்கிட்டே போய் ஒட்டிக்குவேன். அவரு என்ன பண்றார், எப்படி நிர்வாகம் பண்றாருன்னு கவனிப்பேன். சில விஷயங்கள் புரியலேன்னா, அவர்கிட்டேயே விளக்கம் கேட்டு அன்புத் தொல்லை கொடுப்பேன். ஓர் இயக்குனருக்கு குண்டூசியிலேர்ந்து

கோணியூசி வரைக்கும் விலை தெரிஞ்சாத்தான், தம்மை நம்பி பல கோடிகளைப் புழங்கவிடுற தயாரிப்பாளரைக் காப்பாத்த முடியும்.

"என்னைப் பொறுத்தவரைக்கும் கஷ்டப்பட்டாதான் சினிமா. தயாரிப்பாளர் கஷ்டத்தைப் புரிஞ்சுகிட்டாதான் இயக்குனர். நான் தயாரிப்பாளரோட இயக்குனர். நாம நல்ல படம் எடுப்போம். மக்களுக்குப் பிடிச்ச மாதிரி எடுப்போம். வக்கிரம் இல்லாம பார்த்துக்குவோம், இதையெல்லாம் மீறி, நம்மளை கரெக்டான 'போட்'ல கொண்டு வந்து பாதுகாப்பா விட்டுருக்கான்னு தயாரிப்பாளர், நம்மளை நம்பணும். எல்லா ஓனரும் லாபம் சம்பாதிக்கணும் அதோட புகழும் வேணும்ன்னுதான் படம் தயாரிக்கிறாங்க. அவங்கள்ல கொஞ்சம் நல்ல ரசனை, சொசைட்டி மேல கொஞ்சம் காதல், இருக்கிற ஓனராப் பார்த்து வேலை செஞ்சா, எந்த இயக்குனரும் தன்னோட தனித்துவத்தைக் காத்துலே விட்டுற வேண்டியதில்லே.

"உங்க முதல் படமான 'தமிழில்' இருந்த யதார்த்தமும், நேர்த்தியும் சாமியில் இல்லையேன்னு சிலர் கேட்குறாங்க. இதை நான் ஏத்துக்க மாட்டேன். ஏன்னா, மதுரையிலே பாசமான அண்ணன், அண்ணிகூட வாழ்ந்துகிட்டு, சைக்கிள்ளே போற ஒரு சாதாரண நடுத்தரக் குடும்பத்து இளைஞன், ரவுடியா மாற வேண்டிய நிலை வந்துருது. அப்படியும் அவன் ரவுடியா மாற விரும்பலைன்னு சொன்னோம். அந்தக் கதை அப்படி. சாமி ஹீரோ, திருநெல்வேலி டவுனுக்குள்ளே இருக்கிற பல போலீஸ் ஸ்டேஷன்களை நிர்வாகம் பண்ண வந்த அதிரடி போலீஸ் ஆபீசர். இவர் ஆக்ஷன்லே தான் இறங்கணும். டயலாக் பேசினா சரிப்படாது. அதனால் ரொம்ப வேகமான திரைக் கதை தேவைப்பட்டது. ஆனால் எந்த இடத்திலும் யதார்த்தம் மிஸ் ஆகலே. ஹீரோ கலர் கலரா டிரஸ் போட்டுக்கிட்டு சுத்தலே. கவர்மெண்ட் கொடுத்த ஜீப்லே போய், போலீஸ் குவாட்டர்ஸ்லே குடியிருக்காரு. கமிஷனர் நல்லவர்ன்னு தெரிஞ்சுதான் நாயகி காதலிக்கிறா. இப்படிச் சொல்லிகிட்டே போகலாம்.

"நல்ல விஷயத்தை ரசிக்கிற மாதிரி சொன்னா, ஸ்லோ ப்ராசஸ்லே ரசிகன்கிட்டே நிச்சயம் மனமாற்றம் வரும். ஹரி நல்ல படம்தான் எடுப்பான். அதை மக்களுக்குப் பிடிச்ச மாதிரி எடுப்பான்."



# "ஆக்ஷன்லதான் இறங்கணும்!"

படபடவென்று கொட்டித் தீர்த்து விட்டு வீடு நோக்கிப் புறப்பட்ட ஹரி, "மகன் பிறந்திருக்கான். ஸ்ரீராம்னு பேர் வெச்சிருக்கோம். போய் கொஞ்சிட்டு வரணும். என்னதான் சினிமா பிஸின்னாலும் குடும்பத்துக்குன்னு நேரம் ஒதுக்கிடணும். இல்லேன்னா குழப்பம் வரும்" என்று காரை நோக்கி விரைந்தார். அவர் நடையில் அபார சுறுசுறுப்பு.

- ஜெய்

படங்கள் : டிஜிட்டல் சண்முகம்



காட்சித் தொடங்கும்போது காபி, பாதி அருந்தப்பட்டு இருக்கிற தம்ளர். சிவதாணுவின் ரிப்பேர் வேலை - இவையுடன் தொடங்குகிறது)

**சிவதாணு** : (வேலையில் இருக்கிறார். நிமிர்ந்து எதிரில், ஜாக்கெட் பட்டன் தைக்கும் மகள் கீதாவைப் பார்த்து) என்னம்மா முடிவு பண்ணே?

**கீதா** : என்ன செய்யலாம்பா... நீங்க சொல்லுங்க.

**சிவதாணு** : (தலையசைத்து) பிரச்னை உனக்கு. சங்கடம், அதனால் ஏற்படுகிற மன உளைச்சல் உனக்கு. நீதான் முடிவெடுக்கணும்... இப்ப மட்டும் இல்லம்மா... எப்பவும், உன் சம்பந்தப்பட்ட காரியம் எதுக்கும் முடிவெடுக்கிற அதிகாரத்தை நீயே வச்சுக்க. உன் கணவனுக்கும் கூட, உனக்காக முடிவெடுக்கிற அதிகாரத்தைக் கொடுத்துடாதே... எல்லாச் சிக்கலும் அங்கதான் ஆரம்பிக்குது.

**கீதா** : நான் நல்லா யோசிச்சுட்டேம்பா. எங்க கம்பெனியில, வேற மாதிரி வேலை இப்பத்திக்குக் காலி இல்லை. சாமி, கடவுள் சிலைகளைப் பத்தின குறிப்புகள் வேற யாரும் எழுத முடியாது. டைப், கிளார்க் பகுதியில வேலை

# ஜீவநதி

தொலைக் காட்சித் தொடர்

காட்சி : 30

- பகல் / வீடு.

பாத்திரங்கள்: **சிவதாணு, கீதா.**

(ஞாயிற்றுக்கிழமை மாதிரியான ஒரு ஓய்வு நாள். காலை பத்து மணி அளவில் சிவதாணு, குளித்து பூஜை முடித்த தோற்றம். உடம்பெங்கும் திருநீற்றுப் பூச்சு. தம்பூர் ஒன்றின் கம்பிகளைச் சரி செய்து கொண்டிருக்கிறார். பக்கத்தில் வந்து அமர்கிறாள் கீதா. அவள் கொண்டு வரும் காபியை அருந்தியவாறும், தம்பூரைச் செப்பம் செய்தவாறும் இருக்கிறார் சிவதாணு. கீதா, வீட்டில் விடுமுறையில் இருக்கிற தோற்றம்.

எதுவும் காலி இல்லை.

**சிவதாணு** : இதை உன் மானேஜரோடு பேசினியா?

**கீதா** : பேசினேம்பா. கம்பெனி, என்னை இழக்க விரும்பலைன்னு அவர் சொன்னார். அதே சமயம், இங்க வேற எந்த 'போஸ்டிங்கிலும்' நான் பொருந்த மாட்டேன்னும் சொன்னார். எனக்கும் பொய் ரிப்போர்டிங், பிடிக்கலை.

(மௌனம்)

போன வாரம், ஒரு வெளிநாட்டுக்காரர் வந்தார். அவங்களுக்கு, நம்ம 'சிவ நடனம்' ரொம்ப ஆச்சரியம் தர்றது. இதனோட தத்துவம் என்னன்னு கேட்டார். உங்க

அசைவு, சக்திதான். இதனோட தத்துவம், உலக இயக்கம்தான். இந்த உலகத்தை இயக்கற,' மாபெரும் சக்தியோட குறியீடுதான் சிவன்னு சொன்னேன். மணிக்கணக்கில் இந்த சிவ நடனச் சிலையைப் பார்த்து விட்டு மெய் மறந்து நின்னார். எங்க மேனேஜர், இதுதான் சரியான சமயம்னு அதை ஒன்றரை லட்சத்துக்கு அந்த வெளி நாட்டுக்காரர் தலையில கட்டிட்டார். அதுக்கு இருபதாயிரமே அதிகம். இந்த மோசடியில் எனக்கும் பங்கில்லைன்னாலும், கூட்டு இருக்குன்னு தோணுது. மனசு சங்கடமா இருக்குப்பா...

**சிவதாணு :** வேணாம். உனக்குச் சந்தோஷம் தராத, சங்கடம் தர்ற எந்த வேலையையும் செய்யாதே.

**கீதா:** நல்ல சம்பளம் தர்றாங்களே... *(சிவதாணு சிரிக்கிறார்)*

**சிவதாணு :** எதைக் கொடுத்து எதை வாங்கறோம்கிறது முக்கியம். பணத்துக்காகப் பாவ மூட்டைகளைச் சேர்த்துக்க முடியுமா?

**கீதா :** *(மௌனம். பிறகு)* குடும்ப வருமானம் பாதிக்கப்படுமேப்பா!

**சிவதாணு :** அதைப் பத்திக் கவலைப் படாதே குழந்தை, நீ சம்பாதிச்சுக் கொண்டு வந்து கொடுத்ததிலே, ஒரு பாதி பேங்க்ல இருக்கு. அதோட என் பென்ஷன், ட்யூஷன் சம்பளம் எல்லாம் இருக்கே. இந்த வயசுல, உனக்குக் கவலை வேண்டாமே. சந்தோஷமா இருடா. நான் இருக்கேன்... நான் பாத்துப்பேன்.

**கீதா :** *(கண்களைத் துடைத்துக் கொண்டு)* கண்ணன்ட்டே பேசினேம்பா. அவரும், உனக்குச் சரின்னு பட்டதைச் செய்யுங்கறார்.

**சிவதாணு :** அதான் சரி. மனித மரியாதைன்னு ஒண்ணு இருக்கு, கீதாம்மா. உன் மரியாதைக்குக் குந்தகம் வர்ற காரியத்தால உனக்கு ஒரு கோடி வருமானம் வந்தாலும் சரி, அதைத் தூக்கி எறிஞ்சு வெளியில வர்றதுதான், மனித மரியாதை. நமக்கு நாம் மரியாதை பண்ணிக்கலைன்னா அந்த வாழ்க்கை வீண். வேஸ்ட்.

**கீதா :** *(புன்னகையுடன்)* ரொம்ப தைரியமா இருக்குப்பா... சரி.. அடுத்து என்ன பண்ணலாம்பா?

**சிவதாணு :** இதுதான் சரி. உன்கிட்டே படிப்பு இருக்கு. அறிவு இருக்கு. திறமை இருக்கு. இந்த மூன்றும் தேவைப்படற நிறுவனம் இருக்கு. அது எந்த நிறுவனம்னு



தேடு. எல்லார்க்கும் ஒரு நாற்காலி இருக்கு. கட்டாயம் இருக்கு. அதைத் தேடி அடையறதுதான் வாழ்க்கை... முதல்ல, நண்பர்கள், தெரிஞ்சவர்கள், இவங்ககிட்ட உனக்கு வேலை தேவைங்கிற விஷயத்தைச் சொல்லி வை. முதல்ல, நம்ம அம்சா மாமியைப் போய்ப் பார். நல்ல தொடக்கமா இருக்கும்.

**கீதா :** *(முகம் பிரகாசமடைகிறது)* கரக்ட்பா. அம்சா மாமி இருக்கும்போது, நமக்கு என்னத்துக்குக் கவலை. மறந்தே போயிட்டேன்... *(தம்பூரை மீட்டுகிறார் சிவதாணு. அது சுத்தமாக ஒலிக்கிறது.)*

**சிவதாணு:** அப்புறம், கீதா, உன் திருமணம் பற்றியும் நீ யோசிக்கணும். அதுக்கான வயசும் பக்குவமும் வந்துடுச்சு... நீயே, உன் வாழ்க்கைத் துணையைத் தேடிக்கலாம். உன் மேல, எனக்கு நிறைய நம்பிக்கை இருக்கு. எதைச் செய்தாலும், நீ சரியாவே செய்வே. உன் துணைவர், எந்த சாதி, மதமாகவும் இருக்கலாம். அது பற்றி எனக்குக் கவலை இல்லை. மனுஷத்தனம்தான் முக்கியம்... சரியா?

**கீதா:** *(சரி என்று தலையசைக்கிறாள்)*

**சிவதாணு:** சரி. உன் இஷ்டம். யோசி. உன் வாழ்க்கையை நீதான் தீர்மானிக்கணும்.... *(தம்பூர், சுருதி சுத்தமாக ஒலிக்கிறது...)*



- ராஜிராதா

**காட்சி : 31**

**மதிய நேரம் / தெருவிலிருந்து வீட்டுக்கு**

*பாத்திரங்கள்:* **கண்ணன், கீதா, சரோஜா**

*மதிய நேரம்: சரோஜாவின் வீட்டைத் தேடியபடி, குடிசைகளும், கூரை மற்றும் பழைய மாதிரி வீடுகள் நிறைந்த பகுதியில் வருகிறார்கள், கண்ணனும், கீதாவும். ஒரு மத்திய வயது நபரை அணுகி, விசாரிப்பது தெரிகிறது.*

**நபர்:** வெல்டர் வேணு வீடு தானப்பா? அவனுக்கு ஒரு பொண்ணு இருக்கிறது தெரியும். சரோஜாவோ, கிரோஜாவோ, அது தெரியாது. நேரா போயி, சோத்துக்கைப் பக்கம் திரும்பு. வாசல்ல, கல்லு கொட்டிக் கிடக்கும்.

**கண்ணன்:** ரோடு போடப் போறாங்களோ?

**நபர்:** அதுக்கோசரம்தான் கொட்டி இருப்பாங்க. அப்புறம், மறந்துட்டாங்க. பசங்க, கல்லை எடுத்துக் கோலி குண்டு வெளையாடி, வெளையாடி, கொட்டின கல்லுல பாதி காணாம போச்சி. இன்னும் மூணு வருசம் இருக்கு. அடுத்த தேர்தல் வர்றதுக்கு. அப்போ கல்லும் இருக்காது. தெருவும் இருக்காது.

**கண்ணன்:** ஜனங்க இருப்பாங்க. ஓட்டுப் போடறதுக்கு. அது போதுமே, நம்ம தலைவர்களுக்கு.

*(நகர்கிறார்கள்.)*

**கீதா:** அரசியல் பேசறதுன்னா, அலுக்காதே உங்களுக்கு.

**கண்ணன்:** கோபத்தைக் கொண்டு போய்க் கொட்டறதுக்கு, குப்பத் தொட்டி மாதிரி ஒரு இடம் வேணுமே. அதுதான் அரசியல்.

**கீதா:** உங்க வெறும் கோபம் என்னத்தை பண்ணும்? மக்களுக்குக் கோபம் வரப் பண்ணணும். அல்லது, நம்ம மாதிரி இருக்கிறவங்க, அரசியல் செய்யத் தவறியதைச் செய்யணும். ஒட்டு மொத்தமா, அரசியல்வாதிங்க எல்லாத்து மேலயும் சேற்றை வாரி வீசிட்டு ஒதுங்குகிறதுல என்ன புண்ணியம்? செல்வம் மாதிரி ஏதேனும் செய்யணும், கண்ணன்.

**கண்ணன்:** 'தேடிச் சோறு நிதம் தின்னு, பல சின்னஞ் சிறு கதைகள் பேசி'ன்னு பாரதி சொல்ற மாதிரிதான் வாழ்க்கை ஆயிடுச்சு... *(வீடு வந்துவிட்டது. மரக்கதவைத் தட்டுகிறார்கள். சரோஜா வந்து கதவைத் திறக்கிறாள். கண்ணனைப் பார்க்கிறாள்.)*

**சரோஜா:** அட, வாங்க, வாங்கண்ணே... உள்ள வாங்க... *(இரண்டு நாற்காலிகளை இவர்களுக்குப் போட்டு, அவள் தரையில் சுவரில் சாய்ந்தபடி அமர்கிறாள்.)*

**கண்ணன்:** இவங்க பேரு கீதா. எனக்கும்

சேதுவுக்கும் நண்பர். இப்ப உங்களுக்கும். இவங்க உதவியாலதான், இப்ப நான் செய்யற வேலை கிடைச்சது.

**சரோஜா:** சேது சொல்லி இருக்கு. ஏதாவது சாப்பிட வாங்கி வரட்டுமா, கோலா, கிரஷ்... ஃபான்டா, இங்க வேற ஒண்ணும் கிடைக்காது.

**கண்ணன்:** எல்லாம் சாப்பிட்டுதான் வந்தோம். *(கீதா, பார்வையில் வீட்டைச் சுற்றி நோட்டம் விடுகிறாள். கடவுள் காலண்டர்கள் மற்றும் சினிமா நடிக நடிகைகள் படங்கள் தொங்குகின்றன.)* ஒரு விஷயம், சரோஜா. என்ன கல்யாணத்துல புதுசா சிக்கல்?

*(சரோஜா, உள்ளே போய் இரண்டு தம்ளர்களுடன் வருகிறாள். இருவரும் எடுத்துக் கொள்கிறார்கள்.)*

**சரோஜா:** அப்பா, என்ன என்னமோ சொல்றாரே.

**கண்ணன்:** என்னா சொல்றாரு?

**சரோஜா:** சேதுவுக்கு யார் யாரோடெல்லாமும் தொடர்பு இருக்காமே?

**கண்ணன்:** நீங்க அதை நம்பறீங்களா?

**சரோஜா:** இல்லண்ணே. நான் நம்பலை. அப்பா நம்பறாருன்னு சொன்னேன்.

**கண்ணன்:** சரோஜா. அப்பா எதை வேணாலும் நம்பட்டும். நம்பாமே போகட்டும். நீங்க சேதுவை நம்பறீங்க இல்லியா?

**சரோஜா:** நிச்சயமா நம்பறேன்.

**கண்ணன்:** இதுதான் முக்கியம். எனக்கும் ரேணுகாவுக்கும் சினேகம்தான். அதுக்காக, வேறு மாதிரி நினைக்கிறதா? அது இருக்கட்டும். அப்பாவைக் கேட்டுக்கிட்டா, அவர் சம்மதிப்பார்னு நம்பியா, நீங்க நேசிக்க ஆரம்பிச்சீங்க?

*(சரோஜா தலை கவிழ்ந்து கொண்டு நிற்கிறாள்)*

சரி. சேதுவுக்கு என்ன பதில் கேட்டு வரச் சொன்னான்?

**சரோஜா:** அப்பா ஏதாவது நினைச்சுக்கும் அண்ணே.

*(கண்ணன் கீதாவைப் பார்க்கிறான், நிராசையாக. அவள் தலையசைக்கிறாள்.)*

**கீதா:** சரோஜா. நான் பேசினா, தப்பா நினைக்க மாட்டீங்களே...

**சரோஜா:** சேச்சே. என்னங்க இப்படிச் சொல்றீங்க?

**கீதா:** அப்பா மேல நீங்க வச்சிருக்கிற மதிப்பு, சரிதான். நியாயமும் கூட. ஆனா, வாழ்க்கையில, எதுக்கு முக்கியத்துவம் தரணும்னு இருக்குங்க. உங்க எதிர்கால வாழ்க்கை சேதுவோடதான்னு முடிவு பண்ணினா, அப்பாவை மீறுவதுதான் சரின்னு எனக்குத் தோணுது. இப்போ இல்லைன்னாலும், எதிர்காலத்துல உங்க அப்பா உங்களை ஏத்துக்குவார். சேதுவை, உங்க முடிவு எவ்வளவு பாதிக்கும்னு நினைச்சுப் பாருங்க.

*(தரையைப் பார்க்கிறாள், சரோஜா. அவள் முகத்தில் நிறைய உணர்ச்சிகள்.)*

**கண்ணன்:** *(எழுந்திருக்கிறான்.)* நல்லா யோசியுங்க, சரோஜா. இது உங்க சொந்த விஷயம். முடிவெடுக்க வேண்டியது நீங்கதான். அப்பா, பிரச்னை பண்ணுவார்னா, அதை நாங்க சந்திக்கத் தயாரா இருக்கோம். எல்லாத் தப்பபிப்பிராயமும், எல்லாக் காயமும், காலத்தால ஆறவே செய்யும். தப்பு பண்ணிட்டமேன்னு பின்னால வருந்தறதுல அர்த்தம் இல்லை.

*(வருகிறோம் என்று தலையசைத்தபடி கண்ணனும் கீதாவும் நகர்கிறார்கள்)*

(தொடரும்)




- என்.வி. காந்தன்

# திருச்சூர்

பொது இடத்தில் பத்துப் பேர் கூட்டமாய் நின்று விடக் கூடாது. மூக்கை நுழைத்து என்ன சங்கதி எனப் பார்க்கா விட்டால், தலை சுக்கு நூறாய் வெடித்துச் சிதறி விடும் ஆபத்துண்டு. எதற்கு ரிஸ்க் என்று பிரசாத் படப்பிடிப்பு வளாகத்தில் குவிந்திருந்த பெருங்கூட்டத்திற்குள் தலையை விட்டோம். மஞ்சள் நிற மின்னொளியில் நனைந்து கொண்டிருந்தது ஒரு லைஃப் சைஸ் மீரா பொம்மை!

லண்டன் அருங்காட்சியகத்து மெழுகுப் பொம்மைகள் எல்லாம் பிச்சை வாங்க வேண்டும். அத்தனை உயிரோட்டம்! அருகில் நின்று கொண்டிருந்தவரை செல்லமாய்க் கிள்ளி, "இங்கே என்ன நடக்கிறது" என்று கிசுகிசு குரலில் கேட்க.. "சப்தம் போடாதீங்க சார், சேரனோட ஆட்டோகிராஃப் ஷூட் டிங் நடக்குது" என்று எல்லோருக்கும் கேட்கிற மாதிரி கத்தினார். "படத்தோட ஆர்ட் டைரக்டர் யாருங்க?" என்று நாம் மறுபடியும் அவரைக் கிள்ளினோம்.

"தெரிஞ்சுக்கிட்டு என்ன பண்ணப் போறீங்க?" என்று அவர் மூக்கை விடைத்து முறைக்க, "பிளாஸ்டர் ஆஃப் பாரிசில் இத்தனை தத்ரூபமாய் ஒரு சிலையை வடித் திருக்கும் அவரைப் பாராட்டக் கூடாதா" என்றதும் "போவ் காசி! (கண் தெரியாதவர் என்பது இதன் அர்த்தம். கொஞ்சம் லேட் டாய்த்தான் புரிந்தது). நல்லாப் பாருய்யா... பொம்மை இல்லைய்யா, படத்தோட கதாநாயகி" என்று அதட்டினார். இதற்குள் 'கட்! ஷாட் ஓகே!' என்ற சேரனின் கம்பீரமான குரல் எங்கிருந்தோ கேட்க, மீரா பொம்மைக்கு உயிர் வந்து கண்ணைத் திறந்து பார்த்தது. தம்பூரா வுடன் எழுந்தது. தலையில் போட்டிருந்த முக்காடை எடுத்துவிட்டு வந்து ஃபைபர் நாற்காலியில் அமர்ந்து கொண்டு 'டெண்டர் கோக்கனட் கிடைக்குமா?' என்றது. அடுத்த அரை நிமிஷத்தில் இளநீர் சிவப்பட்டு ஸ்ட்ராவுடன் வந்து சேர, அதை உறிஞ்சிக் கொண்டிருந்தவரைத் தயங்கித் தயங்கி அருகில் நெருங்கி, "மீராவுக்குத் தம்பூரா மீட்டத் தெரியுமா?" என்றோம். தெரியும் என்று பதில் சொல்லாமல் பட்டென்று தம்பூராவை எடுத்து மீட்டிக் காட்டிவிட்டு, "எம் பேரு மீரா இல்லே. கோபிகா! மலையாளத்திலே என்னை அறிமுகப்படுத்தின இயக்குனர் துளசிதாஸ் எனக்கு வெச்ச பேரு. அம்மா அப்பா வெச்ச பேரு கேர்ளி. அதோட அப்பா, ஆண்டோ, பிரான்சிஸ் பேருலே பாதியைச் சேர்த்து கேர்ளி ஆண்டோன்னு வெச்சிருக்கிறது மலையாள டிரெடிஷன்" என்று பெயருக்கு விளக்கம் கொடுத்த கோபிகா கடந்த ஆண்டின் மிஸ் திருச்சூர்!

"அப்பாவுக்குப் பாலக்காடு பக்கமுள்ள வாழையாறுலே ஒரு ரெஸ்டாரெண்ட் இருக்கு. அம்மா, தங்கை அம்மூம்மா (அப்பாவின் அம்மா), தம்பி பிங்கு (வளர்ப்பு நாய்)- இதான் என்னோட பாசமான குடும்பம். நடிச்சா பணம் கொடுக்கறாங்க. ஆனால் பணத்துக்காக நான் நடிக்க வரலே!" என்று கீச்சுக் குரலில் மலையாளத் தமிழ் மணக்க, பளிச்சென்ற வெள்ளைப் பற்கள் அணிவகுப்பு நடத்த, வெளிச்சமாய் சிரித்த படி பேசுகிறார்.

"மிஸ் திருச்சூர் போட்டியில் ஜெயிச்சதும் நிறைய மாடலிங் வாய்ப்பு வந்தது. பி.பி.எல். மொபைல் போன் விளம்பரத்துக்காக மோகன் லால் கூட சேர்ந்து நடிச்சேன். இதைப் பார்த்து தான் துளசி தாஸ் 'பிரணய மணித்தூவல்' படத்திலே கதாநாயகி ஆக்கினார். கேரளம்



முழுக்க நல்ல பேர்.

அப்புறம் காலேஜ் போக ஆரம்பிச்சுட்டேன். இந்த நேரத்துல பாசில் சாரோட மேனேஜர், கபீர்கிட்டே என்னைப் பத்தி கேள்விப்பட்டு, சேரன் எங்க வீட்டுக்கு வந்தார். அப்பாகிட்டே பேசினார். எங்கிட்டே கதை சொன்னார். மொத்த கதையிலே என்னோட லதிகா கேரக்டர் ரொம்பப் புடிச்சது. உடனே





# தேவதை!

ஒப்புக்கிட்டேன். சென்னைக்கு வந்து சேரன் அலுவலகத்துலே பார்த்த பிறகுதான், அவர் தேசிய விருது வாங்கின டைரக்டர்ன்னு தெரிஞ்சது. அதைப்பத்தியெல்லாம் முன்னாடி எதுவுமே சொல்லாத, அவரோட தன்னடக்கம் பிடிச்சது" என்று பாராட்டுப் பத்திரம் வாசித்த கோபிகா 'ஆட்டோகிராஃப்' படத்தில் மலையாளப் பெண்ணாகவே வருகிறாராம்.

"மியூசிக், டான்ஸ்லே இன்ட்ரஸ்ட் இருக்கிற பொண்ணு நான். கேரளத்தில் வசிக்கிற ஒரு தமிழ்க் குடும்பத்துப் பையனா சேரன். நான் மலையாளம் பேசறேன். சேரன் தமிழ் பேசறார். மொழிப் பிரச்னை பெரிசா இல்லேன்னாலும், புரிஞ்சுக்கிறதுலே ஏற்படற சின்னச் சின்னத் தவறுகள்தான் எங்க காதலுக்குப் பிள்ளையார் சுழி போடுது. அது படமில்லே லைஃப்!" என்று சிலிர்த்துக் கொள்ளும் இந்தத் திருச்சூர் தேவதை, படத்திற்காகவே வீணையும், தம்பூராவும் கற்றுக் கொண்டிருக்கிறார்.

"நடனமும் ரெடிமேடாகத்தான் கற்றுக் கொண்டீர்களா?" என்று கேட்டதில் அழகாய் கோபப்பட்ட கோபிகா "அஞ்சு வயசுலேயே வாய்ப்பாட்டு, பரதம்னு விட்டுடுவாங்க. எனக்கு பரதம், மோகினியாட்டம், அரங்கேற்றம் பன்னிரண்டு வயசிலேயே முடிஞ்சுட்டு" என்று ஆச்சர்யமூட்டுகிறார்.

பாடல் காட்சிக்காக குலுமனாலி போய்விட்டு வந்ததை விவரிக்கும் போதே கோபிகாவின் பற்கள் தந்தியடிக்கின்றன. "அங்கே எல்லோரும் பத்து டிரஸ் போட்டிட்டிருந்தாங்க. கைக்கு கிளவுஸ், காலுக்கு சாக்ஸ் இல்லாம வெளியிலே போக முடியலே. அதுலே சேலை கட்டிக்கிட்டு நடிச்சேன். பனியிலே புரளுற மாதிரி காட்சி. தாங்க முடியலே. பல்லைக் கடிச்சுக்கிட்டு நடிச்சிட்டு இருந்தேன். முதல்நாள் படப்பிடிப்பு முடியற நேரம். டைரக்டர்கிட்டே போய் 'கடைசி ஷாட்டோ'ன்னு கேட்டேன். என்னாச்சுன்னு பதற்றமாயிட்டார். 'ஒண்ணுமில்லே' ஒரு அஞ்சு நிமிஷம் குடுத்தா போய் அழுதிட்டு வந்துடுறேன்னு, பர்மிஷன் கேட்டேன். அவ்வளவுதான்! குளிர் தாங்க முடியாமல் அழுது தீர்த்துட்டேன். ஆனால் அந்தப் பனிமலைகளும், பிரம்மாண்ட இயற்கையும் மனசுக்கு ரொம்ப இதமா, அமைதியா இருந்தது. இந்தச் சூழ்நிலை, மதம் பிடிச்ச மனுஷங்களைக்கூடப் பக்குவப்படுத்திடும். அப்புறம் எப்படித்தான் காஷ்மீர்லே தீவிரவாதிகள் துப்பாக்கியோட அலையறாங்களோ?" என்று தத்துவார்த்தமாக கோபிகா கேட்க, ரிஷிகேஷுக்குப் போய்விட்டு வந்த இளம்துறவி போல அமைதியாகி விடை பெற்றோம்!

-ஜே.ஜே.

# நடக்குமென்பார்; நடக்கும்!



**மேஷம் :** புதிய தொழில்களில் ஈடுபட நல்லதொரு சமயத்தை எதிர்பார்த்திருந்தீர்கள் அல்லவா? இதோ அமைந்தேவிட்டது அயனான சந்தர்ப்பம். எடுத்த காரியங்கள் இனிதே நடக்கும். தெளிவான சிந்தனை, புதியவர்களின் அறிமுகம் போன்றவற்றால் வெற்றிக் கனியை எளிதில் பறிப்பீர்கள். எவ்வளவு சிக்கலான காரியத்தையும் சுலபமாகச் செய்து உயர் அதிகாரிகளின் பாராட்டைப் பெறுவீர்கள். பெண்களின் எண்ணம் நிறைவேறும். குல தெய்வப் பிரார்த்தனை நிறைவேறும்.





**ரிஷபம் :** 'குடும்பஸ்தானத்தில் திருநள்ளாறு நாயகன் அமர்ந்திருக்கிறாரே, என்ன செய்வாரோ, எப்படியெல்லாம் படுத்துவாரோ?' என்று நீங்கள் பயப்படுவது நியாயம்தான். ஆனால் தர்மகர்மாதிபதி 7 1/2 சனியில் பாத சனி. அதிலும் 1வது சுற்று நடைமுறையில் உள்ளவர்களுக்கு அதிர்ஷ்டமான திருப்பங்கள் ஏற்படும். கணவன் - மனைவி உறவு இனிமையாக இருக்கும். திருமண முயற்சி கை கூடும். பிரிந்து போனவர்கள் ஒன்று சேர்வார்கள். சனி ப்ரீதி, கிரக வழிபாடு செய்தால் தீமைகள் குறையும்.



**மிதுனம் :** குருபலம் அமோகமாக இருக்கிறது. எனவே, பொன், ஆடை, ஆபரணச் சேர்க்கை ஏற்படும். குடும்பத்தில் சுபமங்கள காரியங்கள் மிக இனிதாக நிறைவேறும். திருமண முயற்சியில் உள்ளவர்களுக்கு, குடும்ப வாழ்க்கை சிறப்பாக அமையும். கமிஷன், கான்ட்டிராக்ட், எலக்ட்ரிகல்ஸ், எலக்ட்ரானிக்ஸ், பதிப்பகம், பத்திரிகை, அச்சகம் துறைகளைச் சேர்ந்தவர்களுக்கு நல்ல ஏற்றமான காலம். ஜென்ம சனி இப்போது நடைபெறுவதால், சனி கிரகத்துக்கு சிறப்பு வழிபாடு செய்வது நலம் தரும்.





**கடகம் :** தன ஸ்தானாதிபதி சூரியனார், லாபஸ்தானமாகிய 11ம் இடத்தில் ராகுவுடன் கூடி புதனுடன் உலவுவதாலும், ஜென்ம ராசியில் உச்சம் பெற்ற குரு சஞ்சாரம் என்பதாலும், சரளமான பண வசதி ஏற்பட்டு, உற்சாகத்தோடு உலா வருவீர்கள். புதிய உத்தியோக முயற்சிகள் வெற்றி உண்டாக்கும். பழைய கடன் தொல்லைகள் விலகும். கூட்டுத் தொழிலில் முன்னேற்றமான பலன்கள் உண்டாகும். கலைத் துறையைச் சேர்ந்தவர்கள் முன்னேற்றம் காண்பார்கள். உடன் பிறந்தவர்கள், நெருங்கியவர்கள் உதவுவார்கள். ஞானிகள் தொடர்பு நன்மை தரும்.



**சிம்மம் :** உத்தியோக விஷயத்தில் மனசஞ்சலம் கொண்டு, உழன்று கொண்டிருந்த காலமெல்லாம் மலை ஏறிப் போச்சு. இனி, சகல வகையிலும் நல்ல முன்னேற்றம் உண்டாகும். அலுவலகத்தில் எல்லோருடைய பாராட்டுகளையும் பெற்று செல்வாக்குடன் திகழ்வீர்கள். சனி பகவான், 11ல் லாபஸ்தானத்தில் இருப்பதால் பழைய கடன், கஷ்டங்கள் படிப்படியாகக் குறையும். பண வசதி பெருகும். பெண்களுக்கு, திருமணம் கூடி வரும்.





**கன்னி :** எப்போதும் துடிப்புடனும் உற்சாகமான மனநிலையுடனும் வளைய வரும் கன்னி ராசிக்காரர்களுக்கு, இந்த வாரம் அசத்தல் வாரமாக அமைய விருப்பதற்கு அட்வான்ஸ் வாழ்த்துக்கள். குறிப்பாக மாணவர்களின் எண்ணம் இனிமையாக நிறைவேறும். சில வெளிநாட்டுத் தொடர்புகள் பயன் தரும் வகையில் அமையும். நீண்ட காலமாக இழுத்துக் கொண்டே போன சொத்து, கோர்ட்டு, கேஸ் விவகாரங்கள் நிம்மதியையும் அனுகூலமான திருப்பத்தையும் தரும். ஸ்ரீகுரு ராகவேந்திரரை பூஜிக்கவும்.



இந்திய 'ஏ' கிரிக்கெட் அணிக்குத் துணை கேப்டனாக நியமிக்கப்பட்டிருக்கும் தமிழக வீரர் ஹேமங் பதானி (கடகம்) உற்சாகமாக உலா வரப் போகிறாராமே!



**துலாம் :** குரு பகவான், குடும்பஸ்தானமாகிய இரண்டாம் இடத்தைப் பார்ப்பதால், திருமணம் போன்ற சுபகாரிய முயற்சிகள் கை கூடும். புதிய பொருள் சேர்க்கை ஏற்படும். கோர்ட் விவகாரம் அனுகூலமாகும். உடன் பிறந்தவர்களால் சிற்சில பிரச்னைகள் ஏற்பட்டு, உடனே விலகும். பெண்களுக்கு ஆரோக்கிய மேன்மை ஏற்பட்டு, உற்சாகமாக உலா வருவார்கள். எலக்ட்ரானிக்ஸ், விஞ்ஞானம், ரசாயனம், தோல் பொருள், ஏற்றுமதி, இறக்குமதி, ஜவுளி போன்றவை ஆதாயம் கொண்டு வரும்.



**விருச்சிகம் :** ராசிநாதன் செவ்வாய் 4ல் அமர்ந்து, அவ்வீட்டின் அதிபதியான சனி 8ல், 9ல் உச்சம் பெற்ற குரு என்பதால், புனித காரியங்களில் ஈடுபாடு அதிகரிக்கும். எதிர்ப்புகள் யாவும் விலகிக் கொள்ள அமைதியான சூழ்நிலை உண்டாகும். சுய தொழில், வியாபாரத்தில் அதிர்ஷ்டமான திருப்பங்கள் நேரிடும். வெளிநாட்டிலிருந்து எதிர்பார்த்த நிதி உதவி வந்து சேரும். தொழில் சம்பந்தமான பயணம் நன்மையே தரும்.



**தனுசு :** கலைத் துறையைச் சார்ந்தவரா? அதிலும் சினிமா, சங்கீதம், நாட்டியம், ஓவியம் போன்ற நுண்கலையைச் சேர்ந்தவர்களா? நீங்கள் ஆவலுடன் எதிர்பார்த்த பொற்காலம் வந்தேவிட்டது. காற்றுள்ளபோதே தூற்றிக் கொண்டால், மளமளவென்று முன்னேற்றம் காணலாம். ஒரு சில தனுசு ராசிக்காரர்களுக்கு, புதிய வீடு வாங்கவோ, கட்டவோ நல்ல சந்தர்ப்பம் அமையும். பெண்களைப் பொறுத்தவரை, நல்ல பலன்களே உண்டாகும்.



**மகரம் :** வாகனம், டிராவல்ஸ், ஹோட்டல், உணவுப் பொருள்கள், ஜவுளி, மருத்துவம், கெமிக்கல்ஸ், உலோகம், எண்ணெய் போன்ற தொழில்கள் எதிர்பாராத லாபம் கொண்டு வரும். வெளிநாட்டுத் தொடர்புடைய வியாபாரம் அனுகூலம் தரும், அதிகரிக்கும். பிரிந்தவர்கள் கூடுவதால் மனமகிழ்ச்சி உண்டாகும். ஒரு சில பெண்களுக்கு, மகப்பேறு பாக்கியம் கிடைக்கும்.



**கும்பம் :** அரசாங்க விவகாரங்களில் மாட்டிக் கொண்டால், கழன்று வெளியே வருவது இலேசுப்பட்ட காரியமா என்ன? ராசிநாதன் சனி பகவான், 5ம் இடத்தில் பூர்வ புண்ணிய ஸ்தானத்தில் சஞ்சாரம் என்பதால், தெய்வ பலம் அதிகரித்து, பிரச்னைகளிலிருந்து மீண்டு வருவீர்கள். பிரபு தனவான்கள் ஆதரவு கிடைக்கும். புதிய உத்தியோகத்தில் மனத்தைச் செலுத்துங்கள். உங்கள் எதிர்கால வாழ்க்கைக்குக் கொழுகொம்பாக அமையும். வெளிநாட்டிலிருந்து நீங்கள் எதிர்பார்த்த நல்ல தகவல் வந்து சேரும். ஸ்ரீ காஞ்சி காமாட்சியம்மனை தியானிக்கவும், மங்களம் பெருகும்.



**மீனம் :** கணவன் - மனைவி இடையே பாசம் இழையோடும். குரு பலம் நிறைந்து இருப்பது மிகப் பெரிய ப்ளஸ் பாயிண்ட் என்பதால், சுப காரியங்கள் மங்களகரமாக நடந்து மன மகிழ்ச்சி தரும். சுபச் செலவாகவே இருந்தாலும், வரவுக்கு மீறிய செலவு ஏற்பட்டு, திக்குமுக்காட வைக்கலாம், உஷார்! உத்தியோகஸ்தர்களுக்கு அனுகூலமான போக்கு நிலவும். பதவி உயர்வு, ஊதிய உயர்வு, இடமாற்றம் ஆகிய சுபப் பலன்கள் ஏற்படும்.

## அக்னிசர்மா பக்கம்

## ஜூன் 4 முதல் 10 வரை

நல்ல நாள் பார்த்து, வேலையில் சேரப் போகிறீர்கள். குரூப் டிஸ்கஷன், இன்டர்வியூ, 'பேரம்' எல்லாம்தான் பிரமாதமாகச் செய்து விட்டீர்களே? வலது காலை எடுத்து வைத்து புது அலுவலகத்துக்குள் நுழைகிறீர்கள்.

கை - குலுக்கல்கள், அறிமுகங்கள் எல்லாம் முடிந்து உங்கள் இருக்கையில் அமர்த்தப்படுகிறீர்கள். போட்டிகள் நிறைந்த வேலைகள் உலகத்தில், உங்கள் இடத்தைக் கெட்டியாகப் பிடித்துக் கொள்ள உறுதி எடுத்துக் கொள்ளுகிறீர்கள்.

ஒரு நிறுவனத்துக்கு வருகையில் நீங்கள் உங்களோடு கொண்டு வருபவை, அறிவு, திறமை, மனோபாவம் என்ற மூன்றுதான்.



கல்லூரிக் கல்வி மூலம் நீங்கள் சேர்த்துக் கொண்ட அறிவை உங்கள் பணியில் எப்படிக் காண்பிக்கப் போகிறீர்கள் என்பது ஒரு சவால். புத்தகத்தில் படித்ததற்கும், நீங்கள் கவனிக்கப் போகும் வேலைக்குமிடையே நிறைய இடைவெளி இருப்பது முதலில் பூதாகாரமாகத் தெரியும். ஆனால் எத்தனை சீக்கிரம் அந்த இடைவெளியைக் குறைத்துக் கொண்டு முன்னேறுகிறீர்கள் என்பது முக்கியம்.



ஆர்.கண்ணன்

உங்கள் திறமையை முழுவதும் காண்பிக்க ஏற்ற இடம் உங்கள் முதல் பணிதான். கூடவே பிறருடன் சகஜமாகப் பழகுவது எப்படி, சக - ஊழியர்கள், உங்கள் கீழ் பணிபுரிபவர்கள், இவர்களுடன் பழகுவது எப்படி, என்பவை உங்கள் திறமையைப் பொறுத்தவை. 'நிர்வாகம்' என்றால் என்ன என்பதை நேரடியாக நீங்கள் இங்கேதான் புரிந்து கொள்ளுகிறீர்கள்.

அடுத்ததாக மனோபாவம் - ஆட்டிட்யூட். நீங்கள் எப்படி நடந்து கொள்ளுகிறீர்கள் என்பதை உங்கள் ஒவ்வொரு செயலும் வெளிப்படுத்தும். வெற்றி என்பது இதில்தான் பொதிந்து இருக்கிறது. கார்ப்பரேட் உலகில் நுழையும்போது, உங்கள் பெயரோடு சில பட்டங்கள் இணைந்திருக்கும்; பணி அனுபவம் எதுவும் இருக்காது. உங்கள் குறிக்கோள் எல்லாம் உங்கள் மேலதிகாரியிடமிருந்தும், கீழே பணிபுரிபவர்களிடமிருந்தும் நிறைய நிறையக் கற்றுக் கொள்ளுவதாகத்தான் இருக்க வேண்டும். அதுதான் உங்களுக்குக் கை கொடுக்கும்.

முதல் முதலாக ஒரு வேலையில் சேருகிற போது, பலருக்கும் தன்னம்பிக்கை பலவீனமாக இருக்கும். புதிய அலுவலகத்தில் நுழைந்ததுமே,

# புது உலகம் புதுச் சூழல்!

எல்லார் கண்களும் உங்கள் மீதே படிந்திருப்பது போல உணர்வீர்கள். கொஞ்சம் பய உணர்வுகூட இருக்கும். ஆனால் உங்கள் சிந்தனைகளைத் திரட்டிப் பணியில் இறங்குகிற போது, அவை மெல்ல மறையத் தொடங்கும்.

கடினமான உழைப்புக்குத் தயாராக இருங்கள். எல்லா அதிகாரிகளும், புதிய நபர் என்றால் அவரை எப்படி வேண்டுமானாலும் குழைத்துப் பிசைந்து நிறுவனத்துக்குத் தேவையான உருவில் உருவாக்கிவிடலாம் என்று நினைப்பார்கள். உங்கள் முதல் வேலையில் உங்கள் முழுத் திறமையையும் காண்பியுங்கள். "என்ன, வேலையை முடிச்சாச்சா?" என்று கேட்கிற மாதிரி வைத்துக் கொள்ளாமல், மற்றவர்களைவிட இரண்டு - மூன்று மடங்கு உற்சாகத்துடன், செய்து முடியுங்கள். எதைச் செய்தாலும் நன்றாகச் செய்யுங்கள். உங்கள் மனோபாவம் உங்கள் செயலில்தான் வெளிப்படும். உங்கள் கவனத்தையும், உங்கள் திறனையும் முழுதும் செலுத்துங்கள். அரை குறையாகச் செய்து முடித்துவிட்டு, பிறர் குற்றங்குறைகளைத் திருத்திவிடுவார்கள் என்று எண்ணிக் கொண்டிருக்க வேண்டாம்.

நீங்கள் இருப்பது தெரிய வேண்டும். உங்கள் பணி கவனிக்கப்படுகிறதையும், அதற்கு அங்கீகாரம் கிடைப்பதையும் முக்கியமாகக் கருதுங்கள். தேவைப்பட்டபோது உங்கள் யோசனையை வழங்குங்கள்.

'வேலை வரட்டும், பார்க்கலாம்' என்று இருப்பதைவிட, நீங்களாக இழுத்துப் போட்டுக் கொண்டு செய்யும் 'இனிஷியேடிவ்' அவசியம். உங்களைச் சுற்றி ஒரு வட்டம் வரைந்து கொண்டு, அதற்குள் மட்டுமே இயங்காதீர்கள். புதிய சவால்களை ஏற்றுக் கொள்ளும் ஊழியரைத்தான் நிர்வாகம் விரும்பும்; மதிக்கும். கூடுதல் பணிகளை முன்வந்து ஏற்றுக் கொள்ளுங்கள். அதிகமாக இருந்தால் பகிர்ந்து கொள்ளுங்கள். 'நம்மால் முடியாதுப்பா!' என்று தள்ளி வைத்து விட்டுப் போகாதீர்கள்.

புதிய நபர் வரும்போது அலுவலகத்தில் புதிய காற்று வீச வேண்டும். புதிய ஐடியாக்கள் பேசப்பட வேண்டும். அவற்றுக்கு மேலிடத்திலிருந்தும், சக ஊழியர்களிடமிருந்தும் ஓர் எதிரொலி நிச்சயம் இருக்கும். பல சமயங்களில், மூத்த அதிகாரிகள் அல்லது அனுபவசாலியான ஊழியர்கள்கூட, கைகொடுத்து உதவுவார்கள்.

ஒரு சிறந்த டீம்-பிளேயராக இருங்கள். உங்கள் திறன், தகவல், சாமர்த்தியம், எல்லாமே சமயத்தில் பயன்பட வேண்டும் என்று நினையுங்கள். 'ஆகா, நமக்கு எல்லாமே தெரியும்' என்ற மனோபாவத்தைக் கழற்றி வையுங்கள். அது ஆபத்தானது.

முதல் வேலை என்பது உங்கள் பயிற்சிக்களம். 'அதிகம் தெரிந்து கொள்ளுவதே முதல் வேலையில்தான்' என்று சொல்லுவதுண்டு. அதனால் புகழ்ச்சியை மகிழ்வோடு ஏற்கும்போது, குறைகளைச் சுட்டிக் காட்டுகிறவர்களிடம், 'சாரி... இனி இப்படிச் செய்ய மாட்டேன்' என்று சொல்லுகிற பண்பையும் கற்றுக் கொள்ள வேண்டும்.

அப்ளிகேஷன் போட்டோம், பேட்டிக்கு அழைப்பு வந்தது என்று எல்லாருக்கும் அமைந்து விடாது. இல்லையா?

எப்படி அரசுத் துறையில் எம்ப்ளாய்மென்ட் எக்ஸ்சேஞ்ச் செயல்படுகிறதோ அதே போல, தனியார் துறையில் 'பிளேஸ் மென்ட் சர்வீஸ்'

ஏறு நூறு - 15

அல்லது ஜாப் கன்சல்டன்ட்ஸ் இருக்கிறார்கள்.

இவர்களிடம் உங்கள் முழுமையான தகவல்களைப் பதிவு செய்து கொண்டால், தகுந்த இடம் பார்த்து உங்களை வேலையில் அமர்த்துவார்கள். இந்த நிறுவனங்களிடம், பல கம்பெனிகளும், தொழிற்சாலைகளும் தங்கள் தேவைக்கு ஏற்ற நபர்களைப் பரிந்துரை செய்யுமாறு கேட்டுக் கொள்ளுகின்றன. நீங்களாக வேலை தேடி, ஒவ்வொரு கம்பெனியாக ஏறி இறங்குவதற்குள் போதும் போதும் என்றாகிவிடும் இல்லையா? பணி ஆலோசகர்கள் அந்தப் பொறுப்பை ஏற்றுக் கொண்டு, உங்கள் சிரமத்தைக் குறைத்து விடுகிறார்கள்.

ஒரு கம்பெனியின் தேவைக்கும் உங்கள் 'ரெஸ்யூம்'க்கும் பொருத்தம் இருந்துவிட்டது என்றால், உங்கள் பெயர் உடனே அந்த நிறுவனத்துக்குச் சிபாரிசு செய்யப்பட்டு விடுகிறது.

இப்போதெல்லாம் 'ரெஸ்யூமே' டைப் செய்து அல்லது கணினி பிரின்ட் எடுத்து அனுப்ப வேண்டும் என்ற அவசியம் கூட இல்லை. 'ஆன்-லைன்' முறை வந்துவிட்ட பிறகு, எல்லாம் கம்ப்யூட்டர் வழியாகவே பரிவர்த்தனை செய்து கொள்ள முடிகிறது. இதனால், உங்கள் பயோடேட்டாவைப் பார்க்க நேரிடுகிற நிறுவனம், அவர்கள் தேவையைப் பூர்த்தி செய்யக் கூடியவர் நீங்கள் என்று உணர்ந்து கொண்டுவிட்டால், உங்களைப் பேட்டிக்கு வரச் சொல்லி அழைப்பு விடுப்பார்கள்.

எத்தனை வசதி, பாருங்கள்!

ஒரு கன்சல்டன்ட் போதுமே என்று இருந்து விடாதீர்கள். உங்களுக்குச் சில நிறுவனங்கள் கன்சல்டன்ட் மூலம்தான் பேட்டிக்கு அழைப்பு விடுப்பார்கள் என்று தெரிந்தால், அந்த கன்சல்டன்ட்டிடம் பதிவு செய்து கொள்ளுவது பயன்தரும்.

ஆனால் இப்படிப்பட்ட கன்சல்டன்ட்டு களிடம் பதிவு செய்து கொள்ளுமுன், நீங்கள் சில விஷயங்களில் மிகத் தெளிவாக இருக்க வேண்டும்:

- எப்படிப்பட்ட நிறுவனங்களில் நீங்கள் பணி புரிய விரும்புகிறீர்கள்?
- பதவி, பதவியில் திருப்தி இவற்றோடு சம்பளம் முதலியவை எப்படிப்பட்டதாக இருக்க வேண்டும் என்று கருதுகிறீர்கள்?
- எந்த மாதிரி நிறுவனங்களுக்கு உங்கள் 'ரெஸ்யூமே' கொடுக்கப்பட வேண்டாம் என்பதிலும் கவனமாக இருங்கள்.




உங்களை வேலைக்கு அமர்த்தும் நிறுவனம் போலவே உங்கள் கன்சல்டன்ட் நிறுவனத்தையும் நினையுங்கள். அவர்கள்தான் உங்களைத் தகுந்த இடத்தில் வேலைக்குச் சிபாரிசு செய்கிறார்கள். அதனால் அவர்கள் மனத்தில் நல்ல அபிப்ராயத்தை உருவாக்க வேண்டும்.

சில சமயங்களில் உங்களுக்குப் பொருத்தமான அல்லது நீங்கள் விரும்பும் வேலை கிடைக்கத் தாமதம் ஆகலாம். 'அவர்களிடம் தான் பதிவு செய்து விட்டோமே, இனி அவர்கள் பாடு' என்று கையைக் கட்டிக் கொண்டு உட்கார்ந்து விடாதீர்கள். வேறு எங்கெங்கு வாய்ப்புகள் இருக்கின்றன என்றும் கூர்ந்து கவனியுங்கள்.

(தொடரும்)




**சா**ஷே பாக்கெட்டுகளில் இப்போது அறிமுகமாகியுள்ளது புலி மார்க் சீயக்காய் தூள். 25, 50 கிராம்களில் அறிமுகமாகியிருக்கும் இவற்றின் விலை முறையே ரூ.1.25, ரூ.2.50 ஆகும். இரசாயனப் பொருட்களைக் கலக்காமல் முழுக்க முழுக்க மூலிகைப் பொருட்களைக் கொண்டே இது தயாரிக்கப்படுகிறதாம்.

**ஸ்ரீ மயில்மார்க் கம்பெனி, 1008 (431), திருவொற்றியூர் நெடுஞ்சாலை, சென்னை - 21.**

‘**ஐ**யையோ முகமெல்லாம் பருவா இருக்கே, புள்ளிகளா இருக்கே’ என்று கவலைப்படுபவர்களுக்காக அறிமுகமாகியுள்ளது ‘சாந்திக்’ ஆயுர்வேத ஸ்பெஷியல். முகத்தில் இரண்டு வாரங்கள் தொடர்ந்து தடவினால், பரு, புள்ளிகள் மாயமாகும் என்கிறது இந்நிறுவனம்.

**தர்ஷணா ட்ரெடிஷனல் ப்ராடக்ட்ஸ், 46, பகல்லா ரோடு, சென்னை - 17, போன் : 28144790**







**பா**ம்பினோ ஆக்ரோ இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட் நிறுவனம் உடனடி ரவா இட்லி மிக்ஸை அறிமுகப்படுத்தியுள்ளது. வெந்து வரும் இட்லியை நாக்கில் போட்டால் வித்யாசமான ருசியை உணரலாம் என்கிறார்கள் இந்நிறுவனத்தினர். இந்நிறுவனம் ஏற்கெனவே குலோப் ஜாமூன் மிக்ஸ், பாதாம் மில்க் மிக்ஸ், பாயசம் மிக்ஸ், சூப் வகைகள் போன்றவற்றை அறிமுகப்படுத்தியுள்ளது. ரவா இட்லி மிக்ஸின் விலை ரூ.35.

**17, பாலமுத்து கிருஷ்ணன் தெரு, தி. நகர், சென்னை - 17.**






**ஸ்**டீல் வின் ரிக்லைனர் நாற்காலி உங்கள் வசம் இருந்தால், அதை சாய்வு நாற்காலியாகவோ, ஒய்வுப் படுக்கையாகவோ, பயன்படுத்தலாம். பன்னிரண்டு மாத உத்திரவாதத்துடன் கிடைக்கும் ஸ்டீல் வின் ரிக்லைனர் நாற்காலிகளை வீட்டில் இருப்பவர்கள் அனைவரும் சௌகரியத்துக்கு ஏற்ப பயன்படுத்தி மகிழலாம்.

**சிவசக்தி இண்டஸ்டிரீஸ், 100, மீனாம்பேடு ரோடு, அம்பத்தூர், சென்னை - 98. போன் : 26233957, 26248333**



# ஜில்லு மல்லு

—கதிர்



டேய்... எங்கயோ கிளம்பிட்டா மாதிரி தெரியுது.




வெயில் தாங்கலை. ஊட்டிக்குக் கிளம்பறேன்.
அடப்பாவி என்னை விட்டுட்டா?




ஏன்... அங்க நான் கொஞ்சம் கூலா இருக்கிறது பிடிக்கலியா...?
இஷ்டமிருந்தா சொல்லு... இல்ல என் பிரண்டு பிண்டு கூட போறேன்.




ஆஹா... பிண்டு, சிண்டுன்னு குண்டு போடறாளே...
சரி கூட்டிக்கிட்டுப் போறேன்... கொஞ்சம் செலவாகுமே பரவா யில்லையா?




...செலவாகுமா?
பின்ன இந்த எக்ஸ்ட்ரா லக்கேஜெல்லாம் யார் சுமக்கறது?




முதல்ல இந்த எக்ஸ்ட்ரா லக்கேஜை ஒழுங்கா கொண்டு போய் கொண்டுட்டு வா...
... அடேங்கப்பா!! உடம்பு ஊட்டிக்குப் போறதுக்கு முன்னாடித் தொந்தி தொட்டபெட்டாவத் தொடும் போலிருக்கு!






கல்யாணம் முடிஞ்ச கையோட ஊட்டி, கொடைக்கானல்னு மனைவி தோள் மேல ஜாலியா கைபோட்டு, சுத்திட்டு வரதோட முடியற விஷயமா தேனிலவு? கணவன் மனைவி இரண்டு பேரும் மனசளவுல விட்டுக் கொடுத்து பிரச்னைகளுக்கு முட்டுக் கொடுத்தா தினந்தோறும் தேனிலவுதானே! அதுக்கு என்ன பண்ணலாம்? இதைப் படிங்க.

பிரகாஷின் நடையில் தென்பட்ட சோர்வு, வாசலில் அவன் தனது செருப்புகளைக் கழற்றிய விதம் இவற்றிலிருந்தே ஸ்ரீராமுக்குத் தெரிந்துபோனது. 'நம் காதில் விழுந்த விஷயம் உண்மைதான்!'

''அங்கிள், இந்தாங்க எங்க கல்யாண ஆல்பம். ஸ்டூடியோவிலே இருந்து வாங்கிட்டு நேரே இங்கேதான் வரேன்'' என்று மூன்று மாதங்களுக்குமுன் உற்சாகம் பொங்கக் கூறிய அந்தப் பிரகாஷுக்கும் இவனுக்குமிடையே எத்தனை வித்தியாசம்!

செண்டிமெண்ட் சமாசாரங்களில் அவ்வளவாக ஈடுபாடு இல்லாத ஸ்ரீராம் கூட, ''என்னங்க, பிரகாஷுக்கும் அவன் பொண்டாட்டிக்கும் திருஷ்டி சுத்திப்போடச் சொல்லுங்க. கண்படற அளவுக்கு ஆல்பத்திலே அழகா விழுந்திருக்காங்க'' என்று மனைவி லட்சுமி சொன்னதை ஒப்புக் கொண்டார். அற்புதமான ஜோடிப் பொருத்தம்தான்.



ஆனால் தொடர்ந்து ஸ்ரீராம் கேள்விப்பட்ட விஷயங்கள் உற்சாகமளிப்பதாக இல்லை. பிரகாஷுக்கும் அவன் மனைவி ப்ரீதாவுக்குமிடையே நிறைய கருத்து வேறுபாடுகள். விவாகரத்து என்ற வார்த்தைகூட அடிப்படுவதாகக் கேட்டதும், ஸ்ரீராமால் சும்மாயிருக்க முடியவில்லை.

உறவு என்றில்லாவிட்டாலும், இரு குடும்பங்களும் நன்கு அறிமுகமானவை. தன்னைவிடப் பத்து வயது சிறியவனான பிரகாஷைத் தன் வீட்டுக்கு வரச் சொன்னார். வந்திருக்கிறான். 'மனைவி லட்சுமி' கோவிலுக்குப் போயிருந்ததுகூட ஒரு விதத்தில் வசதியாகப் போயிற்று, என்று எண்ணினார் ஸ்ரீராம்.

பாசாங்காகப் பேசத் தெரியாமல் நேரடியாக விஷயத்துக்கு வந்தார். "உனக்கும் ப்ரீதாவுக்குமிடையே டெர்ம்ஸ் சரியில்லையா?"



ஸ்ரீராம் தன்னைக் கூப்பிட்டனுப்பியதே இது பற்றிப் பேசுவதற்குத்தான் என்பதைப் பிரகாஷ் எதிர்ப்பார்த்திருக்க வேண்டும். சங்கடம் எதுவுமில்லாமல் "ஆமாம்" என்றான்.

"அங்கிள், என்மேலே உங்களுக்கு இருக்கிற அக்கறை

எனக்குப் புரியுது. எப்படியாவது என் கல்யாண வாழ்க்கையைச் சரி செய்துடணும்னு நினைக்கறீங்க. ஆனா அந்தக் கட்டமெல்லாம் தாண்டிடுச்சு. எனக்கும் அவளுக்கும் நிறைய விஷயத்திலே ஒத்துப் போகலே. சேர்ந்து அவதிப்படுவதைவிட பிரிஞ்சிடலாம்னு முடிவெடுத்திருக்கோம்."

மனத்தின் வலியை மறைத்துக் கொண்டு இலேசாகப் புன்னகைத்தார் ஸ்ரீராம். "முக்கியமா எந்த விஷயங்களிலே உங்களுக்குப் பிரச்னைன்னு தெரிஞ்சுக்கலாமா?"

"சீரியஸான விஷயங்






களே நிறைய இருக்கு."

"நான் ஒண்ணு சொல்லலாமா? வாழ்க்கையிலே எல்லாத்தையுமே சீரியஸா எடுத்துக்கக் கூடாது. நகைச்சுவை உணர்ச்சி இருக்கணும்."

"இதுதான் என் பாலிசியும். எங்க ஆபீஸிலே என் ஜோக்குகளைக் கேட்டு ரசிக்கவே என்னைச் சுத்தி எப்போதும் ஒரு கூட்டம் இருக்கும். ஆனா வீட்டிலே அப்படி ஒரு நிலை இல்லே. அதுவும் சமீபகாலமாக ப்ரீதாவுக்குக் கொஞ்சம்கூட சென்ஸ் ஆஃப் ஹ்யூமர் இல்லாமப் போயிடுச்சு. போனவாரம் ஒரு நாள் டீ.வி. பார்த்துக்கிட்டு இருந்தேன். அப்போ சமையலறையிலிருந்து வெளியே வந்த ப்ரீதா "டீ.வி.யிலே என்ன பார்க்கறீங்க?"ன்னு கேட்டா. உடனே நான்."

ப்ரீதாவின் குரல் சட்டென்று உயர்ந்தது : "டீ.வி.யிலே என்ன பார்க்கறீங்கன்னு கேட்டா, அவர் பார்க்கற நிகழ்ச்சியை சொல்லிட்டுப் போக வேண்டியதுதானே. "தூசி"ன்னு சொல்றார். எனக்கு எப்படி இருக்கும்! டீ.வி. செட் மேலே கொஞ்சம் அழுக்குப் படிஞ்சிருந்தது உண்மைதான். நான் என்ன வீட்டில் வேலை செய்யாமலா இருக்கேன்?"

லட்சுமி சுற்றும் முற்றும் பார்த்தாள். நல்ல வேளையாக கோவிலில் அன்று கூட்டமில்லை. தற்செயலாக ப்ரீதாவை கோவிலில் சந்தித்த லட்சுமி, அந்த வாய்ப்பை நழுவ விடுவதாக இல்லை. இவளுக்கும் இவள் கணவனுக்கும் ஏற்பட்டுள்ள சிக்கல்களைத் தீர்ப்பதில், தான் அணில் உதவியாவது செய்தாக வேண்டும்.

பிரகாஷ் சொன்ன பதில் லட்சுமிக்குப் புன்னகை வரவழைத்தது. "ப்ரீதா, கல்யாணத்துக்கு முன்னே அவன் இந்த மாதிரி ஜோக் அடிச்சிருந்தா நீ நிச்சயம் அதை ரசிச்சிருப்பேன்னுதான் நினைக்கறேன்" என்றாள்.

'இருக்கலாம்' என்பதுபோல் தோளைக் குலுக்கிக் கொண்டாள் ப்ரீதா. பின் அன்று தொடர்ந்து நடந்த பெரும் வாக்குவாதத்தைத் தயக்கமின்றிச் சொன்னாள்.

தூசு பெறாத விஷயத்தை ரொம்பப் பெரிதாக்கிட்டீங்களே?" என்றார் ஸ்ரீராம் கவலையுடன்.

"நான் அடித்தது ஒரு நல்ல ஜோக். அதிலே சண்டைபோட என்ன இருக்கு?"

"இந்தச் சண்டை பல விதங்களில் தடுக்கப்பட்டிருக்கலாம். "தூசி" என்று

கிண்டலடித்ததோடு நில்லாம கூடவே அவள் கேட்ட கேள்விக்கான பதிலையும் சொல்லியிருந்தாலே பாதிப் பிரச்னை அவுட். அல்லது ‘‘தூசி’ என்றபடியே அந்தத் தூசியை நீயே துடைச்சிருந்தாலும் பிரச்னை பெரிதாகி இருக்காது. வீட்டு வேலையின் சுமையில் அவள் எதையோ சொல்லப் போக வாக்குவாதம் நீண்டுவிட்டது இல்



லையா?''

''ஆக என் மேலேதான் தப்புன்றீங்களா?'' பரிதாபமாக பிரகாஷ் கேட்டபோது ஒரு நான்கு வயதுக் குழந்தை போலத் தெரிந்தான் ஸ்ரீராமுக்கு.

''யார் மேல தப்புன்றதை யோசிக்கறதைவிட எதிலே தப்புன்னு யோசிப்பதுதான் நல்லது'' என்றார் ஸ்ரீராம்.

''வீட்டிலேயே அடைஞ்சுக் கிடப்பதற்குப் பதிலா அப்பப்ப வெளியே போகலாமே'' என்று ஆலோசனை கூறிய லட்சுமியை, ப்ரீதா பார்த்த பார்வையில் இலேசான எரிச்சல் புலப்பட்டது.

''நாலு நாளைக்கு முன்னால் ஷாப்பிங் போனோம். பார்த்துப் பார்த்து சீப்பான பொருள்களைத்தான் வாங்கினேன். அப்பக்கூட இவர் முகத்திலே கடுகடுப்பு. எதுக்குதான் இவரையும் அழைச்சுக்கிட்டு வந்தமோன்னு தோணிச்சு.''

''சீப்பா வாங்கினதா பெருமை அவளுக்கு. ஆனால் அந்தப் பொருள்களை வாங்கியே ஆகணுமான்றதை யோசிக்க வேணாமா? விலை மலிவுன்னா யானையைக் கூட வாங்கிடுவா போல'' அலுத்துக் கொண்டான் பிரகாஷ்.

''பிரகாஷ், நீ ஒரு புதுமொழியைக் கேட்டிருக்கியா? தனக்குத் தேவையான பொருளை இரண்டு மடங்கு விலை கொடுத்து வாங்குபவன் ஆண். தனக்குத் தேவைப்படாத பொருளைப் பேரம்பேசி பாதி விலையில் வாங்குபவள் பெண்.''




ஸ்ரீராமோடு சேர்ந்து சிரித்தபோது பிரகாஷின் மனபாரம் கொஞ்சம் குறைந்தது.

இப்போது ஸ்ரீராம் தமது ஆலோசனையைக் கூறத் தொடங்கினார். "ஷாப்பிங் போகும்போது நீ ஒரு சில சாமர்த்தியங்களைக் கடைப்பிடிக்கலாம். அவள் வாங்க நினைத்திருந்த ஒரு பொருளை நீ நினைவுபடுத்தி வாங்கச் சொல்லலாம். தன்மீது கணவனுக்கு அக்கறை இருக்கிறதுங்கற நினைப்பே அவளுக்கு ஒரு சந்தோஷத்தைக் கொடுக்கும். அதற்கு அப்புறம் வேண்டாத பொருளை வாங்குகிறபோது, "இதை எதுக்கு வாங்கறே? வேஸ்ட்" என்பதுபோல் சொன்னால் அதனால அவள் கோபப்படமாட்டாள்"

பிரகாஷ் கொஞ்சம் சுவாரஸ்யத்துடன் அவரைப் பார்த்தான்.

‘‘பெண்களுக்கு ஷாப்பிங்கறது வாழ்க்கையின் சுவையான ஒரு பகுதி. ஆண்களுக்கு அப்படியில்லை. இதிலே எது சரி, எது தப்புன்னு ஆராய வேண்டியது அனாவசியம். ஷாப்பிங்குக்குப் போகும்போது பிரகாஷையும் கூட அழைச்சுட்டுப் போகணுங்கறது கட்டாயமில்லையே. அவனுக்குப் பிடித்த விஷயத்தை அவன் ரசிக்கட்டும். உனக்குப் பிடிச்சதை நீ செய். ஹோட்டலுக்குப் போனால் அவரவர்களுக்குப் பிடித்ததைச்





சாப்பிடுவதில்லையா? அந்த மாதிரி தான் வாழ்க்கையின் பிற பகுதிகளும் இருக்கணும். கட்டாயப் படுத்துவதைக் குறைத்துக் கொண்டாலே, பல கசப்புகளைத் தவிர்க்கலாம்."

லட்சுமி கூறியதை ப்ரீதாவுக்கு மறுக்கத் தோன்றவில்லை. மாறாக 'அட ஆமாம்' என்று பட்டது. ஆனால் எல்லாவற்றிலுமே தப்பு தன்மேல்தான் என்று லட்சுமி நினைத்து விடக் கூடாதே. அவசர அவசரமாகத் தன் தரப்பு நியாயத்தைக் கூறத் தொடங்கினாள்.

"அதுசரி ஆன்ட்டி. ஆனால் கருத்து வேறுபாடுகள் வரும்போது அதையெல்லாம் பேசித் தீர்த்துக் கொள்வதுதானே நல்லது? நான் அவரை உட்காரவச்சு என் தரப்பை

விரிவாகச் சொல்லுவேன். ஆனால் அவர் பிடித்து வைத்த பிள்ளையார் மாதிரி வாயை மூடிக்கிட்டிருப்பார். இவ்வளவு அழுத்தம் இருந்தால் எப்படி?''

லட்சுமி சில நொடிகள் மௌனமாக இருந்தாள். பிறகு "எல்லா கருத்து வேறுபாடுகளையுமே பேச்சுவார்த்தையில் தீர்த்துக் கொள்றது சாத்தியமில்லை. கொஞ்சம் நிதானமாக யோசித்துப்பார். உனக்கெதிரான கருத்துக்களை





பிரகாஷ் விவரமாகப் பட்டியலிட்டால் உனக்குக் கோபம் வருமா, இல்லை நியாயமா அவன் சொல்வதை ஆராய்ந்து பார்ப்பாயா?''

ப்ரீதா மௌனமானாள். லட்சுமிக் குத் திருப்தி ஏற்பட்டது. 'இந்தப் பெண் பொய் சொல்லவில்லை.'

''முதல்லேயெல்லாம் எனக்கு, நியாயம்னு பட்டதை அழுத்தமாவே சொல்லிக்கிட்டிருந்தேன். ஆனா அவ ஒண்ணு சொல்ல, நான் ஒண்ணு சொல்லன்னு பிரச்னை நீண்டுகிட்டே போச்சு. அதனாலதான் அவ எதையாவது எரிச்சலூட்டும்படி பேச ஆரம்பிச்சா நான் வாயை மூடிக்கத் தொடங்கிட்டேன். சொல்லப் போனா அந்த இடத்தை விட்டே நகர்ந்திடுவேன்.''

'நீ சொல்றது சில சமயங்களில் நல்லது

தான். ஆனால் எப்போதுமே இப்படி நடந்துக்கிட்டா அவளை நீ அலட்சியம் செய்வதாத்தான் நினைச்சுக்குவா. இதனால் விரிசல் அதிகமாகும். தவிர நிறைய பெண்களுக்குத் தங்கள் மனத்தில் உள்ளதைக் கொட்டிட்டாலேயே பாரம் குறைஞ்சிடும். அதைக் கேட்டுக் கொண்டாலே போதும். அவங்க சொல்றதையெல்லாம் நிறைவேற்றணுங்கறதுகூட இல்லை."

பிரகாஷ் ஸ்ரீராமை உற்றுப் பார்த்தான். "இவ்வளவு சொல்றீங்களே. நான் ஒண்ணு சொன்னா தப்பா எடுத்துக்க மாட்டீங்களே? உங்க மனைவி அன்பானவங்களா, உங்களைப் புரிஞ்சிக்கிட்டவங்களா அமைஞ்சுட்டாங்க. அதனாலே உங்க கல்யாண வாழ்க்கையிலே எந்தச் சிக்கலும் வராமப் போயிடுச்சு. ப்ரீதா மாதிரி குணமுடைய ஒருத்தி உங்களுக்கு மனைவியா வாய்ச்சிருந்தா அப்ப தெரியும்" என்றான் பட்டென்று.

'உபதேசம் செய்வது சுலபம். தனக்கு வந்தால்தான் தெரியும் தலைவலி' என்ற ஆதங்கம் அவன் குரலில்.

எம்.பி.ஏ. படித்த இளைஞன்தான். ஆனால் எவ்வளவு குறைவான அனுபவம் கொண்டவனாக இருக்கிறான். எந்த ஒரு கணவன் மனைவிக்குமிடையே சிக்கலே தோன்றாமல் இருந்திருக்குமா? தனக்கும் லட்சுமிக்கும் திருமணமான இரு மாதங்கள் கழித்து ஏற்பட்ட பெரும் கருத்து வேறுபாடு குறித்து விளக்கினார் ஸ்ரீராம். அந்த நிகழ்ச்சியை அவர் வெளிப்படுத்தியபோது பிரகாஷுக்கு ஆச்சர்யமாக இருந்தது.

"ஸ்ரீராம் அங்கிளுக்கும் லட்சுமி ஆன்ட்டிக்குமிடையே இப்படியெல்லாம் கசப்பு

ரேகைகள் ஓடியிருக்கிறதா?

"ஆனால் அன்றைக்கு ராத்திரியே இருவரும் தனித்தனியாக அதைப்பற்றி



நிறைய யோசித்தோம். மற்றொருவரின் தவறுகளை மட்டுமே யோசிக்காமல் நாம் என்ன தவறு செய்தோம் என்பதையும் யோசித்தோம்'' என்று லட்சுமியம்மாள் அன்று நடந்ததைத் தொடர்ந்து கொண்டிருந்தாள் ப்ரீதாவிடம்.

''உங்களைப் பற்றி நான் விமர்சனம் செய்ததில் தப்பில்லை. ஆனால் ஆரம்பத்திலேயே அப்படிக் கடுமையாப் பேசியிருக்கக்கூடாது. அதனாலதான் உங்களுக்கு அவ்வளவு கோபம் வந்துவிட்டது'' என்றாள் லட்சுமி.

''பதிலுக்கு உன்னை விமர்சனம் செய்ய வேண்டும் என்ற வெறியே வந்துவிட்டது எனக்கு. அப்படிச் செய்த போது அதைக் கொஞ்





சம் அன்போடு செய்திருக்கலாம். கோபத்தை அந்த அளவுக்கு வெளிக் காட்டியிருக்கக்கூடாது. அங்கேதான் தப்பு செய்துட்டேன்'' என்றார் ஸ்ரீராம்.

''என்ன இருந்தாலும் நான் செய்த முட்டாள்தனம் அதிகம்தான். எந்தப் பிரச்னையைப் பற்றி பேச நினைத்தேனோ, அதோடு நிறுத்திக் கொண்டிருக்க வேண்டியதுதானே. அதை விட்டுவிட்டுப் பழைய குப்பையையெல்லாம் நான் கிளறியிருக்கக் கூடாது. அதனால்தான் கருத்து வேறுபாடு பெரிய சண்டையிலபோய் முடிஞ்சுது'' என்றாள் லட்சுமி.

"நீ மனசு விட்டு உன் தப்புகளைப் பாத்தியா, அதனாலேயே எனக்கு உன்னை இன்னும் அதிகமா பிடிக்குது'' என்றார் ஸ்ரீராம்.

"எனக்கு மட்டும் என்னவாம்?'' என்றாள் லட்சுமி.

ஒரு சம்பவமாகத்தான் லட்சுமி இதைக்

கூறினாள் என்றாலும், ப்ரீதாவால் வேறு பல விஷயங்களை இதோடு இணைத்துப் பார்க்க முடிந்தது. இந்த வார்த்தைகளை அவர்கள் எவ்வளவு ரொமான்ஸோடு சொல்லியிருப்பார்கள், இதைத் தொடர்ந்து அவர்களுக்கிடையே உண்டாகியிருக்கக் கூடிய உடல் மற்றும் மன நெருக்கம் எவ்வளவு சிலிர்ப்பூட்டக்கூடியதாக இருந்திருக்கும் என்பதை அவளால் உணர முடிந்தது.

எப்போதாவது தன் தவறை ஏற்றுக் கொண்டு பிரகாஷிடம் மன்னிப்புக் கேட்டிருக்கிறோமா? யோசிக்கத் தொடங்கினாள் ப்ரீதா.

"ஆம்பளைன்ற ஈகோ என்னை மன்னிப்புக் கேட்கவிடாமல் தடுத்திடுச்சு" என்றான் பிரகாஷ்.

"என்னை மன்னிச்சிடுன்னு வார்த்தைகளில்தான் வெளிப்படுத்தணும்னு இல்லை. இருக்கவே இருக்கு 'சாரி'ன்ற சாதாரண வார்த்தை. அதையே கொஞ்சம் உணர்வு பூர்வமா சொன்னாபோதும். அல்லது செயல்பாடுகள் மூலமாகவேகூட தவறை உணர்ந்துட்டேன்றதைப் புரியவைக்கலாம்".

ஸ்ரீராமின் ஆலோசனைகள் இப்போது பிரகாஷுக்கு வெறுப்பைத் தரவில்லை. அதை ஸ்ரீராமும் புரிந்து கொண்டார். "பிரகாஷ், உனக்குத் தெரியுமா எனக்குக் கோபம் வரும்போது என்னைச் சாதம்போல நினைச்சுக்குவேன். அவளுக்குக் கோபம் வரும்போது இட்லியாக உருவகப்படுத்திக் கொள்வேன். இதிலேயே பல பிரச்னைகள் தீர்ந்துவிடும்"




என்ன சொல்கிறார் இந்த அங்கிள்? அவரது உவமானங்கள் கொஞ்சமும் புரியவில்லை பிரகாஷுக்கு.

ஸ்ரீராம் விளக்கத் தொடங்கினார்.

"அவள் மேலே எனக்குக் கோபமோ எரிச்சலோ வந்தால் உடனே அதைக் கொட்டிட மாட்டேன். ப்ரஷர் குக்கரில் ஆவி வரும் சமயத்தில் அதன்மீது வெயிட்டை வைக்கிறோமில்லையா? அதைப் போல மனத்தில் ஆத்திரம் பீறிட்டுக் வெளி வர முயற்சிக்கும்போது பக்குவம்கிற வெயிட்

டைப் போட்டு அதை வெளிவராமல் செய்துடுவேன். கொஞ்ச நேரமானதும் அரிசி குழைந்து சாப்பிடக் கூடிய சாதமாகும் இல்லையா? அதைப் போல என் மனத்திலும் தெளிவு பிறக்கும். 'இந்தக் கோபத்தைக் காட்டியே ஆகணுமா? அப்படியே காட்டிக் கிட்டாலும் லட்சுமியைப் புண்படுத்தாமல் எப்படிக் காட்டுவது?' என்பதைப் பற்றிய தெளிவு பிறக்கும். கோபம் வரும்போது அதைக் கொஞ்சம் ஆறப் போடுறது தான் நல்லது''

தான் அப்படிச் செய்ததில்லை என்பது புரிந்தாலும் "ஆனால் இதை அவளும் புரிஞ்சுக்கணும் இல்லையா? அவள் தன் கோபத்தைக் கொட்டிக்கிட்டே இருக்க நான் மட்டும் மௌனமாக இருப்பது நடைமுறையில் சாத்தியமா?'' என்று வாக்கு வாதத்தைத் தொடர்ந்தான்.

"உன் அலுவலகத்தில் மேலதிகாரிகள் கிட்டயும் சக ஊழியர்கள் கிட்டயும் எவ்வளவு யோசிச்சு நடந்துக்கிறே? அதுமாதிரிதான் மனைவி கிட்டேயும் சில விட்டுக் கொடுத்தல்கள் இருக்கணும். அவ கோபப்படும்போது நீ 'வெயிட்' போடாதே. அதை இட்லி போல நினைச்சுக்கோ. ஆவி வெளிறும்போதுதான் இட்லி நல்லா வேகும்.''

அவர் பேச்சை ரசித்தபடியே புன்னகையுடன் பிரகாஷ் கேட்டான். "ஒரே கிச்சன் உவமைகளா வாரி வழங்குறீங்களே. சமையலறையிலே உங்க நளபாகம்தானா அங்கிள்?''

"உண்மையைச் சொல்லணும்னா இவருக்குக் கல்யாணமாகிற வரையில் காப்பி

போட்டுக்கக் கூடத் தெரியாது. எல்லாமே அவங்கம்மாவே செய்துபழக்கிட்டாங்க. என் பெரிய ஓரகத்திக்கு உடம்பு சரியில்லாமப் போனதும் என் மாமியார் அங்கே போய் தங்கத் தொடங்கிட்டாங்க. அந்தச் சமயத்திலேதான் எங்களுக்குக் கட்டாயத் தனிக்குடித்தனம் தொடங்கிச்சு''

''ஓ, இதையே சாக்கா வச்சுக்கிட்டு அங்கிளுக்குச் சமையலறைப் பயிற்சி கொடுக்க ஆரம்பிச்சுட்டீங்களா?'' என்றபோது ப்ரீதாவின் குரலில் கேலி.



''அப்படியில்லம்மா. அது காலத்தின் கட்டாயம்.''

ப்ரீதாவுக்குப் புரியவில்லை.

''புரியும்படியாவே சொல்றேன்'' என்று தொடங்கினார் ஸ்ரீராம்.

''ஒரு தடவை லட்சுமி டைபாய்ட் வந்து படுத்துக்கிட்டா. அப்போ நான்தான் சமைக்கும்படி ஆனது. படுத்துக்கிட்டே அவ அடுத்தடுத்து என்ன செய்யணும்னு சொல்ல, நான் அதன்படியே சமைச்

சேன். அப்போதான் சமையல்ன்றது எவ்வளவு அவஸ்தையான வேலைன்னு புரிஞ்சது. அதற்கப்புறம் லட்சுமியிடம் எனக்கு மதிப்பு அதிகமானது. தினமுமே சின்னச் சின்ன உதவிகளை சமையலிலே அவளுக்குச் செய்யத் தொடங்கினேன். அதுக்கப்புறம் எங்களுக்கிடையே இருக்கிற நெருக்கம் அதிகமானது."

"உங்க விஷயம் வேறே அங்கிள். நீங்க ரெண்டே பேர்தான். ஆனா என் கூடவே எங்கம்மாவும் இருக்காங்க. சமையலறைக்குள்ளே நுழைஞ்சாலே ஏளனமாப் பாப்பாங்க" என்றான் பிரகாஷ்.

"அதுக்குக் காரணம் நீ கல்யாணத்திற்கு முன்னாலே உங்கம்மாவுக்குச் சமையலிலே எந்த ஒத்தாசையும் செய்திருக்கமாட்டே. என்ன சரியா?" என்று கேட்டார் ஸ்ரீராம். பிரகாஷ் ஒப்புக் கொள்வது போல் தலையைத் தொங்கவிட்டுக் கொண்டான்.

இந்தச் சமயத்தில் ஸ்ரீராம் திடீரென்று சிரித்தார். "நீ சொல்வது போலவே ஒரு சந்தர்ப்பம் எனக்கும் வந்தது. ஒரு தடவை அம்மா பத்து நாள் எங்ககூட தங்கிட்டுப்போக வந்தாங்க. எனக்குக் கொஞ்சம் சங்கடமா இருந்தது. 'தனக்கு எந்த உதவியும் செய்யாத மகன் பெண்டாட்டிக்கு மட்டும் இப்படி உதவி செய்யறானே'ன்னு நினைச்சுக்கலாம் அவங்க. அதே சமயம் வழக்கமாக வீட்டில் செய்துட்டு வந்த உதவிகளை நிறுத்திக்கவும் மனசு வரல்லே. உடனே ஒரு யுக்தி செய்தேன்" என்றார் ஸ்ரீராம்.

"உங்க அங்கிள் பெரிய ஆள்தான். எனக்குச் சமையலிலே கூடமாட ஒத்தாசை



செய்துக்கிட்டே தன் அம்மாவிடம் 'உனக்கு நான் ஒரு உதவி கூட செய்ததில்லேம்மா. ரொம்ப சுயநலமா இருந்திருக்கேன். தப்புதான்'னாரு. உடனே அவங்கம்மா உருகிட்டாங்க. "அதனாலே என்னடா, இப்பவாவது வீட்டு சிரமத்தை உணர்ந்து செய்யுறியே. அதுவே சந்தோஷம். உங்கப்பாகூட இப்படித்தான்'னு அவங்க ஒரு சொந்தக்கதைய எடுத்துவிட்டாங்க".

லட்சுமியின் சிரிப்பில் ப்ரீதாவும் கலந்து கொண்டாள்.

"அப்புறம் வேறென்னென்ன வேடிக்கையெல்லாம் செய்தாரு அங்கிள்?"

சட்டென்று ப்ரீதாவை உற்றுப் பார்த்தாள் லட்சுமி. "பிரகாஷ் பற்றிய உன்னுடைய குறைகளை உன் சிநேகிதிகளிடம் பகிர்ந்துப்பியா?" என்று கேட்டாள்.

"புண்பட்ட மனசுக்கு ஆறுதல் வேணுமே. அதனாலே எங்கம்மா கிட்டேயும் என் ஃப்ரெண்ட்ஸ் மூணு பேர் கிட்டயும் சொல்லிப்பேன்"

"அவங்க என்ன சொல்லுவாங்க?"

"எங்கம்மா எப்பவுமே என்னை அடக்குவாங்க. அட்ஜஸ்ட் பண்ணிக்கிட்டுப் போன்னுவாங்க. ஆனா என் சிநேகிதிங்க அப்படியில்லே. ஒரு தடவை மூணு பேரும் நேரே வந்து பிரகாஷிடமே அட்வைஸ் பண்ணிட்டுப் போனாங்க" என்றாள் ப்ரீதா.

லட்சுமி அவள் முகத்தை ஆராய்ந்தபடியே கேட்டாள் "அதுக்கப்புறம் உனக்கும்

பிரகாஷுக்குமிடையே உள்ள உறவு சரியாச்சா? மேலும் சிக்கலாச்சா?''

"என் ஃப்ரெண்ட்ஸ் போனப்புறம் என்கிட்டே சப்தம் போட்டார். அவங்க அநாகரிகமானவங்களாம் ஆன்ட்டி. தோழிக்காகப் பரிஞ்சு பேசறது தப்பா?'' என்றாள்.

"அவங்க செய்தது தப்பான்றது இருக்கட்டும். குடும்பத்திலே உனக்கும் பிரகாஷுக்கும் நடந்த அந்தரங்கச் சண்டைகளை அவங்க கிட்டே நீ சொன்னதுதான் தப்பு. கொஞ்சம் யோசிச்சுப் பாரு. இதனாலே சிக்கல்களை அதிகமாக்கிக்கிட்டிருக்கே. தவிர, உன்னைப் பற்றிய குறைகளை பிரகாஷ் தன் சிநேகிதர்கள்கிட்டே சொல்வதையோ, அவங்க வந்து உனக்கு அட்வைஸ் செய்வதையோ உன்னாலே ஏத்துக்க முடியுமா?''

ஏதோ வெளிச்சம் புலப்பட்டது ப்ரீதாவுக்கு.



"**கோ**பம் வரும்போது வேற சில விஷயங்களையும் மனசிலே வச்சுக்கணும் நீங்க'' என்று தொடங்கினார் ஸ்ரீராம்.

"இரண்டு பேரும் ஒரே சமயத்தில் கோபித்துக் கொள்ளக் கூடாது. அப்புறம் கோபம் என்பது சம்பந்தமே இல்லாத வேறொரு விஷயத்துக்காகக் கூட இருக்கலாம். ஆபீசிலே அலட்சியப்படுத்தப்




பட்டா அதை வீட்டிலே காண்பிப்பது போலதான் அது. அதிருக்கட்டும். கோபம் அதிகமானால் எப்படி தனித்தனித் திசையைப் பார்க்க ஆரம்பிச்சிடுவீங்களா? அல்லது அது பாட்டுக்கு அது, இல்லற உறவு பாட்டுக்கு அதுன்னு இருப்பீங்களா?''

பிரகாஷின் முகம் சிவந்தது. "அப்படி இருந்தால் மிருகங்களுக்கும் நமக்கும் என்ன வித்தியாசம் அங்கிள்? ஏதாவது பெரிய தகராறு வந்தால், அன்னிக்கு அவ அறைக்குள்ளேயும் நான் கூடத்திலேயுமாகத்தான் படுத்துக்கு

வோம்'' என்றான்.

"இது சரியான அணுகுமுறை இல்ல பிரகாஷ். உடல் நெருக்கம்கிறதும் பல சமயங்களில் மனவேறுபாடுகளைக் களைகிற மருந்தாக இருந்திருக்கு. சொல்லப் போனா தனது செக்ஸ் உணர்வுகள் அலட்சியம் செய்யப்படுவதன் காரணமாகக் கூட உன் மனைவி உன்னிடம் அர்த்தமில்லாத விஷயங்களுக்குக் கோபத்தை வளர்த்துக்கிட்டிருக்கலாம்.''

அதேசமயம் கணவன் மனைவிக்குள் விவாதம் முடிவடையாமலும், ரசாபாசமான திசையை நோக்கிச் செல்லும்போதும், என்ன செய்வது என்பது பற்றி லட்சுமி கூறிக் கொண்டிருந்தாள்.

"அதுக்கு நாங்க நிறைய டெக்னிக் வச்சிருக்கோம். நான் சட்டுனு அந்தச் சமயங்கள்ல டாபிக்கை மாத்திடுவேன். அல்லது அவர் ஏதாவது ஜோக் அடிப்பார். நிலைமை சரியாயிடும்.''

தாங்கள் ஏன் இப்படியெல்லாம் செய்ததில்லை? ப்ரீதா வியப்புடன் தன்னையே கேட்டுக் கொண்டிருக்க, லட்சுமி தொடர்ந்து கொண்டிருந்தாள்.

"இது என் பிரச்னை, உன் பிரச்னை என்பதுபோல் பார்க்காமல் 'இது நம் பிரச்னை' என்று பார்த்தாலே பாதி சிக்கல்கள் தீர்ந்துவிடும். தவிர, விவாதம் காரமாகும்போது எங்களிலே ஒருத்தர் 'சரி இதைப்பற்றி அப்புறம் பேசலாம்'னு சொல்லிடுவோம். அப்புறம் பேசத் தேவையே இல்லாமல் பல பிரச்னைகள்




தீர்ந்திருக்கு''

"அங்கிள், தானாக வந்து அவ என்னைப் பிரச்னையில் சிக்க வைச்சால் எப்படி? போன வாரம் ஒரு புது உடையிலே வந்து நின்னா. எப்படியிருக்குன்னா. 'இது உனக்கு எடுப்பாயில்லே'ன்னேன். முகத்தைத் தூக்கி வச்சுக்கிட்டா. இவ என்னதான் எதிர்பார்க்கிறா? எனக்குப் பிடிக்காத உடையை நல்லாயிருக்குன்னு பொய் சொல்லணுமா? பொய் சொல்வதையே தொழிலா வச்சுக்கிட்டு ஒரு இல்லறம் நடக்கணும்னா, அந்தப் போலித்தனமான வாழ்க்கை எனக்கு வேணாம்.''

பிரகாஷ் படபடப்பதைப் பொறுமையுடன் கேட்டார் ஸ்ரீராம். பின் "பொய் சொல்ல வேண்டாம் பிரகாஷ். ஆனால் உண்மையைப் பக்குவமாகச் சொல்ல

லாமே. "இந்த உடையைவிட போன மாசம் வாங்கின உடை உனக்கு அருமையா இருந்தது'ன்னு சொல்லலாம். இப்போதைய உடை ஏன் அவ்வளவு நல்லாயில்லேன்றதுக்கான காரணத்தைப் பக்குவமாகச் சொல்லலாம்'' என்றார்.

"லட்சுமி கூட நடுவிலே ரொம்ப பருமனாயிட்டா. 'கொஞ்சம் இளைச்சேன்னா நீ இன்னும் அழகாயிருப்பியே'ன்னேன். அவ்வளவுதான் டயட், உடற்பயிற்சின்னு மறுபடியும் ஸ்லிம்மாயிட்டா. சொல்வதை எந்த வார்த்தைகளில் வெளிப்படுத்தறோம்கிறது முக்கியம். தவிர, அதை எந்த விதமான குரலில் வெளிப்படுத்துகிறோம்கிறதும் ரொம்ப முக்கியம்'' என்றார் ஸ்ரீராம்.

"**பி**ரகாஷின் பிறந்த நாளைக் கொண்டாடினியா?'' என்று லட்சுமி கேட்டதும் ப்ரீதா உதட்டைப் பிதுக்கினாள்.



“அது இன்னும் நாலைஞ்சு மாசம் கழிச்சுதான் வருது” என்றாள்.

“அதுக்காக எதுக்கு வெயிட் பண்ணணும்? அவன் வேலையில் சேர்ந்த நாள், உங்கள் திருமணம் நடந்து மூன்று மாதங்களாச்சு, இப்படி ஏதாவது ஒரு சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக்கலாமே. வாழ்த்து சொல்றதும், வெளியேபோய் வருவதும் சந்தோஷமாக இருக்கத்தானே” என்றாள் லட்சுமி.



“கணவன் மனைவி அவ்வப்போது ஒருவரையொருவர் தொட்டுக் கொள்வதும் தலையை வருடிக் கொடுப்பதும் ரொம்ப அவசியம்” என்று ஸ்ரீராம் கூற, பிரகாஷ் கொஞ்சம் கூச்சத்துடன் அவரைப் பார்த்தார்.

“உன் அண்ணனாக நினைச்சுத்தான்டா இதையெல்லாம் சொல்றேன். அன்பு இருந்தால் மட்டும் போதாது. அதை வெளிப்படுத்தவும் தெரியணும். தொடுதல் என்பது செக்ஸ் சம்பந்தப்பட்டது மட்டுமில்லே. அதன் மூலம் பாசம் ஒருவரிடமிருந்து இன்னொருவருக்குப் பரவும்” என்றார் ஸ்ரீராம்.

“என் தவறுகளைப்புரிஞ்சுக்க முடியுது. ஆனால் என்ன செய்ய? நெருங்கிப் பழகத் தொடங்கிய பிறகு

தான் அடிப்படையிலேயே எனக்கும் பிரகாஷுக்குமிடையே நிறைய வித்தியாசங்கள் இருக்குதுன்னு தெரிஞ்சது ஆன்ட்டி'' என்றபோது ப்ரீதாவின் குரலில் அழுகை எட்டிப் பார்த்தது.

"அந்த வித்தியாசங்களை ரசிக்கக் கத்துக்க ப்ரீதா. சொல்லப்போனா ஒரே மாதிரி ரசனை எல்லா விஷயங்களிலும் இருந்தால் வாழ்க்கை போரடிக்கத் தொடங்கிவிடும். மற்றவரது வித்தியாசமான போக்கைக் கேவலப்படுத்தக் கூடாது. உனக்கு கர்நாடக சங்கீதம் பிடிக்கலாம். அதற்காக மேற்கத்திய சங்கீதம் பிடிப்பவர்களை அலட்சியப் படுத்தக் கூடாது. உனக்கு வாழ்க்கையிலே பாதுகாப்புன்றது முக்கியமாகப் படலாம். அவனுக்குச் சாகசச் செயல்களிலே விருப்பம் இருக்கலாம். வாழ்க்கைத் துணைவரை அப்படியே அவரது குறைகள் மற்றும் வித்தியாசங்களோடுதான் ஏத்துக்கணும்'' என்றாள் லட்சுமி.

**அ**ப்போது கோவில் குருக்கள் அவர்கள் பக்கமாக வந்தார். "கோவில் மூடற சமயம்'' என்றார் பவ்யமாக. லட்சுமியும் ப்ரீதாவும் எழுந்து கொண்டார்கள். ப்ரீதாவின் முகத்தில் தோன்றிய வித்தியாசத்தைப் பார்த்தபோது 'கோவில் கதவு வேண்டுமானால் இப்போதைக்கு மூடப்படலாம். ஆனால் இந்தப் பெண்ணின் மனக்கதவுகள் திறந்திருக்கின்றன. புதிய காற்றை அவளது மனம் உள்வாங்கிக் கொண்டிருக்கிறது' என்பது லட்சுமிக்குப் புரிந்தது.

**'நீ** ஒரு கணவன் மட்டுமில்லே பிரகாஷ். சீக்கிரமே ஒரு குழந்தைக்குத்

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / PMG (CCR) 572 / 03 - 05 *
Licensed to post without prepayment under PMG's Licence No. WPP 358 * Registered as a Newspaper in Srilanka. Supplement to the Kalki issue Dated 8.6.2003

தகப்பனாகலாம். ஆக உன் மனதளவில் அப்பாவாகவும் தயாராகணும். அப்போ குடும்ப வாழ்க்கை இன்னும் சொர்க்கமாகும்.''

ஸ்ரீராமின் வீடு ஒரு போதிமரமாகப் பட்டது பிரகாஷுக்கு.

''கணவனும் மனைவியும் ஒருவருக்கொருவர் நேர்மையாகவும் நாணயமாகவும் நடந்துக்கணும். பொறுமையும் விட்டுக் கொடுத்தலும் மாறிமாறி நடக்கணும். எந்த மனித உறவுமே செழிக்க இது தேவை. இல்லற வாழ்க்கையில் அது அதிகப்படியாகத் தேவை, அவ்வளவுதான்.''

"சரி வரட்டுமா அங்கிள்?" என்று பிரகாஷ் எழுந்தபோது ஸ்ரீராமுக்கு அந்தச் சந்தேகம் வந்தது. 'இவனை உபதேச மழையிலே ரொம்ப நனைய வைத்துவிட்டோமோ?'.



"அதில்ல, கோவிலுக்குப் போயிட்டு ப்ரீத்து இன்னேரம் வந்திருப்பா'' என்றான் சற்றே சங்கோஜத்துடன்.

'ப்ரீத்து'!.... ஸ்ரீராம் திருப்தியுடன் கையசைத்து வழியனுப்பினார்.

**- ஜி.எஸ்.எஸ்.**

ஜோக்ஸ் : **குல்லூ**

அட்டையில் : **மதுரம், ஷிவா**

படம் : **ஸ்ரீஹரி**

